தூரோத பல்லவான், அஸ்மின் கும்பே பிரக்ஷிபாமி, ஸர்வ கர்ம ஸுசோபனாத் இதிபஞ்சபல்வான் தத்தவக்ச நிக்ஷிப்ய, மேல்சொன்ன மரப்பட்டைகளையும் பஞ்சபல்வங்களையும் அந்த கலசத்தில் போடவேண்டியது. கஜா, அஸ்வ, ரத வல்மீக, ஸங்கம, ஹ்ரத, கோகுலாத், மிருதமானீய, கும்பேஸ் மின். ப்ரக்ஷிபாமிச. சத்வராத், (யானை, குதிரை, ரதம், புத்து, பசு, வீதிசந்திப்பு, குளம், கோபுரம இந்த எட்டு விதமான இடங்களிலுள்ள மண் கொண்டுவந்து, அந்த கல சத்தில் ஒரு துளியாவது போடவேண்டியது.) சுலோகம்॥. ப்பலம் மனோஹரம்ஸ்வாது, முனிதேவப்பிரியம்ஸதா, அஸ் மின் கும்பே ப்ரக்ஷிபாமி, ஸர்வதா மங்களப்ரதம். (இப்ப டிக்கு ப்பலம், பொன், வெள்ளி, நல்லமுத்து, பவளம் இவை பஞ்சரத்ன மெனப்படும்.) இதை கலசத்திலே போடவும். இமானி பஞ்சரத்னானி கலசேப்ரக்ஷிபாம்யஹம். சுலோ கம்॥ ஹிரண்யகர்பகர்பஸ்தம் ஹேமபீஜம் விப்பாவஸோ, அனந்த புண்ணியப்பலதம், அதஃஸ்சாந்திம் ப்ரயச்சமே (இதி ஹிரண்யம் நிக்ஷிப்ய) (இந்த மந்திரத்தை சொல்லி பொன், வெள்ளி நாணயம் கலசத்தில்போடவும்.)

ரக்ஷத்தௌதேந சுப்ரேண ஸதசேன ஹதேநச, ஸம் வேஷ்டயாமி கலசம், நூதநேந ஸுவாஸஸா (இதிவாஸஸா ஸம் வேஷ்டியா) கலசத்திற்கு வஸ்திரமாவது நூலாவது சுத்த வேண்டியது. சுலோகம்॥ பூர்ணபாத்ரம் தாமபரமயம், சாலீ தண்டுல பூரிதம், பிரதானதேவ பூஜார்த்தம, ந்யஸாமி கல சோபரி. இதிபூர்ணபாத்ரம் நித்தாய தேவதாநாவாஹயேத். ததஃ கணேசாதீனாம், ஸூர்யாதிநவக்கிரஹானாஞ்ச, தத்தன் மந்த்ரைஃ, ஆவாஹனம் நிருத்வா, பூஜாம் குர்யாத்(வேதமந்த் ரேணவா) அதவா (புராணோக்த மந்த்ரேணவா குர்யாத்) கணேசனாத்வா இதி கணேசமாவாஹயாமி. கௌரிம்மாபேநி

கௌரீமாவாஹயாமி. ஓம் தத்வாயாமி இதி பிரம்ஹாணமா வாஹயாமி வருணமாவாஹயாமி. கணபதி, துர்க்காம், க்ஷேத்திரபாலகம் வாஸ்தோஷ்பதிஞ்ச, ஆவாஹ்ய. இந்திராத்யஷ்ட திக்பாலகதேவதாம், தத்தன் மந்திரைர்வா அக்ஷதபுஞ்ஜேஷ் வாவாஹ்ய. ஸூர்யாதி நவக்கிரஹாணுமாவாஹயேத். வேத மந்த்ரேணவா அதவா புராணோக்த மந்த்ரேணவா ஆவாஹ்யா ஆவாஹிதா ஸர்வாதேவதாஃ ஸுப்ரதிஷ்டாஃ ஸந்து. (இதி ப்ரதிஷ்டாப்ய) கணேசாத்யாவாஹித தேவதாப்யோநமஃ தியாயாமி இத்யாதி ஷோடசோபசார பூஜாம் குர்யாத், அதசத்யநாராயண பூஜா. (பிறகு சத்தியநாராயண பூஜை நடத்தவேண்டியது.) ப்ராணப் பிரதிஷ்டையுடன் நடத்த, தியான சுலோகம். சாந்தாகாரம் ப்புஜகசயனம் பத்மநாபம்ஸுரேசம், விஸ்வாகாரம் ககனஸதுர்சம், மேகவர்ணம் சுபாங்கம், லக்ஷ்மீகாந்தம் கமலநயனம், யோகிஹிருத தியானகம்மியம், வந்தேவிஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைகநாதம். சுலோகம்|| தியாயேத்ஸத்தியம் குணாதீதம் குணத்ரய ஸமன்விதம், லோகநாதம் திரிலோகேசம் கௌஸ்துப்பாபரணம் ஹரிம், நீலவர்ணம் பீதவாஸஃ ஸ்ரீவத்ஸ பதப்பூஷிதம், கோவிந்தம்கோகுலாநந்தம் ப்ரம்ஹாத்தியைரபிபூஜிதம். வேத மந்திரேணவா தியானம், இதிதியானம். ஆகசசபகவன் தேவ, ஸதாநேசாதர ஸ்திரோப்பவ, யாவத்பூஜாம் கரிஷ்யேஹம் தாவத்வம் ஸன்னித்தௌபவ. சத்தியநாராயண ஸ்வாமிநே நமஃ ஆவாஹனம்ஸமர்ப்பயாமி. நாநாரத்ன ஸமாயுக்தம் கார்த்த ஸ்வரவிபூஷிதம் ஆஸனம் தேவதேவேச பிரீத்தியர்த்தம் பிரதி கிருஹ்ஹியதாம். ஆஸனம் ஸமர்ப்பயாமி. நாராயண நமஸ்தேஸ்து நரகார்னவதாரக, பாத்தியம் கிருஹாணதேவேச மம சௌக்கியம் விவர்த்தய. பாத்தியம் ஸபர்ப்பயாமி. வ்யக்தாவ்யக்தஸ்வரூபாய ஹ்ருஷீக பதயேநமஃ, மயாநிவேதி

தோ ப்பக்தியா அர்க்கோயம் பிரதி கிருஹ்யதாம் அர்க்கியம் ஸமர்ப்பயாமி. மந்தாகின்யாஸ்து யத்வாரி, ஸர்வபாப ஹரம் சுபம் ததிதம் கல்பிதம், தேவ, ஸம்யகாசம்யதாம் த்வயா. ஆசமநீயம் ஸமர்ப்பயாமி. கங்காச யமுனைசைவ கோதாவரி ஸரஸ்வதி, நர்மதாஸிந்து காவேரி, ஸ்நாநம்குரு மஹாப் ரப்போ. ஸ்நாநம் ஸமர்ப்பயாமி. ஸுரபேஸ்து ஸமுத் பன்னம் தேவர்ஷி பித்ருத்ருப்திதம், மயாதத்தம்பயோ தேவ ஸ்நாநார்த்தம ப்ரதிகிருஹ்யதாம். க்ஷீரேண ஸ்நப யாமி. தத்னைசைவ மஹாதேவ ஸ்நாபனம க்ரியதேமயா கிருஹாணத்வம் ஸுராதிச பரஸன்னோமாம் ப்பவாவ்யய. ததனஸ்தபயாமி. ஸர்பிஷாச ஜகன்னாத ஸ்நாபனம் க்ரிய தேதுல, கருஹாண ஸ்ரார்த்தயாணந்த, தவப்ரீத்யை மனோ ஹரம். கருதேன ஸ்நபயாமி. இதம்மது மயாதத்தம் தவதுஷ்டியர்த்தமேவச, ஸ்நாதும் க்ருஹாணதேவேச, ததஃ சாந்திம் ப்ரயஸ்சமே. மதுநாஸ்நபயாமி. ஸீதயாச ஸுரஸ் ரேஷ்ட ஸ்நாபனம க்ரியதேத்வயி, தஸ்மாத்ப்பக்தபராத்தீன், ப்ரஸன்னோபவ ஸர்வதா. சர்க்கரயாஸ்பயாமி. இதி பஞ்சாமி ருத ஸ்நாநம் ஸமர்ப்பயாமி. கந்தோதகேனதேவேச குசபுஷ்ப பலோதகை:, ரத்னம்புநாச சுத்தேன ஸ்நாபயாமி ப்ருதக் ப்ருதகு.சந்தனோதகேண ஸ்நபயாமி. அனந்தஸ்ஸர்வகாமானும் அப்ப தீஸ்வர சௌக்கியத, மதுபார்க்கம் கிருஹாணேதம் மயாதத்த மத்ரோக்ஷஜ. மதுபர்க்க ஸ்நாநம் ஸமர்ப்பயாமி. தைலம் புஷ்பஸுகந்தாட்டியம் பரமப்ரமரநாதிதம், விலேப யாமி ஸர்வாங்கே ஸுவர்ன சஷகஸ்திதம். தைலாப்பியஞ் ஜனஸ்நானம் ஸமர்ப்பயாமி. உத்வர்த்தனம் தவாங்கேஸ்மின் லேபயாமி ஸுப்பக்திதஃ, காஸ்மீரா கருகறபூர மிருகநாபி விநிர்மிதம், உண்மர்தனம், ஸ்நாநார்த்தம் ஜலமாநீதம், சீத முஞ்ஸம் யதகாருசி. ஸுகந்திதம் ஸர்வநதி தீர்த்தேப்யஃ

பிரதிகிருஹ்யதாம். மங்களஸ்நாநம் அல்லது மாங்கலிகஸ்நாநம் ஸமர்ப்பயாமி. இவ்விடத்தில் ருத்திராதி வேத புருஷ சூக்தங்களாலும் ஸ்வாமிக்கு அபிஷேகம் செய்யலாம். வேத ஸுக்தஸமாயுக்தே எக்ஞநாமஸமன்விதே ஸர்வவர்ணப்ரதே தேவ, வாஸஸீப்ரதி கிருஹ்யதாம். சத்தியநாராயண ஸ்வாமிநேநம: வஸ்த்ரம் ஸமர்ப்பயாமி. பிரம்ஹ விஷ்ணு மஹேச ைஸ்ச, நிர்மிதம் பிரம்ஹஸுத்ரகம், எக்ஞோபவீத தானேன ப்ரீயதாம் கமலாபதி:. சத்தியநாராயணஸ்வாமிநேநம: எக்ஞோபவீதம் ஸமர்ப்பயாமி. ஸ்ரீ கண்டம் சந்தனம் திவ்வியம், கந்தாட்டியம் ஸுமனோஹரம், விலேபனம்ஸுரஸ்ரேஷ்டம், ப்ரீத்தியர்த்தம் பிரதி கிருஹ்யதாம். ஸ்ரீ சத்தியநாராயண ஸ்வாமிநேநம: ஸ்ரீகந்தம் ஸமர்ப்பயாமி. சுலோகம்|| கஸ்தூரீ பாத்யாஸ்ச யேகந்த்தா:, ப்ரோதார்த்தம்தே மயாஹ்ருதா:, அநேக கந்தஸம்யுக்தா:, ப்ரீத்தியர்த்தம் ப்ரதி கிருஹ்ஹிய தாம். சத்தியநாராயண ஸ்வாமிநே நம: இதி பரிமள சௌப் பாக்கிய த்ரவ்யாணி ஸமர்ப்பயாமி. அலங்காரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி. சுலோகம். மல்லிகாதி ஸுகந்தீனி மாலத்தியாதீனி வைப்ரபோ, மயாஹ்ருதானி பூஜார்த்தம் புஷ்பாணி ப்ரதி கிருஹ்யதாம். ஸ்ரீ ஸத்திய..நம: புஷ்பாணி பூஜயாமி. இவ்விடத்தில் துளஸீ முதலிய புஷ்பங்களால் கிருஷ்ணஷ்டோத்திரம் விஷ்ணு ஸஹஸ்ரநாமம் பூஜை செய்யலாம்.

வனமாலாம் ஸுகந்தாட்டியாம நாநாபுஷ்பை ஸ்ஸமன்விதாம் பூஜார்த்தம் ஸாதிதாம தேவ, ப்ரீத்தியர்த்தம் பிரதி கிருஹ்யதாம். ஸ்ரீ சத்திநாராயண....நம: புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி. வனஸ்பதி ரஸோத்பூதோ கந்தாட்டியே கந்தமுத்தம: ஆக்ரேய: ஸர்வதேவானாம், தூபோயம் ப்ரதி க்ருஹ்யதாம் ஸ்ரீ சத்தியநா....நம: தூபமாக்ராபயாமி.

ஸாஜ்யம் த்ரிவர்த்தி ஸம்யுக்தம் வன்ஹினிதியோதிதம்மயா, திருஹாண மங்களம்தீபம், த்ரைலோக்யம் திமிராபஹ, ப்பக்தியாதீபம் ப்ரயசசாமி தேவாய பரமாத்மனே த்ராஹிமாம் நரகாத்கோராத் திவ்ய ஜ்ஜோதிர் நமோஸ்துதே. ஸ்ரீ சத்தியநாராயண ஸ்வாமிநேநம: ஏகஹார்த்தி தீபம் தர்சயாமி. தூப தீபானந்தரம ஆசமநீயம் ஸ....மி. (சந்தர்மா இதி வேதமந்திர நைவேத்யம்) க்கிருதபக்வம் ஹவிஷ்யான்னம் பாயஸஞ்ச, ஸசர்க்கரம், நாநாவிதஞ்ச நைவேத்தியம் விஷ்ணோமே பிரதி க்ருஹ்யதாம். ஸத்தியநாராயண ஸ்வாமி நேநம: மஹா நைவேத்தியம் நிவேதயாமி. ஸர்வபாப ஹரம் திவ்வியம் காங்கேயம் நிர்மலம் ஜலம், மயாஹ்யாசமனம்தத்தம் க்ருஹ்யதாம் புருஷோத்தம. சததியநா....நம: சுத்தாசமனம் ஸ...மி. நாரிகேளம், மாதுலங்கம் கபித்தம் கதளிப்பலம் கூஸ்மாண்டம் கர்கடீபுக்தம் கிருஹ்பதாம் அகிலார்த்ததஇதம் ப்பலம் மயாதேவ ஸ்தாபிதம் புரதஸ்தவ தேனமே ஸப்பலாவாப்திர்ப்பவே தஜன்மனிஜன்மனி. இதிப்பலானி ஸமர்ப்பயாமி. ஜாதி லவங்க கர்பூரம் தாம்பூலம் ஸ—பூஜிதம் ப்பிரித்தியா க்ருஹாண தேவேச, மமசௌக்கியய விவர்தய. ஸ்ரீஸத்யநாராயண ஸ்வாமிநே நம: தாம்பூலம் ஸமர்ப்பயாமி. சதுர்வர்த்தி ஸமாயுக்தம் கருதேநச ஸ—பூரிதம், நீராஜநேந ஸந்துஷ்டோ ப்பவத்யேவ ஜகத்பதி:. க்ருதவர்த்தி தீபம் ஸமர்ப்பயாமி. கர்பூர தீபம் ஸ—மஞ்ஜோஹரம் பிரப்போ, ததாமிதே தேவவரப்பிரஸீதப்போ, பாபாந்தகாரம் த்வரிதம் நிவாரய, ப்ரக்ஞானதீபம் மனஸிப்ரதீபய. ஸ்ரீ ஸத்திய நாராயணஸ்வாமிநேநம: கர்ப்பூரார்த்தி தீபம் தர்சயாமி. நமோஸ்த்வ நந்தாய ஸஹஸ்ர மூர்த்தயே, ஸஹஸ்ரபாதாக்ஷி சிரோருபாஹவே ஸஹஸ்ரநாம்நே புருஷாய சாஸ்வதே ஸஹஸ்ர கோடி யுகத்தாரிணே நம: ஸ்ரீ ஸத்தியநாராயணஸ்வாமிநே

நம: தியான பூர்வக பிரதக்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி. கல்ஹார நீலகமலோத்பல பாரிஜாத புன்னாகைகை: கதளிசம்பக பாடலைஸ்ச, பில்வப்ரவாள துளஸீ சதபத்ரஜாதி புஷ்பை ஸமஸ்த குஸுமாஞ்ஜலி மர்பயாமி. இதி அன்னியஸ்ச வேத மந்த்ரைர், புஷ்பாஞ்ஜலிம் ஸமர்ப்பயேத். தத: கீத வாத்திய நிருத்த ச்சத்ரசாமராதி ராஜோபசாராதீன் அக்ஷதான் ஸமர்பயாமி. இதி தேவம் பிரார்த்ய. யன்மயாப்பக்தியுக்தேன, பத்ரம புஷ்பம் ப்பலம் ஜலம், நிவேதிதஞ்ச நைவேத்தியம். தத்கிருஹாணானுகம்பயா. மந்தரஹீனம் க்ரியாஹீனம் பக்தி ஹீனம் ஜநார்த்தன, அனயா பூஜயாச நைவேத்தியேநச, பகவான் ஸர்வதே வாத்மக:, ஸ்ரீ ஸத்தியநாராயண தேவதா ஸ்ஸுப்பிரீத ஸுப்பிரஸன்னோ வரதோபவது ந்யூனாதிரிக்தம் ஸர்வம் ஸகுணமஸ்து. சு|| அமோகம் புண்டரீகாக்ஷம் ந்ருஸிம்ஹம் தைத்தியஸூதனம் ஹ்ருஷீகேசம் ஜகன்னாதம் வாகீசம் வரதாயகம். குணத்திரயம் குணாதீதம் கோவிந்தம் கருடத்துவஜம், ஜநார்த்தனம் ஜநாதீதம் ஜானகீ வல்லபம் ஹரிம், ப்ரணமாமி ஸதாபக்தியா நாராயண மத: பரம், துர்க்கமே விஷமே க்கோரே சத்ருபி: பரிபீடிதே, நிஸ்தாரயஸ்வ ஸர்வேஷு தத்தாநிஷ்டப்பயேஷுச, ஸாமான்யே தானிஸங்கீர்த்யா ஈப்ஸிதம் ப்பலமாபனுயாத், ஸத்திய நாராயணம் தேவம் வந்தேஹம்காமதம் ப்ரப்பும், லீலயாவிதததம் விஸ்வம் யேனதஸ்மை நமோநம:. இதிப்பகவந்தம் ப்ரார்தியா. எஸ்ய ஸ்மிருத்தியாச..................ஸத்திய நாராயண: ஸ்ஸுப்பிரீத: ஸுப்பிரஸன்னே: வரதோப்பவது.

இதி ஸத்தியநாராயண பூஜாவிதானம் ஸம்பூர்ணம்.

# ஸ்ரீ ஸத்தியநாராயண விரத கதை.

## முதல் அத்தியாயம்.

---

இப்பெரிய பூமண்டலத்தினல் சூழப்பட்ட நவக்கண்டாத்மகமான பூமியின் மத்தியிலுள்ள இப்பாரதகண்டத்தில் நைமிசாரண்ணிய க்ஷேத்திரத்தில் மிகமேன்மையான சத்ரயாகம் செய்யும் ஸமயத்தில் அவ்விடத்தில் சௌனகாதி மஹரிஷிகள் அநேக புராணவியாக்கியானம் செய்யக்கூடியவரும், நற்குணங்களால் நிறைந்தவரும் வெகு திறமைசாலி என்று முனிக்கூட்டங்களால் புகழப் பெற்றவரும், அதிமேதாவியுமாகிய, சூதமாமுனிவரைப்பார்த்து: ஓ! முனி சிரேஷ்டரே! மனிதனல் இஹலோக ஸம்பந்தமான மண்ணாசை பெண்ணாசை பொருளாசை பசுதாராபுத்ராதி ப்பலங்களையும் பரலோகப் பலன்களையும் கோரப்படுத்துகிறதல்லவா? இவையெலாம் விரதங்களினலேயா சாந்திராயணுதி விசேஷ வ்ரத தபசுகளாலேயா பிராம்ஹணுளுக்குச் செய்யும் உபசாரங்களினலேயா மனிதர் மேறசொன்ன இஹபரப்பலங்கள் அடைவார்கள் என அவைகளைக் கேட்க விரும்புகிறோம். கூடுமானல் தயவுசெய்து சொல்லவேண்டுமென்று கோரி வணக்கத்துடன் கேட்கவே சூதபுராணிகர் தன் முக்கிய குருவாகிய வியாசரை தியானம் செய்து முனிவர்களைப்பார்த்து சொல்லத்தொடங்கினர். "ஓ! முனிசிரேஷ்டர்களே, ஐயா! தாங்கள் கேட்ட வினவின்படி தேவ இருஷி சிரேஷ்டராயும்

பிரம்ஹமானஸ புத்திரராகிய நாரதர் ஸ்ரீமன் நாராயணனை நினைத்து பிரஸன்னம் செய்தபோது ஸாக்ஷாத் பகவானாகிய ஹிருஷீகேசர் நாரதனைப் பார்த்து சொன்னபடியே எனக்குத் தெரிந்தமட்டும்பெரியோர்களால் கேழ்விப்பட்டவளவும் உங்களுக்கு விவரமாகச் சொல்லுகிறேன்: தாங்கள் மிக பக்தியுடனும் ஊக்கத்துடனும் தியான சிரேஷ்டர்களாய் கேளுங்கள்

ஒரு காலத்தில் தேவ இருஷியான நாரதர் உலக க்ஷேமத்தைக்கருதி உலகத்தாருக்கு அனுக்கிரகம் செய்ய உத்தேசித்து, திரிலோகங்களைஸஞ்சாரம் செய்துக்கொண்டு பிறகு, பூலோகத்தின் கண் பிரவேசித்து ஜனங்களை நோக்கி மிக பரிதாபத்தோடு, ஐயோ! பலவிதமான யோனிகளில் பிறந்து அநேகவிதமான துன்பங்களை அனுபவித்துக்கொண்டு ஜென்மாந்திர பாபசேஷத்தால் வியஸனப்படுகிறதும் தத் பலன்களை அனுபவிக்கிற மனிதர்களை எந்த உபாயத்தால் ஜனன மரணுதிப் பிணிகளினின்று விலகப்படுவார்களென்கிற வியஸனத்தோடு வைகுந்தத்திற்குச்சென்று, அவ்விடத்தில் சாந்தாகாரனும், சதுர்புஜனும், சங்கு சக்கிர கதா பத்மமும், வனமாலாதிகளால் அலங்கரிக்கப்பட்டு திவ்விய விக்கிரஹமாய் பிரகாசிக்கின்ற அப்பரம புருஷனைப பார்த்து பெரிய புதையலைக்கண்ட ஏழையைப்போல மிக ஆனந்தப் பரவசமாய் இவ்வண்ணம் ஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினார். ஓ! மஹானுபாவரே, திரிமூர்த்திஸ்வரூபரே, திரிகுணாதீதரே, நிரஞ்ஜனரே, நிர்குணரே, ஸகுணரே, நிர்விகல்பரே, ஆதிமத்தியாந்த ரஹிதரே, அச்சுதரே, அனந்தகல்யாணங்களுக்கு ஆதாரப்பூதரே, சகலகலயாண குணங்களால் நிறைந்தவரே, ஸத்குண பரிபூரணரே, ஸ்ரீமன் நாராயணரே, ஆர்த்திராணபாராயணரே என்று விசேஷ ஸ்தோத்ரம் செய்துக்

கொண்டிருந்த நாரதரை நோக்கி: இப்படி பலவிதமாக அவருடைய வேண்டுதல்களை பக்த பராதீனரான பகவான்கேட்டு சந்தோஷித்து, பக்தர்களுடைய பாபவிமோசனம் செய்யும்படியான ஸர்வ சக்தியுள்ள ஸ்ரீமன் நாராயணன் மிக களிப்போடு நாரதரைக்கண்டு "ஓ நாரதா, நீ இவ்விடம் வீணு காலம்பண்ணிக்கொண்டு, வீணய் வரமாட்டாயல்லவா?" என்று, பகவான் நீ இவ்விடம் வந்தகாரணமென்ன நன்றாய் முடிவாகசொல்லவேண்டுமென அப்போது பகவானைநோக்கி நாரதர் சொல்லுகிறார்: ஹேஸ்வாமின் மண்ணுலகில் மானிடர்கள் பலவிதமான துன்பங்களையும், வியஸனத்தையும் அனுபவித்துக்கொண்டு அநேக ஜென்மங்கள் எடுத்து செய்துவந்த பாபபலன்களால் வெகு துன்பங்களடைகிறார்கள். அப்பேர்க்கொத்த பாதைகள் அவர்களுக்கெப்படி விலகுமோ அதற்குத்தகுந்த சுலபோபாயத்தை எனக்குபதேசித்தால் அதன் மூலமாய் யான் பூவுலகம் சென்று தங்களுத்திரவின்படி யான் ஆலோசித்து அவர்களுடைய பாபம் விலகசெய்ய முயற்சி செய்கிறேன் என்று தெரிவித்த நாரதரைப்பார்த்து, பகவான் சொல்லத்தொடங்கினார்: "ஓ நாரதா, கெட்ட குணங்களினின்று நீக்கக்கூடிய யோசனையுண்டாவது சாதுக்களுக்கு இயற்கையல்லவோ. ஆகையால் துன்பம் படும்படியானவர்களின் வியஸனத்தை போக்குவதும், இஹபரசுகங்களுண்டாகக்கூடியதுமான சுலபோபாயத்தை சொல்லுகிறேன்கேள். சுவர்க்கமர்த்திய பாதாளம்முதலான ஈரேழு லோகங்களிலும் தர்க்காலம் செய்துகொண்டிருக்கும் விரதங்களுக்குள் மிக உத்தமமான விரதமொன்றுண்டு. அதை ஸத்திய நாராயண விரதமெனப்படும். அதை எனக்கு உன்னிடத்திலுண்டாயிருக்கும் பிரேமாதிசயத்தால் உனக்குபதேசிக்கிறேன். இதை உலகத்தில் பரவிப் பிரகாசிக்கும்படி

யாகச்செய்ய எண்ணியிருக்கிறேன். அவ்விரதத்தை விதிப்படி அனுஷ்டித்து செய்யுமிடத்து பல துன்பங்களையும் போக்கடித்து சுகங்களை அனுபவித்து முடிவில் மோக்ஷ ஸாம்பிராஜ்ஜியத்தை அடைவார்க"ளென்று சொல்லும்படியானவாக்கைக்கேட்டு ஆனந்தமடைந்து நாரதர், ஸ்வாமி இந்த விரதம் எப்போக்கொத்தது முன் யாரால் செய்யப்பட்டது, அதின் விதாயகம்மென்னவென்று விவரமாய் எடுத்துரைக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக் கேழ்க்க, ஸ்ரீமன் நாராயணன் நாரதரைப்பார்த்து, ஓ முனீந்திரா, என்னால் சொல்லப்பட்ட ஸ்ரீஸத்தியநாராண விரதமானது வியஸனத்தை போக்குவதும் ஸ ுகமதிகப்படுத்துவதும், புத்திரவிர்த்தியும் தனதானிய ஸம்பத்தும் ஸகலகாரிய ஜெயமும் உண்டாக்குமாகையால் இந்த விரதத்தின் பலன் இன்னதென்று அறிவதற்கு ஓராறுமாதத்தில் ஒரு புண்ணிய க்ஷேத்திரத்தில் மாரிடன் பக்தியும் ஊக்கமும் விசேஷித்தவனாய பிரதோஷகாலத்தில் இவ்விரதம் அனுஷ்டித்துப்பார்த்து அந்த ஸமயத்தில் பிராம்ஹணர். மித்ரர்கள் முதலிய பந்து ஜனங்களால் சூழப்பட்டவனாய் வாழைப்பழம், நெய், பால, கோதுமைமா, சர்க்கரை, வெல்லம், தேன் இவைகளை ஒன்றுசேர்த்து கலந்து இப்பஞ்சாமிருதத்தை சுவாமிக்கு நைவேத்தியம் பக்தியோடு செயது பிராம்ஹணரை தாம்பூலாதிகளால திர்ப்திப்படுததின பிறகு குடும்ப ஸகிதமாய் புத்திரமித்ராதிகளுடன் ஸத்திய நாராயண விரத கதையைக்கேட்டு பிறகு பிராம்ஹணளுக்கு அன்னமளித்து அதில் மீதியான நிவேதிதான்னத்தில் பந்து மித்திரர்களுடன் கால்பங்கு புசித்து ஸத்தியநாராயணனை முன்னிட்டுக்கொண்டு பக்தியோடு மிருதங்காதி வாத்தியங்களுடன் பஜனைசெய்துக்கொண்டு தங்கள் வீட்டிற்குப்போய் சேரவேண்டியது. இப்படிச் செய்தால் மனிதர்களின் கோரிக்

கைகள் பூர்த்தியாகும். தவிர கலியுகத்தில அதிகமாக கோரிக்கைகளின் பலன்களை ஈடேற்றும்படியான ஸுலபமான உபாயமிதுவே என்று பகவான் பாகவத சிகாமணியாகிய நாரதமாமுனிக்கு ஸத்திய நாராயண விரதமே முக்கியமாய் உபதேசித்தாரென்றும் ஸூதர் சௌனகாதிமஹரிஷிகளுக்கு அறிவித்தார்."

## இரண்டாவது அத்தியாயம்.

ஓ முனிவர்களே! முன்னொருகாலத்தில் காசிபட்டணத்தில் ஒரு ஏழை பிராமணன் மிக தரித்திரத்தால் பிரதிதினமும் பசி தாகம் இவைகளால் மிக வருந்திக்கொண்டு அதிக வருத்தத்துடன் சுத்திக்கொண்டிருந்தபோது பகவான் அவனைப் பார்த்து மிகக் கருணையோடு புருஷோத்தமன் கிருபாஸமுத்திரனுகையால் கபட விருத்தப் பிராம்ஹணஸ்வரூபம் அடைந்து அவருக்கு பிரஸன்னராய் ஓ பிராம்ஹணோத்தமா நீ யார்? எங்கிருந்து எங்கே போகிறாய், உன் முகமாறுதலைப் பார்த்தால் நீ மிக வறுமையிலிருப்பவனைப் போல தோன்றுகிறது. உன் வரலாரை எனக்கு விபரமாய் தெரியச்சொல்லுமென, அப்போது அந்த பிராம்ஹணன் சொல்லத்தொடங்கினுன். ஓ ஸ்வாமி நான் பொறுக்கமுடியாத தரித்திரத்தால் மிகவறுமையடைந்து இவ்விதமாய் பிசைக்காக வீடு வீடாய்த் திரிந்தும் பிடி அரிசி கிடைப்பதும் மிக அரிதாயிருக்கிறது. ஆகையால் இப்படிக்கொத்த தரித்திரத்தினின்று நீக்கும் மோக்ஷகாரணமான காரியத்தை தாங்கள் எனக்கு கிருபை கூறவேண்டுமென்று அனேக விதமாய் வேண்டிக்கொள்ள, அந்த கபடப் பிராம்ஹணன் அந்த கிழப்

பிராம்ஹணனுக்கு சொல்லத்தொடங்கினார். ஓ ப்ராம்ஹணோத்தமா மிக வணக்கத்துடனும் பக்தியோடும் தியானம் செய்வதில் அதிக சிரத்தையோடு கூடினவனாய்க் கேள். ஸத்திய நாராயணனென்கிற பேருள்ள அம்மஹா விஷ்ணுவானவர் எல்லா கோரிக்கைகளையும் கொடுக்கக்கூடியவர் ஆனபடியால மனுஷ்யன் ஸத்தியநாராயண விரதம் முக்கியமாய் செய்யவேண்டியது. அவ்விரதம் இஹபரஸுகங்களையும் தேஹஸௌக்கியத்தையும் கீர்த்தியையும் தருமென்று அதைச் செய்யவேண்டிய முறையையும் தெரிவித்து இக்கபடவேஷதாரியாயும் பிராம்ஹணஸ்வரூபியுமான அந்த ஸத்தியநாராயணன் அந்தர்த்யானமடைந்தார். அப்போது அந்த ஏழைப் பிராம்ஹணன் லக்ஷ்மீபதியாகிய நாராயணனால் உபதேசிக்கப்பட்ட அவ்விரதத்தை தான் செய்ய நிச்சயித்துக்கொண்டு அந்த ராத்திரி முழுமையும் உறங்காமல் ஒரே நிலையான மனதோடு காலையிலெழுந்து அந்த விரதம் தடையின்றி நடக்கக்கூடிய முயற்சியுடன் அதற்குவேண்டிய திரவியம் ஸம்பாதிக்க பிரயத்தினப்பட்டு பகவானருளினால் அவருக்கு மிக திரவியம் கிடைத்து உடனே குடும்ப ஸகிதமாய் ஸத்தியநாராயண விரதம் பூர்ணமாய் செய்யத்தொடங்கினார். அந்த விரதம் செய்து முடிந்த பிறகு அம்மகிமையால வறுமையென்கிற துக்கம் விலகிற்று. அதி செல்வவானானார். அதுமுதல் அவர் ஒவ்வொருமாதமும் விரதம்செய்து அதினால் ஸகலபாபவிமுக்தனாய் வெகு துர்லபமான மோக்ஷபதவியும் வெகு ஸ்வல்பமாய் அடைந்தார். ஆகையால் பூமியில் இவ்விரதம் எந்த மானிடனால் செய்யப்படுமோ அவன் துக்கங்களினின்று நீங்கி ஸுகங்களடைவானென்று தேவசிரேஷ்டனான ஆதிதேவன் தேவ இருஷியான நாரதருக்கு உபதேசித்தார். இப்படிப் பகவானால்சொல்லப்பட்டபுண்ணிய

கதையை ஹே முனிவர்களே உங்களுக்கு நான் சொன்னேன் என சௌனகாதிமாமுனிவர்கள் ஸூதரைநோக்கி ஓ புராணி கோத்தமரே! முன் தரித்திரத்தால் வருந்தின அப்பிராம்ஹ ணன் பகவான் சொன்னபடி கேட்டு சுகமடைந்தபடி பூவுல கில் இன்னம் யார் இவ்விரதம் செய்தாரென்று ஸூதரை மறுபடியும் கேழ்க்கவே அவர் மிக சந்தோஷத்தோடு சொல் லத தொடங்கினர். ஓ முனிவர்களே கேளுங்கள் முன்பு இவ்விரதம் பந்துமித்திரர்களுடன் சக்திக்குதகுந்தபடி செய்த அந்த பிராம்ஹணன் செய்தகாலத்தில கட்டை விற்கிறவன் பிராம்ஹணன் வீட்டு திண்ணைமீது தன் கட்டை சுமையை இறக்கி மிக தாகத்தோடு அவ்வீட்டிற்குள் சென்று அப்பிரா ம்ஹணனைப் பார்த்து நமஸ்காரம் செய்து ஸ்வாமி உங்களால நடத்தப்படுகிற விரதமென்ன, அதை அனுசரித்து செய்கிற வர்களுக்குண்டாகும பலனென்ன? எனக்கு கிருபைகூர்ந்து சொல்லவேண்டுமென்று கேழ்க்க, அப்போது கட்டைவிற் கிறவனுக்கு அப்பிராம்ஹணன் சொல்லஆரம்பித்தார். ஐயா, இந்த விரதத்திற்கு ஸத்தியநாராயண விரதமென்று பெரி யோர்கள் பேர் சொல்லுகிறார்கள். இதை அனுசரித்து செய்கிறவர்களுக்கு அவரவ கோரிக்கைகள் எல்லாம நிறை வேறு மென்பதற்கு சந்தேகமில்லை என்று ஒரு திருஷ் டாந்தம் உண்டு. முன்னே நான் மிக தரித்திரத்தை அனுப வித்து பரிதபித்துக்கொண்டிருந்தேன். நான் உஞ்சாவிருத் திற்கு போகும்காலத்தில் தறசெயலாய் ஒரு விருத்தாப்பிய மான ப்ராம்ஹணன் என்னைக் கண்டு என் துர்தெசை அறிந் து அதை போக்கும்படியான இவ்விரதோபதேசம் எனக்கு உபதேசித்தார். அந்த உபதேசத்தை நான் அனுஷ்டித்து மிக்க பலனடைந்தேன் என, அதைக் கேட்ட கட்டைக்கா ரன் மிக சந்தோஷித்து, யான் சொன்னபடி தானும் செய்ய

நிச்சயித்து போஜனம் செய்து தாகம் தீர்த்துக்கொண்டு தன்னூருக்குச் சென்று தனக்கு ஜீவனாதாரமான கட்டை வியாபாரத்தால் அதிக திரவியம் ஸம்பாதித்து இந்த ஸத்தியநாராயண விரதத்தை குடும்ப சகிதமாய் பந்துக்களுடன் ஆரம்பித்து செய்ய, அம்மகத்துவத்தால் அஷ்டைஸ்வரியம் அனுபவித்துக்கொண்டு சுகமாய் வாழ்ந்து அந்தியத்தில் விஷ்ணு லோகமடைந்தார்.

---

## மூன்றாவது அத்தியாயம்.

---

ஓ முனிவர்களே! இவைகளுக்கொரு இதிஹாஸ கதையுண்டு சொல்லுகிறேன் கேளுங்கள். முன்னே ஜிதேந்திரியனும், ஸத்தியவானும் ஸாதுக்களை எப்போதும் பூஜிக்கிறவனுமான உல்கலமுகனென்கிறபேருள்ள இராஜ சிரேஷ்டர் ஒருவரிருந்தார். அவர் பிரதிதினமும் கோயிலுக்குசசென்று ப்ராம்ஹணர்களுக்கு மிகபக்தி வணக்கத்துடன் அவர்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றிக்கொண்டு மிக புத்திசாலியும் பதிவ்ரதையுமான தன் பாரியாளுடன் நதிக்கரையில் இச்சத்தியநாராயண விரதமாரம்பித்து செய்துக்கொண்டுவநதார். இப்படி விரதம செய்துக்கொண்டு வருகிற ஸமயத்தில, அவ்விடத்திற்கு ஸாதுவென்று ஒரு வைஸ்யன் வியாபாரத்தின் பொருட்டு மிகுந்த பணத்தோடு வந்து அந்நதிக்கரையில் கப்பலை நிறுத்தி இராஜனிடம் வந்து மிக வணக்கத்துடன் ஒரு கேள்விக் கேட்டான். ஓ இராஜனே! உலகத்தில் வெகு ஸாதாரணமாய் ஆசரிக்கப்படும் விரதங்களின் மகத்துவத்தை நீர் பெரியோர்களால் அறிந்தவராகையால் அவ்விரதங்களில் உத்தமமானதெதுவோ,அதை நான் கேழ்க்கவிரும்

புகிறேன் என்று பலவிதமாய் பிரார்த்தனை செய்ய, அந்த இராஜன் கிருபையோடு கூடின மனதுடையவனாய் அந்த கோமட்டியை நோக்கி சொல்லுகிறார்: ஓ ஸாதுவே இவ்வுலகில் செய்யப்படும் விரதங்களில் உத்தமமான விரதம் ஸத்தியநாராயண விரதமென்று பெரியோர்களால் சொல்லக்கேட்டு ஸந்தானம் கோரின யான் அனந்தகல்யாண குணங்களும், திவ்யமங்கள விக்கிரஹனும் எங்கும் நிறைந்தவனுமான விஷ்ணுமூர்த்தி பூசை என்னும் இவ்விரதத்தை ஸ்வகுடும்ப ஸமேதனாய் அனுஸரித்து செய்கிறேனென்று சொன்னார். பிறகு அந்த கோமட்டியானவன் மிக ஆவலுடன் ஓ பூபாலனே, தாங்கள் எந்த கோரிக்கையுடன் இவ்விரதம் செய்கிறீரோ, அதையே கோரி நானும் அனுஷ்டிக்க அபேக்ஷிக்கிறபடியால் எனக்குபதேசிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தபோது, நல்லதென்று அம் மஹாமந்திரராஜத்தை அந்த ஸாதுவுக்கு கிரமமாய் உபதேசித்தார். பிறகு அந்த வைசியகுல கிரேஷ்டனை ஸாதுவானவர் மிக ஆனந்தத்துடன் கூடினவராய் தன் ஸ்வதேசம் போய்ச் சேர்ந்து, தன் பாரியாளுக்கு இந்த ஸத்தியநாராயண விரதமறிவித்து சொல்லுகிறார்: ''ஓ பெண்மணீ! என் கோரிக்கைப்படி எனக்கு ஸந்தானம் உண்டானால்யான் அவ்விரததத்தை பூர்த்தியாய்செய்து முடிக்கிறேன்'' என்று ஸங்கல்பம் பண்ணிக்கொண்ட சில காலத்திறகுள் தன் குலஸதியான லீலாவதி கர்ப்பம் தரித்து பத்தாவது மாதத்தில் சந்திரனுக்கொப்பான முகத்தோடு கூடிய ஒரு கன்னிகா ரத்தினத்தை ஈன்றெடுத்தாள். இந்தச் சிறுமியாகிய பெண்ரத்தினமானது நாளடவில் விருத்தி சந்திரனைப்போல் வளர்ந்துகொண்டு களாவதி என்னும் பேருடன் வழங்கி வந்தாள். இப்படி சிலகாலம் கழிந்த பின் களாவதியின் தந்தையானவர் தன் குமாரத்திக்கு கலயா

ணம் செய்ய முயன்று தன் பந்து மித்ராளுடன் கூடி ஆலோசித்து தகுந்த பிள்ளையைத்தேடும்படியாய் தூதாளையனுப்ப, அவர்கள் காஞ்சீபுரம் சென்று, அப்பட்டணத்திலிருக்கும் ஒரு நல்ல ரூப யௌவனத்தால் கூடின வைசிய குமாரனை அழைத்துக்கொண்டு வந்தார்கள். அப்படி அழைத்து வந்த வைசிய குமாரனைக் கண்டு, மிக ஸந்தோஷத்தோடு அச் சிறுமியின் தாய் தந்தையர்கள் தங்கள் பந்துமித்ராளை வரவழைத்து நல்ல சுபமுகூர்த்தத்தில் அச சிறுவனுக்கு தன் பெண்ணைக் கொடுத்து விவாஹம் செய்தார்கள். ஆனால் தாங்கள் ஸங்கல்பம் செய்துக்கொண்டபடி அந்த விரதம் மாத்திரம் செய்யவில்லை. பிறகு ஸாதுவும் தன் மருமகனும் வியாபாரத்தின் பொருட்டு செந்திரகேதுவென்னும் இராஜனால் ஆண்டுவருகிற ரத்ன ஸாதுபுரமென்கிற பட்டணம் சென்று ஸமுத்திரக் கரையிலிறங்கி தானும் மருமகனும் வியாபாரம் செயதுக்கொண்டிருந்தார்கள். அநத ஸமயத்தில் ஸத்திய நாராயண விரதம்செய்ய மறந்த அந்த ஸாதுவைப் பார்தது மிக தீவிர கோபத்தோடு விளங்காநின்ற பகவானான சத்திய நாராயணன் இவன் மிக கடினமான கஷ்டத்தையும், துக்கத்தையும் அடையட்டுமென்று சாபமிட்டார். உடனே அந்த சாபத்துக்குத் தக்கபடியே ஒரு திருடன் வழக்கமாய் இராஜன் வீட்டு நகைகளை திருடிக்கொண்டு போய் வியாபாரம் செய்பவர்களுக்கு விக்கிரயம் செயதுகொண்டு வருவான். ஒருநாள் இராஜாவின் வீட்டிலுள்ள நகைகளை திருடிக்கொண்டுவரும் ஸமயத்தில் இராஜப்படைகள் கண்டு அவனைத் துரத்திக்கொண்டு பின் தொடர்ந்தோட ஓடி வருகிறவர்களைக்கண்டு பயத்தினால் ஸமுத்திரக் கரையில் வியாபாரம் செய்துக்கொண்டிருந்த அந்த இரண்டு கோமட்டிகள் தங்கள் சாமான்களை முன்னே போட்டுவிட்டு ஓடிப்போனார்கள்.

அப்படி ஓடிப்போன திருடர்களைத் தேடி எவ்விடத்தி லும் அகப்படாமையால் இந்த கோமட்டிகள் வசத்தில் அந்த நகைகள இருக்கிறதாய் ஜாடைதெரிந்து, அவர்களிடம் வந்து பார்த்து அவர்களிடத்திலிருந்த திரவியமே அத்தாக்ஷியாக எண்ணி அவர்களிரண்டுபேரையும் கட்டி இராஜனிடத்தில் கொண்டுவந்து: "ஓ இராஜேந்திரனே தங்களுடைய இராஜ கிருஹத்தில் திருடிக்கொண்டுபோனபொருள் இந்தத் திரு டர்களிடத்திலிருந்தது. இவர்களைப்பார்த்தால் பழைய திரு டரைப்போல்காண்கிறார்கள். ஆகையால், இவர்களுக்கு தங்க ளுடைய ஆக்ஞை எப்படியோ அதை தெரிவித்தால் நாங்கள் நடத்த சித்தமாயிருக்கிறோம்" என, அம்மாதிரியே, இராஜன் ஆக்ஞாபித்தார். அப்போது இராஜப்படாள் மிக கோபத் தோடு இவர்களுடைய கைகால்களுக்கு விலங்கிட்டு கைதிக ளாக்கி காராகிரஹத்தில் வைத்தார்கள். பிறகு, அவர்களிடத் திலிருந்த பணத்தை இராஜ பொக்கிஷத்திற்கு சேர்த்தார் கள். இப்படியிருக்க ஸாதுவென்னும் கோமட்டியின் பாரி யாள் லீலாவதியானவள் தன் குமாரத்தி களாவதியுடன் மிக சந்தோஷமாயிருக்கிறபோது திருடர்கள இவர்களுடைய வீட்டில் புகுந்து எல்லாப்பொருளையும் திருடிக்கொண்டு போனபடியால் உண்ண உணவிற்கும் உடுக்க உடைக்கும் கூட இல்லாமல் தரித்திரத்தால் ஒவ்வொரு வீட்டிற்கும் போய் யாசகம் செய்துக்கொண் டிருந்தார்கள். இப்படி இருக்க ஒரு நாள் களாவதி பொழுதுபோய் வீட்டிற்கு வந்தபோது தாயாரான லீலாவதி களாவதியைப்பார்த்து ஏன் நேரம் கழித்து வந்தாய் என, ஓரிடத்தில் சத்தியநாராயண வரதம் செய்துக்கொண்டிருக்க அவ்விரதம் செய்யும் விதம் பார்த் துக்கொண்டிருந்து அக்கதையையும் கேட்டுக்கொண்டிருந் தேன் என்று சொன்ன தன் குமாரத்தியின் வார்த்தைகளைக்

4

கேட்டு திடுக்கிட்டு, பெண்ணே! இந்த விரதத்தை ஸங்கல்பபடி செய்யாத காரணத்தினலல்லவோ நமக்கிப்பேர்க்கொத கஷ்டஙகள் நேர்ந்தது. அதற்குப் பரிஹாரமாக நாம் ஸத்திய நாராயண வ்ரதம் செய்வதற்கு முயற்சிசெய்வோம். அப்படி செய்தோமேயாகில நம்முடைய புருஷாள செளக்கியமாய் தனம் தேடி ஸம்பாதித்துக்கொண்டு, வீட்டுக்கு வருவார்கள். நமக்கும் எல்லாசுகமும் கிடைக்கும். நாமிழந்தபணமும் மறுபடியும் கிடைக்கும். ஆகையால் விரதம்செய்வதறகு திடசித்தத்தோடு இருக்கவேண்டுமென்று மனேநிடம் செய்துக கொண்டு தங்கள் பந்துஜனஙகளுடன் கூடி விரதம் செயதார்கள். அப்படி விரதம்செய்து முடிவில் ஸ்வாமி! என்னுடைய பர்த்தாவும் மருமகனும் கூடிய சீக்கிரத்தில் வீட்டுக்கு வரவேண்டுமென்று பிரார்த்தனை செய்ய தீனரக்ஷகனை நாராயணன் சந்திரகேது மஹாராஜனுடைய கினவில் பகவான தரிசனம் கொடுத்து: "ராஜனே, நீ சில நாளைக்குமுன்னே சிறையிலடைத்த ஸாதுவென்னும் கோமட்டியையும் அவன் மருமகனையும் விடுதலை செய்யவேண்டும். அவர்களிடத்திலிருந்து நீபெற்றுக்கொண்ட தனத்தையும் திருப்பிக்கொடுத்துவிடும். அப்படிக்கு கொடாவிடில் உன்செல்வம், புத்திரமித்திரகளத்ராதிகளுடன் நாசப்படுத்துவேன் என்று சொல்லி மறைந்துவிட்டார். உடனே இராஜன் விடியறகாலையிலெழுந்து ஸபைக்கு வந்து, தன்மந்திரிகளுக்கு தனக்கு நேர்ந்த கினவின் வரலாற்றை தெரிவித்து சிறைசசாலையில் வைத்திருக்கும்படியான இரண்டு கோமட்டிகளையும் விடுதலை செய்யவேண்டி உத்திரவளித்தார். உடனே இராஜன் கட்டளைப்படி இராஜபடார் அவர்களுடைய விலஙகுகளைக் கழட்டி, அவர்களை அரசன் முன்னே நிறுத்தினார்கள். பிறகு, வேந்தன் அவர்களுடைய தன்மை தனக்குத்தெரியாததால் தான் செய்த அப

ராதத்தை குறித்துத் தன்னை மன்னிக்கும்படியாய் அநேக விதமாய் மன்னிப்புக்கேட்டுக்கொண்டு விடுதலைசெய்து விட்டார். அப்போது அந்த கோமட்டிகள் இரண்டுபேரும் வெகு சந்தோஷமாய்க் கப்பலேற வரும்போது சமுத்திரக்கரையில் ஒரு சன்னியாசிவேடம்பூண்ட ஸத்தியநாராயணஸ்வாமி இவர்களுக்கு பிரத்தியக்ஷமாய்வந்து இசசாதுவைப்பார்த்து ஓய் இந்த கப்பலிலென்ன இருக்கிறது? என்றுகேட்க, அச்சாதுவான கோமட்டி கர்வத்தோடு இதிலென்ன இருந்தால் உனக்கென்ன, முத்திரை போடுகிறாயா கொடிகளால் கட்டின தட்டு முட்டு கூடைகள் யிருக்கிறதென்று சொன்னார். சன்னியாசி அதைக்கேட்டு அப்படியே ஆகட்டுமென்றுசொல்லி சமுத்திரக்கரையிலே இருந்தார். சன்னியாசி சொன்ன கொஞ்சநேரத்திலேயே இருவரும் கப்பலில் போய்ப்பார்த்த போது அங்கே பணத்திற்கு பதிலாக கொடிகளால் செய்த பாத்திரங்க ளிருக்கப்பார்த்து வருத்தப்படத் தொடங்கினர். மருமகன் பார்த்து இது நாம் சன்னியாசியை அவமதித்த தோஷந்தான். அவர் சத்தியநாராயணமூர்த்தியே தவிர ஸாதாரணமானவரல்ல; நாம் அவரைப் பழையபடி பிரார்த்தனை செய்தால் நம்முடைய பொருள் நமக்கு கிடைக்குமென்றுசொன்னபோது ஸாதுவும் ஸன்னியாசியிடம்சென்று தங்கள் தப்பிதத்தை மன்னிக்கும்படி கேட்டுக்கொண்டார். அவர் அவாளிடத்தில் கருணைகூர்ந்து மறுபடியும் தனம் கொடுத்து நீ இன்றைய முதல் ஸத்தியநாராயண விரதம் எடுத்து செய்வாயாகில் உனக்கு எல்லா ஸம்பத்துகளுமுண்டாகுமென்று சொல்லி அவர் மறைந்து விட்டார். பிறகு அவர்கள் இரண்டுபேரும் கப்பலேறி தஙகளுடைய பட்டணம் வந்துசேர்ந்து, முன்னே தங்கள வேலைக்காரனை இவாள் வரவைத் தெரிவிக்கும்படி அனுப்பவே அவன் சென்று

ஸாதுவின் பாரியாளுக்கும் குமாரத்திக்கும் தங்கள் பர்த்தாக்களின் வரவை தெரிவித்தான். அப்போது ஸாதுவின் குமாரத்தி சத்தியநாராயண விரதம் செய்துகொண்டிருந்து பிரஸாதம வாங்கிக்கொள்ளாமலே வந்தாள். ஆகையால் களாவதியின் கணவன் தனத்தோடு சமுத்திரத்தில் மூழ்கினுன். உடனே களாவதியும் அவள் தாய் தந்தைகளும் பலவிதமாய் துக்கித்தார்கள். இதுவும் ஸத்தியநாராயண விரத மகிமையன்றி வேறல்லவென்று நிச்சயித்து ஸத்தியநாராயணனே மறுபடியும் பிரார்த்தனே செய்ய, அப்போது பகவான் பிரத்தியக்ஷமாய்: "ஓ ஸாதுவே உன் குமாரத்தி ஸத்தியநாராயண விரதம் செய்துக்கொண்டிருந்து பிரஸாதம் கைக்கொள்ளாமலே வந்தாள். ஆகையால நான் உன் மருமகனே ஸமுத்திரத்தில் மூழ்த்தினேன்" என்றுசொல்ல, களாவதி தான் செய்த தப்பிதம் அறிந்து மறுபடியும வீட்டுக்குச சென்று ஸத்தியநாராயணனுடைய பிரஸாதம் வாஙகிக்கொண்டு வருஙகாலத்திற்குள் தன் பர்த்தா தண்ணீரிலிருந்தெழுந்து க்ஷேமமாய் கரைசேர்ந்தான். உடனே அவர்களெல்லோரும் தஙகள் வீட்டுக்கு வந்து சேர்ந்து, அதுமுதல் பிரதிப் பருவத்திலும், மாதப்பிறப்பிலும், ஸங்கராந்தி முதலிய புண்ணிய தினஙகளிலும் இந்த விரதம் செய்துக்கொண்டிருந்தார்கள். ஆகையால மறவாமல் ஸத்தியநாராயண விரதம் செய்ததினுல் இவ்வுலகில் ஸுகஙகளே அனுபவித்து முடிவில் ஸத்தியலோகமுமடைந்தார்கள் என்று மூன்றுவது நான்காவது அத்தியாயஙகளின் கதை.

---

## இது சத்தியநாராயண விரத கதையின் ஐந்தாவது அல்லது கடைசி அத்தியாய பிராரம்பம்.

"ஓ முனிவர்களே! இதில் இன்னொரு கதை சொல்லுகிறேன் கேளுங்கள். துங்கத்துவஜன் என்கிற ஒரு இராஜனிருந்தார், அவர் ஸத்தியநாராயணப் பிரஸாதத்தை விட்டு துக்கத்தை அனுபவித்தார். அவர் ஒருமுறை காட்டுக்குச் சென்று மிக வேட்டையாடி அனேக மிருகங்களை ஸம்கரித்த தேக அலுப்பினால் ஒரு ஆலமரத்து நிழலில்வர, அவ்விடத்தில் இடையர்கள் ஸத்தியநாராயணன் பூஜை செய்கிறதைப் பார்த்து இராஜ்ஜியக்கொழுப்பினால் ஸத்தியநாராயணஸ்வாமியை தியானிக்காமலும் சேவித்துக் கொள்ளாமலும் அந்த இடையர்களால் கொடுக்கப்பட்ட ஸத்தியநாராயண ப்ரஸாதத்தையும் வாங்கிக்கொள்ளாமல் தன் பட்டணத்திற்கு வந்தார். இப்படி அலக்ஷியம் செய்ததினால் அவருடைய நூறு பிள்ளைகளும் இறந்துபோனார்கள். தன தானிய ஸம்பத்துயாவும் அழிந்து போச்சுது. பிறகு அந்த இராஜனுக்கு வந்த ஆபத்துகளுக்குக் காரணம் ஸத்தியநாராயணனை அலக்ஷியம் செய்ததே தவிர வேறல்லவென்று தெரிந்துகொண்டதனால் அந்த இடையர்களிடம் சென்று அவர்களோடு கூடிக்கொண்டு தானும் பக்தியோடு ஸத்தியநாராயண விரதம் செய்து முறைப்படி அப்பகவானுடைய அனுக்கிரகத்தால் புத்திர பௌத்திர தனதானிய ஸம்பத்துகளடைந்து சுகப்பட்டு சிலகாலத்தின் பிறகு அவர் ஸத்தியலோகமடைந்தார்".

ஆகையால் இவ்விரதம் எடுத்துசெய்கிறவர்கள் நல்கூர்ந்தாராகிலும் செல்வம் விசேஷமடைவார்கள். சிறைச்சாலையில் அடைக்கப்பட்டவர்களும் விடுதலையடைவார்கள். பயப்படு

கிறவர்கள் பயத்திலிருந்து விலக்கப்படுவார்கள். ஓ முனிவர்களே ஆயிரம் பேச்சியால் என்ன பிரயோஜனம் இருக்கிறது இக்கலியுகத்தில் ஸத்தியநாராயண விரதம்தான் விசேஷப்பலத்தை கொடுக்கப்பட்டது. இவ்விரதக் கதை கேட்டவர்களும் படித்தவர்களும் எழுதினவர்களும் ஸர்வபாபங்களினின்று விலகப்படுவார்கள். அன்றியும் இஷ்டாபூர்த்திகளை பெறுவார்கள் என்பது திண்ணம். சத்தியம் சத்தியம் சத்தியம்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ சத்தியநாராயண விரத கதை ஸம்பூர்த்தியாயிற்று.

---

ஶ்ரீ

ஸ்ரீராமாய நம:

# ஸ்ரீராமநவமி விரதகல்பம் பிராரம்பம்.

---

## ஸ்ரீராமபூஜை.

ஆசமநீயம் மூன்றுதடவை செய்து பிறகு சங்கல்பம் செய்யவேண்டியது. பிராணாயம்மியா மாஸபக்ஷாத்தியுல் மிக்கிய ஸகலபாபக்ஷயகாம: ஸ்ரீ பரமேஸ்வரப் பிரீர்த்தியர்த்தம் (அல்லது) பகவதாக்ஞயயா ராமப்பிரீர்த்தியர்த்தம் ஸ்ரீ ராம நவமி விரத மஹம்கரிஷ்யே நம: யதாமிளிதோபசாரை: ஸ்ரீராமபூஜாம் கரிஷ்யே|| ஆதௌ கணபதி பூஜாம்கிருத்வா (சு.) கணபதி தியானம் யஸ்யத்திவிரத வக்திராத்தியா: பாரிஷத்தியா: பரிஷ்கிருதம் விக்னம் நிக்னந்திஸததம் விஷ்வக்ஸேந மூபா ஸ்மஹே|| சுக்லாம்............ஸர்வ விக்னோப சாந்தயே|| ததாராமமந்திரேண ஷடங்கன்னியாஸபூர்வக கலசார்ச்சனம் கரிஷ்யே நம: ப்பலபுஷ்பாக்ஷதஸஹிதம் ஜலபூர்ணம் தாம்ர பாத்ரம் கிருஹீத்வா உபோஷ்யேநவமிம் துவத்திய யாமேஷ்வஷ்டஸ—ராகவ|| தேநப்பிரீதோ பவத்துவம்மே ஸம்ஸாராத் திராஹிமாம்ஹரே|| இதிபந்திரேண பாத்திரஸ்தம் ஜலம்க்ஷிபேத். ஸசக்தித: ஹைமீ ராமப்பிரதிமாம் கிருத்வா அக்கினி உத்தாரண பூர்வகம் கபோலௌ ஸ்பிருஷ்ட்வா மூலமந்திரம்

பிராணவாதி சதுர்வித பலபுருஷார்த்த ஸித்தியர்த்தம் ராமரூமாய தேவத்துவம் ஸங்கியாரஸ்வாஹேதி மந்திரபடனம் கரிஷ்யே. பொன்னால் சக்திக்குத்தக்கபடி ராமப்ரதிமையைசெய்தும் பிரதிமாசோதனம் செய்து பிராணப்ரதிஷ்டை செய்யவேண்டியது. கோமலாஙகம் விசாலாக்ஷம் இந்திரநீல ஸமப்ரபம் தக்ஷிணாங்கே தசரதம் புத்திராபேக்ஷணதத்பர பிருஷ்டதே லக்ஷ்மணம் தேவம் ஸச்சத்ரம் கனகப்பிரபம் பார்ஸ்வே பரதசத்ருக்னௌ தாளவிருந்த கராவுபௌ அக்ரேவியக்கிரம் ஹனூமந்தம் ராமானுக்கிரஹகாங்க்ஷிணம் (தியானம்) அதஷோடசோபசாரைः பூஜயேத். சு. ஆவாஹயாமி விஸ்வேசம் ஜானகீவல்லபம் பிரபும் கௌஸல்யாதனயம் விஷ்ணும் ஸ்ரீராமம் பிரகுருதேः பரம் ஸ்ரீராமாயநமः ஆவாஹனம் ஸ....மி ஸ்ரீராமாகச்ச பகவன் ரகுவீர ந்ருபோத்தமம் ஜானக்கியாஸஹராஜேந்திர ஸுஸ்திரோபவஸர்வதா. ராமசந்திர மஹேஷ்வாஸ ராவணாந்தகராகவ யாவத்பூஜாம் ஸமாப்பியேஹம் தாவத்ஸன்னிஹிதோபவ|| ஸ்ரீராமசந்திராய நமः ஸன்னிதானம் குரு. சு. ரகுநாயகராஜர்ஷே நமோராஜீவலோசன ரகுநந்தனமேதேவ ஸ்ரீராமாபிமுகோபவ|| இதிஸம்முகீகரணம் குர்யாத் சு. ராஜாதிராஜ ராஜேந்திரா ராமசந்திர மஹீபதே ரத்னஸிம்ஹாஸனம் துப்பியம் தாஸ்யாமி ஸ்வீ குருப்ரபோ|| ஸ்ரீராமசந்திராயநமः ஆஸனம் ஸ....மி. சு. திரைலோக்கிய பாவநாநந்த நமஸ்தே ரகுநாயக பாத்தியம் கிருஹாண ராஜர்ஷே நமோராஜீவலோசன ஸ்ரீராமாயநமः பாத்தியம் ஸ....மி. பரிபூர்ணபராநந்த நமோராமாயவேதஸே கிருஹாணார்க்கியம் மயாதத்தம்கிருஷ்ணவிஷ்ணோஜநார்தன ஸ்ரீராமாயநமः இதமர்க்கியம் ஸ....மி. சு. நம ஸத்வாயசுத்தாய நித்தியாய ஞானரூபிணே கிருஹாணாசமனம் நாத ஸர்வலோகைகநாயக|| ஸ்ரீராமசந்திராயநம: ஆசமநீயம் ஸ....மி. சு. நமஸ்ரீவாசுதேவாய தத்

வஞானஸ்வரூபிணே மதுபர்க்கம் கிருஹாணேதம் ஜானகீ பதயேநம: ஸ்ரீராமாய நம: மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி. பஞ் சாமிருதம் மயாநீதம் பயோத்திகிருதம் மது, சர்க்கரா ஜல ஸம்யுக்தம் ஸ்ரீராம பிரதிகிருஹ்யதாம். ஸ்ரீராமாய நம:|| பஞ்சாமிருத ஸ்நாநம்ஸமர்ப்பயாமி. (யத்புருஷேணேதி ஸ்நா நம்) ஸ—மி. கங்கேச யமுனேசைவ ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு இல்லாவிடில் ராமாஷ்டோத்திரேண ஸ்ரீராமம் சுத்தோ தகேன ஸ்நாபயாமி. ஸ்நாநாநந்தரம் ஆசமநீயம் ஸ....மி. அபிஷேகம் செய்யும்போது சந்தனம், புஷ்பம், தீபம், நை வேத்தியம்செய்து ஸம்யக்பிரார்த்தய நிர்மால்யம் விஸ் சர் ஜ்ய புருஷஸூக்தை: விஷ்ணுஸூக்தை:ஸ்ச அபிஷிஞ்சேத். சு. தப்தகாஞ்சன ஸங்காசம், பீதாம்பரமிதம்ஹரே, ஸங்கிருஹாண ஜகன்னாத ராமசந்திரநமோஸ்துதே. இதி ஸ்ரீராமாயநம: வஸ் திரயுக்மம் ஸ—மி. ஸ்ரீராமார்ப்சுத எக்ஞேச ஸ்ரீதராநந்தராகவ பிரம்ஹ ஸூத்திரம் சோத்தரீயம் கிருஹாண ரகுநந்தன. ஸ்ரீராமாயநம: எக்ஞோபவீதம் ஸ-மி. குங்குமாகரு கஸ்தூரி, கர்பூரம்சந்தனம்ததா, துப்யம்தாஸ்யாமி ராஜேந்திரா ஸ்ரீரா ஸ்வீகுருப் பிரபோ. ஸ்ரீராமாயநம: கந்தான் ஸ—மி. க கோவிந்த பரமானந்த, ஹரித்திராஸஹிதாக்ஷதான், விஸ் வேஸ்வர விசாலாக்ஷ கிருஹாண புருஷோத்தம|| ஸ்ரீராமாய நம: அலங்காரார்த்தே அக்ஷதான் ஸ........மி. துலஸீகுந்த மந்தார, ஜாதிபுன்னைகசம்பகை: கதம்ப கரவீரைஸ்ச குஸுமை:ஸ்சதபத்ரகை:, நீலாம்புஜ பில்வபத்திரை:, மல லிகை ராகவம்விபும், பூஜயிஷ்யாம்யஹம் பக்தியா, ஸங் கிருஹாண ஜநார்த்தன., ஸ்ரீராமாயநம: புஷ்பாணி பூஜயாமி. துளஸீகுந்த மந்தார, பாரிஜா மம்புஜைர்யுதம் வணமாலாம் பிரதாஸ்யாமி, கிருஹாண ஜகதீஸ்வர. ஸ்ரீராமசந்திராயநம: வனமாலாம் ஸமர்ப்பயாமி.

## அதாங்க பூஜா.

| | |
|---|---|
| ஸ்ரீராமசந்திராய நம: | பாதௌ பூஜயாமி |
| ராஜீவலோசனாய நம: | குல்பௌ பூ—மி |
| ராவணாந்தகாய நம: | ஜானுநீ பூ——மி |
| வாசஸ்பதயே நம: | ஊரு பூ——மி |
| விஶ்வரூபாய நம: | ஜங்கே பூ——மி |
| லக்ஷ்மணாக்ரஜாய நம: | கடிம் பூ——மி |
| விஸ்வமூர்த்தயே நம: | குஹ்யம் பூ-மி |
| விஶ்வாமித்திரப்பிரியாய நம: | நாபிம் பூ——மி |
| பரமாத்மனே நம: | ஹிருதயம் பூ-மி |
| ஸ்ரீகண்டாய நம: | கண்டம் பூ-—மி |
| ஸர்வாஸ்திரதாரிணே நம: | பாஹூன் பூ—மி |
| ரகூத்வஹாய நம: | முகம் பூ——மி |
| பத்மநாபாய நம: | ஜிஹ்வாம் பூ—மி |
| தாமோதராய நம: | தந்தான் பூ—மி |
| ஸீதாபதயே நம: | லலாடம் பூ—மி |
| ஜ்ஞானகம்யாய நம: | சிர பூ—மி |
| ஸர்வாத்மனே நம: | ஸர்வாண்யங்கானி பூஜயாமி. |

பிறகு சக்தியிருந்தால் ஸஹஸ்ரநாம பூஜை செய்யலாம். இல்லாவிடில் அஷ்டோத்திரசதம் புஷ்பத்தாலாவது அல்லது துளசியாலாவது செய்யவேண்டும். ஒரு நாமத்திற்கு முதலில் ஓம் என்றும் கடைசியில் நம: என்றும் பூஜை செய்யவேண்டியது. கேசவாதி 24-நாமங்களும் செய்யலாம்.

---

## ஸ்ரீராமாஷ்டோத்திரசதம்.

ஓம் ஸ்ரீராமாய நமః
ராமபத்திராய
ராமசந்திராய
சாஸ்வதாய
ராஜீவலோசனாய
ஸ்ரீமதே
ராஜேந்திராய
ரகுபுங்கவாய
ஜானகீவல்லபாய
ஜைத்திராய 10
ஜிதாமித்ராய
ஜனார்த்தனாய
விஸ்வாமித்ரப்ரியாய
தாந்தாய
சரணத்திராணதத்பராய
வாலிப்பிரமதனாய
வாக்மினே
சத்தியவாசே
சத்தியவிக்கிரமாய
விரததராய 20
ஸதாஹநுமதாஸ்ரிதாய
கௌஸலேயாய
கரத்துவம்ஸினே
விராதவதபண்டிதாய
விபீஷணபரித்தாத்ரே
தசக்கிரீவசிரோஹராய
ஸப்ததாளப்பிரபேத்திரே
ஹரகோதண்டக்கண்டனாய
ஜாமதக்னிமஹாதற்ப தளனாய
தாடகாந்தகாய 30

ஓம் வேதாந்தஸாராய நமః
வேதாத்மனே
பவரோகஸ்யபேஷஜாய
தூஷணதிரிசிரோஹந்திரே
திரிமூர்த்தயே
திரிகுணாத்மகாய
திரிவிக்கிரமாய
திரிலோகாத்மனே
புண்ணியசாரித்திரகீர்த்தனாய
திரிலோகரக்ஷகாய 40
தன்விநே
தண்டகாரண்ணியபுண்ணியகிருதே
அஹல்லியாசாபசமனாய
பிதுருபக்தாய
வரப்பிரதாய
ஜிதேந்திரியாய
ஜிதக்குரோதாய
ஜிதாமித்ராய
ஜகத்குரவே
ருக்ஷவானர ஸங்காதாய 50
சித்திரகூடஸமாஸ்ரயாய
ஜயந்தத்ராணவரதாய
ஸுமித்ராபுத்ரஸேவிதாய
ஸர்வதேவாதிதேவாய
மிருதவானரஜீவனாய
மாயாமாரீசஹந்திரே
மஹாபோகாய
மஹாபுஜாய
ஸர்வதேவஸ்துதாய

ஓம் ஸௌம்யாயநம: 60
பிரம்ஹண்ணியாய
முனிஸத்தமாய
மஹாயோகினே
மஹோதராய
ஸுக்ரீவேப்ஸிதராஜ்யதாய
ஸர்வபுண்ணியாதிகபலாய
ஸ்மிருதஸர்வாகநாசனாய
ஆதிபுருஷாய
மஹாபுருஷாய
பரமபுருஷாய 70
புண்ணியோதயாய
தயாஸாராய
புராணபுருஷோத்தமாய
ஸ்மிதவக்திராய
மிதபாஷிணே
பூர்வபாஷிணே
ராகவாய
அனந்தகுணகம்பீராய
தீரோதாத்தகுணோத்தமாய
மாயாமானுஷசாரித்திராய
மஹாதேவாதிபூஜிதாயநம
ஸேதுகிருதே
ஜிதவாராசயே
ஸர்வதீர்த்தமயாய
ஹரயே

ஓம் சியாமாங்காய நம:
ஸுந்தராய
சூராய
பீதவாஸஸே
தனுர்தராய 90
ஸர்வயெக்ஞாதிபாய
யஜ்விநே
ஜராமரணவர்ஜிதாய
சிவலிங்கப்பிரதிஷ்டாதரே
ஸர்வாபகுணவர்ஜிதாய
பரமாத்மனே
பரபிரம்ஹணே
ஸச்சிதானந்தவிக்கிரஹாய
பரஞ்ஜோதிஷே
பரந்தாம்னே 100
பராகாசாய
பராத்பராய
பரேசாய
பாரகாய
பாராய
ஸர்வதேவாத்மகாய
பரஸ்மை
ஸ்ரீராமாய நம:
ஸ்ரீராமசந்திரபரமகுரவே
ஸ்ரீராமாஷ்டோத்திரசத நாமா
வளிஸ்ஸமாப்தா:

தூபதீபநைவேத்திய தாம்பூலாதி மந்திரபுஷ்பம் முதலியன செய்கிறது. வனஸ்பதிரஸோத்பூதோ, கந்தாட்டியோ கந்தமுத்தமம் ராமசந்திரமஹீபால தூபோயம் பிரதி கிருஹ்யதாம் ஸ்ரீராமசந்திராயநம: தூபமாக்கிராபயாமி. ஜியோதிஷாம் பதயே துப்பியம் நமோராமாய வேதஸே, கிருஹாண

தீபகம் சைவ, திரைலோக்கியம் திமிராபஹ|| ஸ்ரீராமாயநம:
தீபம் தர்சயாமி. இதம் திவ்வியான்னமமுர்தம், ரஸைஷட்பி:
ஸமன்விதம் ராமசந்திரேச நைவேத்தியம், ஸீதேப் பிரதி
கிருஹ்ஹியதாம்|| ஸ்ரீராமாயநம: மஹாநைவேத்தியம் நிவேத
யாமி. மத்யே மத்யே பாநீயம் ஸமர்ப்பயாமி. உத்தராபோச
னம் ஸ.........மி. ஹஸ்தபிரக்ஷாளனம் ஸ.........மி. முகப் பிர
க்ஷாளனம் ஸ ........மி. பாதபிரக்ஷாளனம் ஸ.........மி. புநராச
மநீயம் ஸ ........மி. கரோதுவர்த்தனந்தே இதம் சந்தனம்லே
பயாமி. நாகவல்லீதளேர்புக்தம் பூகீபலஸமன்விதம் தாம்பூலம்
கிருஹ்ஹியதாம் கர்பூராதிஸமன்விதம். ஸ்ரீராமாயநம: தாம்பூ
லம் ஸ.........மி. ஹிரண்ணியகர்பேதி தக்ஷிணாம் ஸ.........மி||
ராஜாதிராஜயேதி நீராஜனம். மங்களார்த்தம் மஹீபால, நீரா
ஜனமிதம்ஹரேஸங்கிருஹாண ஜகன்னாதராமசந்திர நமோஸ்
துதே ஸ்ரீராமசந்திராயநம: கர்பூரநிராஜனம் ஸ.....மி. நமோ
தேவாதிதேவாய ரகுநாதாய சார்ஙகிணே சின்மயானந்தரூ
பாய, ஸீதாயா பதயேநம: இதி நமஸ்காரம் குர்யாத் ஸர்வ
லோகசரண்யாய ராமசந்திராயவேதஸே பிரம்ஹாநந்தைக
ரூபாய ஸீதாய பதயே நம: இதி புஷ்பாஞ்ஜலிம் தத்தியாத்,
யாஸிகாநிசபாபாநி பிரம்ஹஹத்தியா சமாநிச, தானி தானி
வினஸ்யந்தி பிரதக்ஷிண பதேபதே|| ஸ்ரீராமசந்திராயநம: பிர
தக்ஷிண நமஸ்காரான் ஸ ....மி. நிர்த்தியைர் கீதைஸ்ச வாத்தி
யைஸ்ச, புராணபடநாதிபி: ராஜோபசாரைர் கிலேர் ஸந்துஷ்
டோ பவராகவ|| ஸ்ரீராமசந்திராய நம: ச்சத்திராதி ஷோட
சோபசாரபூஜாம் ஸ—மி. அசோக குஸுமைர்யுக்தம், ராமா
பார்க்கியம் நிவேதயேத், தசானனவதார்த்தாய, தர்மஸமஸ்
தாபனாயச, ராக்ஷஸாநாம்விநாசாய, தைத்தியானம் நிதனாயச
பரித்திராணாய ஸாதூனாம், ஜாதோராமஸ்வயம் ஹரி:|| கிரு
ஹாணார்க்கியம் மயாதத்தம், பிராதுருபிஸஹிதோநக|| ராம

சந்திராயநம: இதமர்க்கியம் ஸமர்ப்பயாமி. யஸ்யஸ் மிருத்ய.....ஸ்ரீராமசந்திரதேஸ்ஸ—....வரிதோபவது. இதி பூஜா விதி ஸம்பூர்னம் ஸர்வம ராமார்ப்பணமஸ்து.

ஸ்ரீராமசந்திராய ஸாங்காய ஸபரிவாராய நம: இதமர்க்கியம் ஸ...மி. ஆவாஹனம் நஜாநாமி, நஜாநாமிமஹீபதே, மந்த்ரஹீனம் கிரியாஹீனம் பக்திஹீனம் ஜநார்த்தன, ராமசந்திரஸ்வாமின் அனேன யதாக்ஞானேன கிருத பூர்வோத்த ராராதனேன பகவான் ராமசந்திர பிரியதாம். இதி ஸ்ரீராம நவமி பூஜாஸ்ஸமாப்த:||

# ஸ்ரீராம நவமி விரத கதை.

அகஸ்திய முனிவர் ஸு—தீக்ஷ்ண முனிவரைப்பார்த்து சொல்லுகிறார்: சித்திரை மாதத்தில் பூர்வபக்ஷ நவமிதிதியில் ஸச்சிதானந்த ஸ்வரூபரானமஹாவிஷ்ணுவானவர் ரகுவம்சத்தில் வந்து உதித்தாராகையால் அந்த நவமி விரத தினத்தில் தங்கள் சக்திக்குத்தக்கபடி இராமனுடைய பிரதிமையை செய்து அதை மண்டபத்தில் வைத்து ஷோடசோபசாரங்களால் பூஜை செய்து அத்தினம் இராத்திரி பகவானுடைய புண்ணிய புராணகதைகள் கேட்டுக்கொண்டு ஜாகரணம் செய்து மறுநாள் காலையில் ஸ்நாநாதி நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு சக்திக்கேற்றவாறு பக்தியோடு ஸ்ரீராமருக்கு புந: பூஜைகள் செய்து நைவேத்தியாதி நீபாராதனைகள் செய்த பிறகு, பிராம்ஹணர்களையும் பூஜித்து எல்லாவிதமான தானங்களையும் செய்து பிறகு பூரி போஜனமளிக்கவேண்டியது. இப்படி அதிபக்தியுடன் ராமரை பூஜை செய்பவன் அநேக ஜென்மங்களில் செய்த பாவங்களினின்று விமுக்தனாகிறான். இவ்விரதம் எப்பேர்க்கொத்தவரும் செய்து அதின் பலனடைவதேயன்றி எல்லாராலும் மேன்மை அடை

வர். இவ்விரதம் செய்யாத மானிடன் மற்ற எந்த நோன்பி னாலும் அவ்வளவு பலனடையமாட்டான். மேலும் ஸ்ரீராம நவமி தினத்தில் எம்மனிதனாவது உபவாசமிராமல் போஜனம் செய்தால் மிக பயங்கரமான கும்பீபாகாதி நரகங்களடைவான். ராமப்பிரதிமை தானம் செய்தால் முக்தி அடைவான் என்றுசொல்ல ஸுதீக்ஷ்ன முனிவர், அகஸ்திய முனிவரைப் பார்த்து. ஓ முனீந்திரரே உலகத்தில் மனிதர்கள் பணமில்லாதவராகிலும் இருந்தும் லோபிகளானால் அவர்களெப்படி இந்த விரதத்தை செய்வார்களென்று கேழக்க, அதற்கு அகஸ்தியர் சொல்லுகிறார்: "ஓ ஸுதீக்ஷ்ணரே அவரவர் சக்திக் கிசைந்தபடி குறைவின்றி, $\frac{1}{4}$, $\frac{1}{2}$, $\frac{1}{3}$, பலமோ இதுகளில் எவ்வளவோனும் சக்திக்குலோபமின்றி ராமப்ரதிமை ஏர்ப்படுத்தி பூஜைகள் செய்து ஒரு சத் பிராம்ஹணருக்கு தானம் கொடுக்கவேண்டும். அப்படி மிக தரித்திரனானபோதிலும் தன் முயற்சியால் சம்பாதித்து இவ்விரதம் செய்வானேயாமாகில் சகலபாப விமுக்தனாய் மோக்ஷமடைவான்" என்று சொன்னபோது ஸுதீக்ஷ்ணர் மறுபடியும் அம்முனிவரைப்பார்த்து பிரஸ்னனம் செய்கிறார். "ஓ முனீந்திரரே ராம மூலமந்திரப பிரபாவததை எனக்கு தெரிவிக்க வேண்டுமென வேண்டினபோது அகஸ்தியமாமுனி ஸுதீக்ஷ்ணரை நோக்கி அதைச் சொல்லத் தொடங்கினார்.

"ஹே ஸுதீக்ஷ்ணா எல்லா மந்திரஙகளிலும் இராம ஷடாக்ஷரி மந்திரம் சிரேஷ்டமானதென்று ஸ்காந்தபுராணத்தில் மோக்ஷகாண்டத்தில் ருத்திரகீதையில் ஸ்ரீராமனைக் குறித்து பரமசிவன் சொல்லுகிறார்: " ஓ ராமா! மணிகர்னிகா தீரத்தில் மரணமடையும் ஒவ்வொரு மானிடனுடைய வலது காதில் உன் சம்பந்தமான தாரகநாம மந்திரம் ஸ்ரீராம ராம ராம என்கிற மந்திரத்தை உபதேசிக்கிறேன், ஆகையால நீ

தாரகபிரம்ஹமென்று சொல்லப்படுகிறாய்" என்று சொன்னார். ஆகையால் பீடாங்க தேவதைகளின் பூஜைகள் செய்து ஸ்ரீ ரகுராமனை ஷோடசோபசார பூஜைகள் செய்கிறவன் அனேககோடி ஜென்மங்களில் செய்த பாவங்களினின்று நிவர்த்திக்கப்பட்டு மோக்ஷசாம்பிராஜ்ஜியத்தை அடைகிறான். மேலும் இந்த மந்திரம் விரதம் முதலியவைகளை பக்தியுள்ள மானிடனுக்கே உபதேசிக்க யோக்கியமானது. ஸ்ரீராம பிரம்ஹ பிம்பத்தை, பொன், வெள்ளி முதலிய எந்தலோகத்திலாவது பிரதிமை செய்வித்து இராமனை ஆவாஹனாதி பூஜைகள் செய்து அப்பிம்ப சமீபத்திலேயே நவமி தினத்தில் ஒரே நிலையான மனதோடு உபவாசம் செய்து பூஜித்து மறுநாள் காலையில் புந: பூஜாதிகள் செய்து தங்கள் சக்திக்குத்தக்கபடி பிராம்ஹணனுக்கு பிரதிமாதானம் செய்து போஜனாதிகளால் திருப்தி படுத்தவேண்டியது. அப்படி செய்வனேயாகில் இராமன் அவர்களுக்கு சகலஸம்பத்தும் கொடுத்து பிறகு மோக்ஷத்தையும் கொடுப்பார். மேலும் இந்த விரதம் பனிரெண்டு வருஷம் செய்தால் அவர்களுக்கு ஸர்வபாப விமுக்தம் செய்வார். இராமமந்திர மறியாதவன் கேவலம் ஸ்ரீராமநாம ஸ்மரணையினாலேயே அவனுக்கும் அந்தப்பலன் கிடைக்குமென்று அகஸ்தியர் ஸுதீக்ஷ்ணருக்கு சொல்லவே, அம்முனிவர் கேட்டு மிக ஸந்துஷ்டி அடைந்தார். (சுலோகம்) குருலப்தந்து மந்திரந்தத் நியமேனனிமாஸ புரஸ்ஸரம் யாமே யாமேச விதினா குருயாத்பூஜாம் ஸமாஹித: முமுக்ஷுஸ்ச ஸதாகுர்யாத் ஸ்ரீராமநவமி விரதம் முசியதே ஸர்வபாபேப்பியோ யாதிபிரம்ஹஸநாதனம்.

இதி ஸ்ரீஸ்காந்தபுராணே அகஸ்திய ஸம்ஹிதாயாம்.

ஸ்ரீராம நவமி விரத கதா ஸம்பூர்ணம்.

ஸ்ரீராமஜெயம். சுபம்பவது.

ஃ

ஸ்ரீரஸ்து:

சிவமயம்.

# சித்திரகுப்த விரதம்.



மூன்றுதடவை ஆசமநீயம் செய்து, பிறகு சங்கல்பம் செய்துக்கொண்டு சுபே சோபனே முஹூர்த்தே............ ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சுபதிதௌ (வாஸரஃ—சுபநக்ஷத்ர, சுபயோக சுபகரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ)—சித்திரகுப்த, எம, சூர்யநாராயண, தேவதாமுத்திஸ்ய, தேவதாப்ரீத்தியர்த் தம், ஸ்காந்த புராணோக்தப் பிரகாரேண, யாவச்சக்தி தியாநாவாஹநாதி, சோடசோபசார பூஜாம் கரிஷ்யே நமஃ ததங்கத்துவேன கலசாராதனம் கரிஷ்யேநமஃ. கலசபூஜை செய்து, பிறகு கணபதிபூஜை செய்து முடித்து, சித்திர குப்த, எம, சூரியநாராயண, பிராண பிரதிஷ்டை செய்து, பிறகு பீடபூஜை செய்து கல்பப்படி விரதம் ஆரம்பிக்க வேண்டியது. தியானம் || சு. தியாயாமி தேவம்தேவே சம், சரணாகதவத்ஸலம், ஸர்வகாமப்ரதம்தேவம் ஸர்வ ஸம் பத் பிரதம்முதா. சித்திரகுப்த, எம, சூரயநாராயண, தேவ தாப்பியோநமஃ தியாயாமி || சு ஆவாஹயாமி விஸ்வேசம், ஜகத்ஸாக்ஷிணமவ்யயம், ஸர்வபாபஹரம்தேவம், கருணா பூர்ணமானஸம. சித்திரகுப்த, எம, சூர்யநாராயண, தேவ தாப்பியோநமஃ ஆவாஹனம் ஸமர்ப்பயாமி|| சு. ஆஸநம் பர மம் திவ்வியம், நவரத்னஸமன்விதம், சௌவர்ணப்ரபயா

5

யுக்தம், முக்தாபிரலம்பசோபிதம் சித்திரகுப்தாதி தேவ தாப்பியோநம: ஆஸனம் ஸ....மி. சங்காதி ஸர்வதீர்த்தேப்பியோ, ஆநீதைர் நிர்மலைர்ஜலை, பாத்தியம் கிருஹாண தேவேச, ஸர்வாபீஷ்டப்பலப்பரத. சித்திரகுப்தாதி....நம: பாத்தியம் ஸ....மி. கங்காஜலஸமாநீதம் திவ்வியகந்தை: ஸுவாஸிதம், அர்க்கியம் கிருஹாண பகவன், ஸாவபாபவியபோஹக்ருது. சித்திரகுப்தாதி தேவ....நம: அர்க்கியம் ஸ....மி. || சு. ஆசம்மியதாம், மபாதத்தம், கிருஷ்ணு கோதாவரீஜலம், கிருஹீஷ்வாசனம்தேவ, ஸாபபாபநிகிருந்தனம். சித்திரகுப்தாதி தேவ........நம: ஆஸமநீயம் ஸ....மி|| சு. சர்க்கராததிஸம்யுக்தம், மதுபர்க்கமிதம்பிரபோ, அஹம் தாஸ்யாமி தேவேச கிருஹாண ஸுரஸத்தம. சித்திரகுப்தாதி தேவ........நம: மதுபர்கம் ஸ....மி|| சு ஸ்நானம் பஞ்சாமிருதைர் திவ்வியைர் கந்தாட்டியை ஸதிலோதகைர், காரிகேளோதகைர், இக்ஷுரஸைர் குருதயாநிதே. சித்திரகுப்தாதி தேவ....நம: பஞ்சாமிருதஸ்நாநம் ஸ....மி. கங்கா கோதாவரீ கிருஷ்ணு, யமுனு நர்மதாஜலை:, காவேரீ ஸிந்து ஜைஸ்சைவ, ஸ்நாநம் குருமஹாமதே.|| சித்திரகுப்தாதி.... நம: சுத்தோதகஸ்நாநம் ஸ....மி|| ஸ்நாநாநந்தரம் ஆசமநீயம் ஸ....மி. || சு. வஸ்திரயுக்மம், ஸதாசுப்பிரம், மனேஹரமிதம் சுபம், ததாமிதேவ தேவேச பக்தியாஹம் பிரதிகிருஹ்ஹியதாம். சித்திரகுப்தாதி தேவ....நம: வஸ்திரயுக்மம் ஸ....மி. ||சு. ஸர்வ எக்ஞோபவீதாதி நாநாரத்னமயாநிச, உபவீதானிதாஸ்யாமி, கிருஹ்ஹியதா திரிதிவேஸ்வர சித்திரகுப்தாதி தேவ....நம: எக்ஞோபவீதம் ஸ....மி. || சு. கந்தம் கர்பூர ஸம்யுக்தம், குங்குமா கருஸம்யுதம், விலேபனம் மயாதத்தம், பிரீத்தியர்த்தம் பிரதிகிருஹ்ஹியதாம். சித்திரகுப்தாதி தேவ....நம: ஸ்ரீ கந்தம் ஸ....மி. ||சு. ரக்தாக்ஷ

தான், பிரதாஸ்யாமி, எம, சூர்ய, நமோஸ்துதே, ஸ்வேத வர்ணம் சித்திரகுப்தம் தாஸ்யாமி தவசாக்ஷதான். சித்திரகுப்தாதி தேவ....நம: அக்ஷதான் ஸ....மி. || சு. மல்லிகா மாலதீ புஷ்பை: ஸ்சம்பகை வகுளேசுபை:, ஸர்வ பாப க்ஷயார்த்தாய, யுஷ்மத் பூஜாம் கரோம்மியஹம். சிததிர குப்தாதி தேவ....நம: புஷ்பாணி பூஜயாமி||

## அதாங்க பூஜா.

| | |
|---|---|
| சித்திரகுப்த, தர்மராஜ, சூர்யேப் பியோநம: | பாதௌ பூஜயாமி |
| எம ஸர்வவந்தித திவாகரேப் பியோநம: | குல்பௌ பூ—மி |
| மிருத்தியு, பாப, புண்ணிய விப ஜன பிரபாகரேப்யோநம: | ஜங்கே பூ—மி |
| அந்தக, தேஜோமய பாஸ்கரேப் பியோநம: | ஜானுநீ பூ—மி |
| வைவஸ்வத, நிர்மலரூப, ஜகன் ஞேத்ரேப்பியோநம: | ஊரூ பூ—மி |
| காலஸ்வேதாம்பர மித்திரேப்பி யோநம: | கடிம் பூ—மி |
| ஸர்வ பூதக்ஷப, ஸர்வ சாஸ்திர, விசாரதாதிதேப்பியோநம: | நாபிம் பூ—மி |
| ஔதும்பர, விசால, வக்ஷாதி யுமணிப்பியோநம: | வக்ஷஸ்தலம் பூ—மி |
| ரஜனீசராஜானுபாஹு ஸஹஸ்ரீக்ஷ ணேப்பியோநம: | பாஹூன் பூ—மி |
| ரக்தகண்டசுக்ரீவ, திரைலோக் கிய நாதேப்பியோநம: | கண்ட்டம் பூ—மி |

ஸ்மசானனிலய, தேஜோமய
திமிராப ஹரேப்பியோநமஃ முகம் பூ—மி
குரூரசெக்ஷு, புண்ணிய மார்க,
திவ்விய சக்ஷுப்பியோநமஃ நேத்திரே பூ—மி
கபாலதாரி, கிரீடதாரி, ப்பானுப்
பியோநமஃ சிரஃ பூ—மி
எம, யமபுர யதிஷ்டான, சூர்ய
நாராயணேப்பியோநமஃ ஸர்வாண்ணியங்காளி பூஜயாமி.

## சித்திரகுப்த பூஜை.

| | |
|---|---|
| சித்ராயநமஃ | விக்குருதவதனய நமஃ |
| சித்ரகுப்தாயநமஃ | குரோதனயநமஃ |
| எமப்படாயநமஃ | குரோதரூபாயநமஃ |
| மிருத்தியுரூபிணேநமஃ | பயங்கராயநமஃ |
| கிருஷ்ணங்காய | |

## எம பூஜை

| | |
|---|---|
| எமாயநமஃ | தண்டதராயநமஃ |
| எமதர்மராஜாயநமஃ | வைவஸ்வதாயநமஃ |
| எமுனாப்பிராத்ரேயநமஃ | அந்தகாயநமஃ |
| கிருதாந்தாயநமஃ | சமனாயநமஃ |
| காலாயநமஃ | தர்மராஜாயநமஃ |

## சூர்ய பூஜை.

பிரதி நாமத்திற்கும கடையில் நமஃ என்று
சேர்த்து வாசிக்கவும்.

| | |
|---|---|
| சூர்யாய நம | பிரபாகராய நமஃ |
| ஆதித்தியாய | விபாகராய |
| அர்காய | பாஸ்கராய |
| திவாகராய | பாஸ்வதே |

ப்பானவே நமஃ
விவஸ்வதே
ஹரிதஸ்லாய
மாரத்தாண்டாய
சுபஸ்திநே
சுககாய
அரவிந்தாக்ஷாய
பித்திரே
பிரபிதாமஹாய
ஸ்வாக்கதுவாராய
பிரஜா துவாராய
மோக்ஷதுவாராய
திரிவிஷ்டபாய
தேவகாத்திரே
பிரசாந்தாய
விஸ்வாதமநே
விஸவதேமுகாய
சராசராத்மநே
ஸூக்ஷமாத்மநே
மைதரியோயாய
கருணாய
ஸ்ரீ ஸூர்யநாராயணாய
பூஷ்ணே
ஹிரண்ணிய கர்ப்பாய
மரீசயே
ஸவித்திரே
ஓம் சூர்யாய
அர்ப்பமணே

ப்பகாய நமஃ
விவஸ்வதே
தீப்தாம்சவே
சுசயே
த்வஷ்ட்ரே
பூஷ்ணே
அர்காய
ஸவித்ரே
ரவயே
கபஸ்திநே
அஜாய
காலாய
மிருத்யவே
தாத்ரே
பிரபாகராய
ப்ருதிவ்யை
அத்பியோ
தேஜஸே
வாயவே
க்ககாய
பராயணாய
ஸோமாய
பிருஹஸ்பதயே
சுக்கிராய
புதமயாய
அங்காரகாய
இந்திராய
காஷ்டாயை

முஹூர்த்தாய நம:
பக்ஷாய
மாஸாய
இருதவே
ஸம்வத்ஸராய
அஸ்வத்தாய
சௌரயே
சனைஸ்சராய
ப்ரம்ஹணே
விஷ்ணுவே
இருத்திராய
ஸ்கந்தாய
வைசிரவணாய
எமாய
வைத்தியுதாய
ஜட்டராய
அக்னயே
அஞ்சனாய
தேஜஸாம்பதயே
தர்மத்விஜாய
வேதகர்த்திரே
வேதாங்காய
வேதவாஹநாய
கிருதாய
திரேதாய
துவாபராய
கலயே
ஸர்வாமராஸ்ரயாய
ஜயாய
விசாலாய
வரதாய நம:
சீக்கிராய
ப்ராணதாரணாய
காலசக்ராய
விபாவஸே
புருஷாய
சாஸ்வதாய
யோகினே
வியக்தாவ்வியக்தாய
ஸநாதனாய
லோகாத்தியக்ஷாய
ஸுராத்தியக்ஷாய
விஸ்வகர்மிணே
தமோநுதே
வருணாய
ஸாகராம்சவே
ஜீமூதாய
அவிக்நே
ப்பூதாஸ்சிரயாய
ப்பூதபதயே
ஸர்வபூதநிஷேவிதாய
தியுமணயே
ஸுவர்ணாய
பூதாதயே
தன்வநதயே
தாமகேதவே
ஆதிதேவாய
அதிதேஸ்ஸுதாய
திவாதசாத்மனே

இதற்குமேல் சிவஸஹஸ்ரநாம பூஜையும் செய்யலாம் பிறகு தூபதீப நைவேத்தியாதிகள் நடத்தவேண்டியது

வநஸ்பதிரஸைர்திவ்விபைர் நாநாகந்தைஸ்சுஸம்யுதஹ; ஆக்கிரேயஃ ஸர்வதேவானும் தூபோயம் பிரதிகிருஹ்ஹிய தாம் சித்திரகுப்தாயநமஃ தூபமாக்கிராபயாமி. ஸாஜ்ஜியம் திரிவர்தி ஸம்யுக்தம், வன்ஹிநா ஜோதிதம்மயா, கிருஹாண மங்களம் தீபம். திரைலோக்கியம் திமிராபஹ. சித்திரகுப்தாதி தேவதாப்பியோநமஃ தீபம் தர்சயாமி. நைவேத்தியம் ஷட்ரஸோபேதம், மாஷாபூபஸமன்விதம், கதளீநாரிகேளஸ்ச ப்பலைரிக்ஷுஸமுத்பவைஃ சித்திரகுப்தாதி தேவ ....நமஃ மஹா நைவேத்தியம் நிவேதயாமி. || சு. தாம்பூலம் சூர்ணஸம்யுக்தம் ப்பூகிபல ஸமன்விதம், தாஸ்யாமி தேவப்பிரீத்திபர்ததம, ஸாவகாம்மியாதத சிததயே. சித்திரகுப்தாதி தேவ....நமஃ தாம்பூலம் ஸமர்ப்பயாமி. || சு. தர்மராஜ நமஸ்தேஸ்து சித்திரகுப்தாயதேநமஃ, தர்மமார்க்க பிரபோதார்த்தம், பிரீத்தியர்த்தம் பிரதிகிருஹ்ஹியதாம். சித்திரகுப்தாதி தேவ........நமஃ கர்பூரநிராஜனம் ஸமர்ப்பயாமி. || சு. சம்பகைர்ஜாதிபுன்னைகைஃ கேதகீகரவீரகைஃ கமலஹ்குமுதைஃ புஷ்பைஃ பிரீத்தியர்த்தம் பூஜயாம்மியஹம். சித்திரகுப்தாதி தேவ........நமஃ ஸுவர்ன மந்திர புஷ்பம் ஸமர்ப்பயாமி || சு. யாநிகானிசபாபானி....தஸ்மாத்காருண்ணிய பாவேந ரக்ஷ ரக்ஷதிவாகர. சித்திரகுப்தாதி தேவ.... நமஃ ஆத்ம பிரதக்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி. || சு. எமாய தர்மராஜாய மிருத்யவேசாந்தகாயச, வைவஸ்வதாயகாலாய, ஸர்வபூதக்ஷபாயச, எமாயநமஃ புனராக்கியம் ஸமர்ப்பயாமி. இப்படி மூன்றுதடவை அர்க்கியம் விடவேண்டியது.

ஔதும்பராய தத்னுய நீலாய பரமேஷ்டிநே, விருகோதராய சித்திராய, சித்திரகுப்தாயவைநமஃ சித்திரகுப்தாயநமஃ புநரர்க்கியம், (ஏவம்) இவ்விதம் 3-தடவை அர்க்

கியம் விடவும் || சு திவாகரநமஸ்துப்பியம் தாபம் நாசய பாஸ்கர, கிரயீமயததுவம், விஸ்வாத்மன் கிருஹாணார்க்கியம் நமோஸ்துதே ஸ்ரீசூர்யநாராயண ஸ்வாமிநேநமஃ புநரர்க்கியம் ஸமர்ப்பயாமி. யஸ்பஸ்மிருத்தியாச நாமோக்தியா, தபஃ பூஜாக்கிரியாதிஷு, நியூனம் ஸம்பூர்ணதாம்யாதி, சத்தியோவந்தே (ஸசங்கரம்) அல்லது (தமச்சுதம) மந்திர ஹீனம், கிரியாஹீனம், பக்திஹீனம் ஜநார்த்தன், அனயா பூஜயாச நைவேத்தியேன பகவான ஸர்வதேவாத்மகஃ, ஸ்ரீ சூர்யநாராயண எம, சித்திரகுப்த தேவதாப்பியோநமஃ ஸுப்பிரீத ஸுப்பிஸன்னோ வரதோபவது|| ஸாவம் ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணமஸ்து அல்லது சிவார்பணமஸ்து என்று யெப்படியாவது சொல்லலாம். இவ்விரதத்திற்கு உதத்தியாபனம் உண்டு. தாநதானம் முதலியன செய்யும கிரமங்களுண்டு. இவ்விரதம சரிவர செய்தால் மிக புண்ணியமுண்டு. ஸர்வபாபமும் விலகி ஸர்வ புண்ணிய லோகங்கள் அடைவார்கள என்பது திண்ணம.

---

# சித்திரகுப்த விரத கதை.

---

நைமிசாரண்ணிய வாசிகளாகிய இருஷிகளெல்லோரும், தங்களுடைய ஆஸ்சிரமத்துக்கு விஜயம்செய்த ஸூத மஹா முனிவரைக் கண்டு, சாஸ்திரவிதிப்படி அர்க்கியபாத்தியாதி ஆசமநீயங் கொடுத்து பூஜித்து "ஓ மஹாத்மா! எல்லாருக்கும் உபகாரமாயும், சகலமான கோரிகைகளை கொடுக்கக் கூடியதுமான ஒரு விரதத்தை எங்களுக்கு தயவு செய்யவேண்டியதென்று" கேட்க, ஸூதமாமுனி, இருஷிகளுக்குச் சொல்லத் தொடங்கினர். "ஓ முனிவர்களே! சொல்லுகிறேன் கேளுங்கள்: அநேக விரதங்க

ளில் உத்தமமான விரதம் ஒன்றுண்டு, அது எல்லா பாவங்களையும் போக்கி, சகல ஸம்பத்து முண்டாக்கக்கூடியது. ஸ்திரீகளுக்கு, தங்கள் கோரிக்கையின்படி, சகல ஸம்பத்தும் கொடுக்கும்படியான விரதம் சித்திரகுப்த விரதம் என ஒன்றுண்டு. அதை, சித்திரை மாதத்தில் செய்யவேண்டியது. இந்த சித்திராபுத்திரர், மிக விவேகமுள்ளவர். அவர் எப்போதும் எமதருமராஜனிடத்தில் இருந்துகொண்டு ஜனங்களுடைய புண்ணிய பாவங்களை, தன் ஓலைப் புஸ்தகத்திலெழுதி அக்கணக்கை எமனுக்குத் தெரிவித்துக்கொண்டிருப்பவர். ஆகையால், அவருடைய தயவை ஸம்பாதிப்பதற்காகவேண்டி, சித்திரகுப்த விரதம் செய்யவேண்டும். இது மிக அவசியமான விரதம், இதைக்குறித்து ஒரு இதிஹாஸ கதை சொல்லுகிறேன் கேளுங்கள். ஒரு காலத்தில், குமாரசுவாமி மிக வணக்கத்தோடு, தன் கைகளைக் கூப்பிக்கொண்டு, கைலாஸத்தின் உசசியில், இரத்தின சிம்ஹாஸனத்தில் வீற்றிருந்த சங்கரரை நோக்கி: 'ஓ பிதா! மனுஷ்யலோகத்தில் மானிடர்கள், காமக்குரோத லோப மோஹ மதமாத்ஸரியங்களால் பீடிக்கப்பட்டும், வருமையாலும் மிகவருந்தி வியசனத்தினால், பாவத்தொழில்களை செய்துகொண்டிருப்பார்கள் ஆகையால், அவர்களெப்படி எமபாதை அடையாமலிருப்பார்களோ, அப்பேர்க்கொத்த விரதம் ஒன்று உலகத்தின் க்ஷேமத்திற்காக அனுக்கிரகிக்க வேண்டு'மென்று குமாரன் கேழ்க்கவே, மஹாதேவன் தன் புத்திரனை நோக்கிச சொல்லுகிறார்: ஓ குழந்தாய், பழமையான ஒரு இதிகாச கதையை விவரித்துச் சொல்லுகிறேன் கேள். த்விஜவர்யரென்கிற ஒரு பிராமணர் இருந்தார்; அந்த பிராமணர், மிக படித்தவரா யிருந்தாலும், தன் குலாசாரத் தர்மங்களை விட்டு,

அனுஷ்டானாதிகளையும், சாஸ்திர முறைகளையும் தவிர்த்து, வேதங்களையும், பிராமணர்களையும் தூஷித்துக்கொண்டு, பாப கார்யங்களையே செய்துகொண்டு வந்தார். தவிர பரான்னம் சாப்பிடுவார். தான் ஒரு காசாவது செலவழியார். ஒரு தானதர்மம் கொடார். ஆகிலும், அந்த பிராமணர் போஜனம் செய்வதற்கு முன் சித்தராயநம:, சித்திரகுப்தாய நம:, எமரூபிதராய நம: என்று சொல்லிக்கொண்டே, சித்திரகுப்தனுக்கு தான் சாப்பிடுவதற்கு முன்னே பலி போடுவார். அவருடைய பாரியாளுக்கு, சோமா என்று பெயர். அவரும், மிகப் பொல்லாதவர். அவர் தன் கணவனுடைய பேச்சைக் கேளார், சொன்ன வேலையைச செய்யார், மாமி மாமனை பிரதிதினம் தூஷித்து திட்டிக்கொண்டே யிருப்பார். அவர் கொஞ்சமாவது எந்த காலத்திலும் புண்ணியம் செய்யாமல் எப்போதும் பாவங்களையே செய்து வந்தவரானம்பாதிலும், அநத பிராமணர் ஒரு காலத்தில் தன் பாரியாளை, சமீபத்தில் வைத்துக்கொண்டு, இந்த சிததிரகுப்த விரதம் செய்தாராகையால், அவருக்கும் அந்தப் பலன் கிடைததது. அவர்களிப்படி சிலகாலம் பூலோகததிலிருநது, பிறகு மரித்தார்கள். அப்போது எமதூதா வநது அவர்களை எமனிடம் அழைத்துக்கொண்டுபோய், ஐயா இவாகளெப்போதும் பாபிகளே, ஒரு காலத்திலாவது புண்ணியமென்கிற விஷயத்தையே செய்து அறியாதவர்களென்று, எமனோடு தெரிவித்தார்கள். அப்போது எமன், சித்திரகுப்தனை அழைத்து: இரண்டு பேருடைய பாபபுண்ணிய கணக்கை கண்டு தெரிவிக்கவேண்டியதென அவனுக்குக் கட்டளையிட்டார். உடனே, சித்திராபுத்திரன் தன் கணக்குப் புஸ்தகத்தை அவிழ்த்து ஒவ்வொரு ஏட்டையும் பார்த்து, தங்க

ளுக்கு அவர்கள நித்தியமளிக்கும் பலிகளை விரததததில் பார்த்து: ஞாபகத்துக்குக் கொண்டுவந்து, தலையை யசைத்து, எமதர்மருக்கு தெண்டனிட்டுச் சொன்னார், 'ஓ! பிரபு, இந்த பிராமணருடைய புண்ணிய பாவங்களைப்பற்றி நாம ஆலோசனை செய்யவேண்டியதா யிருக்கிறது. இவா ளுடைய கணக்கில் எங்கே பார்த்தாலும், பாவத்தை பற் றியே யிருக்கிறது. ஓரிடத்திலாவது, கொஞ்சமேனும் புண் ணியத்தைப்பற்றி எழுதினதாய்க் காணப்படவில்லை. ஆகி லும், இவாகளுடைய பாபங்கள் யாவையுமபூஜ்ஜியமாக எழுதி இருக்கிறது; அது எனக்கு காரணம்தெரியவில்லை. ஆகையால, அதை நான் அறியாமலிருநத போதலும என்னை க்ஷமிக்குமபடி கோருகிறேன்' என்று சொல்லி சித்திரகுப்தன் பேசாமலிருநதான். எமதர்மன், அவர் புண்ணிய விசேஷத்தை ஆலோசித்துத் தெரிந்துகொண்டு: அவர்களை வைகுண்டத்திற்கு அனுப்பினார்.

ஓ குமாரா! இநத விரத மகிமை சொல்ல என்னால முடியாது; உலகததில் மனிதர்கள் இந்த விரதம் தவிர மீதி விரதங்களெத்தனை செய்தபோதிலும், அவாகளுக்கு ஸ்வர்க்கலோக பிராபதி உண்டோ இல்லையோ வென்று சந் தேகிக்க வேண்டியதா யிருக்கிறது. ஓ ஷண்முகனே, இதற்காக ஒரு இதிஹாஸ கிளைக்கதை சொல்லுகிறேன கேள், அதனால் உன் மனதிலுண்டான சநதேகங்கள் நீங் கும். ஒரு பட்டணத்தில், அநேக சாஸ்திரங்களைப்படித்த கேசவனென்கிற ஒரு பிராம்மணா உண்டு. அவர் பாரியை யின் பெயர் சுசீலை. அந்தம்மாள் பதிபக்தியோடு புத்திர பௌத்திர ஸம்பத்துடன் கூடினவளாய், அனேக விரதங்க ளைச் செய்துக்கொண்டு, அனேக யாகபலன்களை அடைந் துக் கொண்டிருந்தாள. ஒருநாள் சுசீலை ஜ்வரத்தினால்

பிடிக்கப்பட்டு, திடீரென்று மரணமடைந்தாள். அவளை எமதூதர்கள் எமனிடத்திற்கு அழைத்துக் கொண்டுபோய், ஐயா, இந்தம்மாளை நாங்கள் மிக பிரயாசத்துடன் பிடித்துக் கொண்டுவந்தோம் என்று அறிவித்தார்கள். உடனே எமன் அந்த ஸுசீலையை சுவர்க்க வாசற்படி மூடி இருக்கிறது, பாபிகளிருக்கு மிடத்திற்கு கொண்டு போவென்று உத்திரவு செய்தார். உடனே சுசீலை 'எமதர்மராஜனே! நான் விடாமல் எப்போதும் பதிபக்தியுடன் அவருக்கு பணிவிடைகள் செய்துக் கொண்டு, நோன்புகள் நூற்று காலம் கழித்து வந்தும், என்னை ஏன் தயவின்றி பாபிகளிருக்குமிடம் அனுப்ப நினைத்தாய்' இது நியாயம் தானோ வென்று கேழ்க்க, எமன் சுசீலையைப் பார்த்து, ஓ ஸ்திரீயே, நீ சொன்னதெல்லாம் உண்மையே, ஆகிலும் நீ சித்திரகுப்த விரதம் செய்யவில்லை. ஆகையால், என் தூதாள் உன்னை எமபுரத்துக்குக் கொண்டு வந்தார்கள் என்று சொல்ல, அப்போது சுசீலை, எமனை நோக்கி: அந்த விரதம் செய்தாலென்ன பலன்? எப்படி செய்யவேண்டியது? எந்த தேவதையை பூஜைசெய்யவேண்டியது? அதை விபரமாகச் சொலலுமென்று கேழ்க்க, எமன் அந்த சுசீலையம்மாளுங்கு சொல்லுகிறார்: 'ஓ சுசீலா, சித்திரை மாதத்தில், சுக்கில பக்ஷத்தில் அல்லது (பூர்வ பக்ஷத்தில்) சப்தமி தினததில் சூரியன் மேஷ ராசியில் பிரவேசித்திருக்கும் போது, உதயத்தில் எழுந்து, சுததமான சீதல ஜலத்தில் ஸ்நானம்செய்து, நித்திய கர்மானுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, தன் வீட்டின் கிழக்கு திக்கில், மெழுகிக் கோலமிட்டு, எமன், சித்திரகுப்தன், சூரிய நாராயணன் இம் மூன்று தேவதைகளையும் பொன்னால் செய்து எமாய ஸோமம், ஸசித்திரசித்திரம், ஆகிருஷ்ணேனரஜஸா என்று

சொல்லும் மந்திரங்களோடு வரிசைப்படி ஆவாஹனம் செய்து, சோடசோபசார பூஜைகள் அந்த பிரதிமைகளின் மீது பூஜை செய்து, பிறகு இதேமாதிரி ஒவ்வொரு மாதத்திலும் பூஜைகள் செய்து, அந்தந்த மந்திரங்களால் அர்க்கியங்கள் விடவேண்டியது. இப்படி பனிரெண்டு மாதமும செய்துவரவேண்டியது. விரத ஆரம்பத்திலாவது, மத்தியிலாவது, முடிவிலாவது, (உத்தியாபனை) விரபூர்த்தி செய்யவேண்டியது. உத்தியாபனை செய்வதற்கு முந்தினனாள், ஷஷ்டிதிதி தினத்தில் உபவாஸமாயிருந்து, ராத்திரி கலசஸ்தாபனம் செய்யவேண்டியது.

முதலில், கணபதி பூஜையும், பிறகு புண்ணியாஹவாசனம் செய்து, மண்டபம் ஏற்படுத்தி, இலையின்மீது ஐந்து பரக்கால் அரிசி கொட்டி, அதில் அஷ்டதள பத்மமெழுதி, அதின்மீது நல்ல தாம்பிரபாத்திரங்களால் ஐந்து கலசங்கள் வைத்து, அந்த கலசங்களின்மீது புதிய வஸ்திரங்கள் வைத்து அலங்கரித்து, அதில் பிரம்ஹாதி பஞ்சபாலிக்கைகளையும், இந்திராதி அஷ்டதிக் பாலகர்களையும் பிரம்ஹாவாஹனம் செய்து, பிறகு மத்தியில் எமன், எமனுடைய வலது பக்கத்தில் சித்திரகுப்தனையும், இடது பக்கத்தில் சூரியனையும ஆவாஹணம் செய்து எமனுக்கு சிவப்பு வஸ்திரம் நாலு புஜங்களுடன் கையில் தண்டாயுதமும் தரித்தாப்போல் ஆவாஹனம் செய்யவேண்டியது. அந்தந்த தேவதையினுடைய மந்திரத்தால் சாஸ்திரவிதிப்படி பூஜை செய்ய வேண்டியது. சித்திரகுப்தன் பக்கத்தில வெள்ளியால் ஓலையும், பொன் எழுததாணியும் வைத்து அவனையும் பூஜை செய்யவேண்டியது. மூன்று மரக்கால் நெல்லு கூடையில் கொட்டி, அந்தக் கூடைகளின்மீது புது வஸ்திரங்கள் விரித்துப்போட்டு, எம, சித்திரகுப்த, சூர்ய நாரா

யண பிரதிமைகளை வைத்து, ராத்திரி நாலுஜாமமும் பூஜை செய்துக்கொண்டு ஜாகரணம் செய்யவேண்டியது. சப்தமி அன்று காலையிலெழுந்து ஸ்நாந நித்தியானுஷ்டானங்கள் முடித்துக்கொண்டு, சக்திக்குத்தக்கபடி பூஜைசெய்து,பிராமணுளை வருணம் கொடுத்து ஏற்படுத்திக் கொண்டு க்ஷீர தர்பணம் (பாலினல்) தர்ப்பணுதிகள 108-தடவை சமுத்து, நெய், செரு, அல்லது சத்துமாவைக் கொண்டு ஹோமம் செய்துவைத்து, ஜயாதி-பூர்ணுஹுதி செய்துவைக்கவேண்டும். சிவப்பு சந்தனம் (அகரு சந்தனம்) சிவப்பு அக்ஷதை, சிவப்பு புஷ்பம் இவைகளுடன் பூஜை செய்யவேண்டும். பிறகு கோதானுதி தசதானங்கள், சோடச மஹா தானங்கள செய்யவேண்டியது. முன்னே பூஜை செய்த பிரதிமைகளையும், பிராம்ஹணுளுக்கு தானம் செய்யவேண்டியது. வேத சாஸ்திரங்கள் படித்த பிராம்ண வைதீகர்களுக்கு, 30-பேருக்கு குறையாமல் ஷட்சுரஸோபேதமாய் அறுசுவை அன்னபிரதானம் செய்யவேண்டும். தானியங்களுடன் அந்த வஸ்திரங்கள் முதலியன விரதம் நடத்தின உபாத்தியாயருக்கு தானம் செய்யவேண்டியது. இந்த விரதம் விதியுடன் நடத்துகிறவர்களுக்கு, சுவர்க்கலோகம் உண்டாகும், நரகம் கிடையாது. ஓ சுசீலா, நீ பூலோகத்திற்குப்போய், இந்த விரதம் செய்து உன் பர்த்தாவுடன் சுகமாய் வா, சுவர்க்கத்துக்குப் போகலா மென்று, எமதருமனுல் சொல்லப்பட்டது. சுசீலையும் மேற்சொன்னபடிசெய்து சுவர்க்கலோக மடைந்தாள். என்று ஈஸ்வரனுல் சொல்லப்பட்டதைக் கேட்டு, குமாரசுவாமியும் இந்த விரதம செய்தார். ஆகையால், ஓ முனிசிரேஷ்டர்களே, நீங்களும் இவ்விரதத்தை செய்யுங்கள் என்று சூதபௌராணிகர், சௌனகாதி மஹரிஷிகளுக்கு சித்திரகுப்த விரத மகிமாதிசயங்களை உப

தேசித்தார்'' இந்தக் கதையைச் செவியினால் கேட்டாலும், வாயினாற் படித்தாலும சகல பாபமும் நிவர்த்தியாகும். இந்த விரதம் செய்கிறவர்கள் சகல பாபத்தினின்றும் பிணி யற்ற நீண்ட ஆயுளுடனும், திரண்ட ஐஸ்வரியத்துடனும், புத்திர சம்பத்துடனும் வாழ்ந்து கடைசியில் மோக்ஷபதவி யை அடைவார்கள். இந்த சரித்திரம் ஸ்காந்தபுராணத்தில் சிவபெருமானுக்கும், குமாரசுவாமிக்கும் நடந்த சம்வாதத் தில் சொல்லிய சித்திரகுப்த விரதகதையின் மஹிமை.

இவ் விரதத்தை சாஸ்திரப்படி பயபக்தியாய் அனு சரித்து பூஜை செய்கிறவர்களுக்கு சிவபக்தி விர்த்தியும், கடவுள் கிருபையும் திண்ணமாய் உண்டாகும்.

சிவார்ப்பணமஸ்து

முற்றிற்று.

---

# பக்தேஸ்வர விரத கல்பம்.

## பூஜாரம்பம்.



சுபேசோபனே முஹூர்த்தே ஆத்தியப்பிரம்ஹணः திவிதீயபரார்த்தே ஸ்வேதவராஹகல்பே வைவஸ்வத மன்மந்தரே கலியுகே பிரதமபாதே ஜம்பூதிவீபே, பரதவருஷே பரதகண்டே அஸ்மின் வாத்தமானே, வியாவஹாரிக சாந்திரமானேந, ஸம்வத்ஸரே, அயனே, ருதௌ, மாஸே பக்ஷே, அஸ்யாம் பூர்ணிமாயாம் வாஸரௌ சுபநக்ஷத்திர, சுபயோக, சுபகரண ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌமம பர்தாஸஹ, க்ஷேமஸ்தைர்ய விஜயாயுராரோக்கியைஸ்வர்யாபி விருத்தியர்த்தம் தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த சித்தியர்த்தம் இஷ்ட காம்மியார்த்த சித்தியர்த்தம் மம ஸமஸ்த துரிதோப சாந்தியர்த்தம், ஸமஸ்த மங்களா வாப்தியர்த்தம் புத்திர பௌத்திராபி விருத்யர்த்தம், ஸௌவாஸினீத்வ சித்தியர்த்தம் ஹஸ்தி, அஸ்வரதாந்தோளிகாச் சத்ரவாஹனாதி பிராபதியர்த்தம், வந்தியாத்வ நிவிர்த்தியர்த்தம், அகண்டித ஸக்ஷ்மீபிரஸாத சித்தியாத்தம், ஸ்ரீ பக்தேஸ்வர தேவதா முத்திஸ்ய ஸ்ரீ பக்தேஸ்வர தேவதாப் பிரீத்தியர்த்தம், ஸம்பவிதா நியமேன ஸம்பவிதாப் பிரகாரேண, ஸம்பவத்பி திரவ்வியைः, ஸம்பவத்பி ருபசாரைஸ்ச கல்போக்தப் பிரகாரேண யாவச்சக்கிய தியானு வாஹனாதி, ஷோடசோபசார பூஜாம் கரிஷ்யே நமः]. இவ்விதமாய் ஸங்கல்பம செய்துக்கொண்டு, பிறகு கலச பூஜை செய்யவும். அதற்குப்

பிறகு, கணபதி பூஜை செய்து, உடனே பக்தேஸ்வர சுவாமிக்கு, பிராண பிரதிஷ்டை செய்து சுவாமியை தியானம் செய்கிறது. சு. ஸத்யோ ஜாதமபவம் சைவ வாமதேவம் பவோத்பவம், ஜேஷ்ட சிரேஷ்டம ததோருத்ரம காலகண்டம விசர்னகட, பலம் பலப்பிரமதனம் பூதக்கினஞ்ச மனோன்மனம, ஸதஜியோஜாதம் திரிணேத்ரம் ஸகல ஸுரநுதம் கோடி சூர்யப்ரகாசம், விக்கியாதம் வாமதேவம், ஹ்யுதிதர விநிப்பம, ஸஜ்ஜநாநாம் அக்கோரம், சத்ருணாம் கோரரூபம், ஹியனலசதநிப்பம், தத்வபூர்ஷம் சிதாப்பம், ஈசானம் சாநதரூபம், ஸ்படிகமணிநிபம், சிந்தயேத் பஞ்ச வக்த்ரம் || பக்தேஸ்வர சுவாமினே நம: தியாயாமி || ப்பவோத்பவம் சிவாதீதம், ப்பானுகோடி பிரபம் விபும், ஆவாஹயாமி பூதேசம் பவாநீபதி முத்தமம் || பக்தேஸ்வராய நம: ஆவாஹயாமி. வாமதேவ விரூபாக்ஷ, விபாஸ ஸன்னுதவை சிவ, வேதஸ்வரூபவரத ஆஸனம் ப்ரதி கிருஹ்ஹியதாம். பக்தேஸ்வராய....நம: ஆஸனம் ஸ—மி. ஜ்யேஷ்டரூப நமஸ்துப்யம, பஸ்மாத்தூளித விக்கிரஹ, ஜெயஜைத்ர விபூதேத்துவம், கிருஹாணார்க்கியம் மயார்பிதம்|| பக்தேஸ்வராய....நம: அர்க்கியம் ஸ—மி. ஸுரசிரேஷ்ட ஜகசிரேஷ்ட, சிரவணாநந்த வைபவ, பாத்தியம் கிருஹாண ஹேசம்போ, தேவேச விருஷபத்துவஜ || பக்தேஸ்வராய....நம: பாத்தியம் ஸ—மி. ருத்திர ரௌத்திர ரஞ்சசாஹ. ராஜராஜப் பிரஸன்னுத, பஞ்சாமிருத ஸநாநமிதம் குரு கல்யாணதாயக || பக்தேஸ்வராய....நம: பஞ்சாமிருத ஸ்நாநம் ஸ—மி. கலவிகரண விபோ, கமலாஸவந்தித, கார்த்திகேயஸ்ய ஜனக, ஸ்நாநம் குருதயாநிதே || பக்தேஸ்வராய ..நம: சுத்தோதக ஸ்நாநம் ஸ—மி. பலவிகரணபல பானுகோடிப்ரபாகர, பிருந்தாரகார்சிதபத,

வஸ்திரமாச்சாதனம் குரு || பக்தேஸ்வராய....நமః வஸ்திரயுக்மம் ஸ—மி. பலபிரபல ஸுப்ல பாணஸுரவரப்பிரத, பீஜரூப பிருஹத்தாம உபவீதம் கிருஹாணபோ || பக்தேஸ்வராய நமః|| எக்ஞோபவீதம் ஸ—மி. பலப்பிரமதனபல, புத்திரூப புதப்பிரிய பில்வபத்ரப்ரியபல, பூஷணாநி கிருஹாணபோ || பக்தேஸ்வராய....நமః ஆபரணாநி ஸமர்ப்பயாமி || ஸாவபூதப் பிரமதன ஸர்வக்ஞ ஸகலோத்பவ, ஸாவாத்மன் ஸர்வபூதேச, ஸுகந்தம், ஸங்கிருஹாணபோ || பக்தேஸ்வராய....நமః கந்தான் ஸ—மி. மனோன்மன மஹாபாகா, மாயாதீத மஹேஸ்வர, மஞ்ஜுமஞ்ஜீர சரண ஸங்கிருஹாணக்ஷதான்விபோ || பக்தேஸ்வராய.... நமః || அக்ஷதான் ஸ—மி. அகோர பரமப்பிரக்கிய, அசிந்தியா வ்யக்தலக்ஷண, ஆனந்தாதித்திய ஸங்காச, புஷ்பாணி பிரதிகிருஹ்ஹியதாம் || பக்தேஸவராய நமః புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

## அதாங்க பூஜா.

| | |
|---|---|
| ஸத்தியோஜாதாயநமః | பாதௌ பூஜயாமி |
| பவோத்பவாயநமః | குல்பௌ பூ—மி |
| பவாயநமః | ஜங்கே பூ—மி |
| வாமதேவாயநமః | ஜாநுநீ பூ—மி |
| ஜ்யேஷ்டாயநமః | ஊரு பூ—மி |
| சிரேஷ்டாயநமః | கடிம் பூ—மி |
| ருத்திராயநமః | குஹ்யம் பூ—மி |
| காலாயநமః | நாபிம் பூ—மி |
| கலவிகரணாயநமః | உதரம் பூஜயாமி |
| பலவிகரணாயநமః | ஹிருதயம் பூ—மி |

| | |
|---|---|
| பலாயநம: | ஸ்தனௌ பூ—மி |
| பலப்பிரமதனாயநம: | புஜௌ பூ—மி |
| ஸர்வபூததமனாயநம: | வாமஹஸ்தம் பூ—மி |
| மனோன்மனாயநம: | வாமாங்குளீன் பூ—மி |
| அக்கோராயநம: | தக்ஷிணஹஸ்தம் பூ—மி |
| கோராயநம: | தக்ஷிணாங்குளீன் பூ—மி |
| கோரகோரதராயநம: | கண்டம் பூ—மி |
| ஸர்வாயநம: | ஸ்கந்தௌ பூ—மி |
| சர்வாயநம: | சுபுகம் பூ—மி |
| ருத்திரரூபாயநம: | முகம் பூ—மி |
| தத்புருஷாயநம: | ஜிஹ்வாம் பூ—மி |
| மஹாதேவாயநம: | நாஸிகாம் பூ—மி |
| ருத்திராயநம: | வாமசுரோத்திரம் பூ—மி |
| ஈசானாயநம: | தக்ஷிணசுரோத்திரம பூ—மி |
| ஸர்வவித்தியாதிபதயேநம: | வாமநேத்திரம் பூ—மி |
| ஈஸ்வராயநம: | தக்ஷிணநேத்திரம் பூ—மி |
| ஸர்வபூதாதிபதயேநம: | லலாடம் பூ—மி |
| பிரம்ஹாதிபதயேநம: | சிர: பூ—மி |
| சிவாயநம: | ஜடாஜூட்டம் பூ—மி |
| ஸர்வேஸ்வராயநம: | ஸர்வாண்ணியங்காநி பூஜயாமி |

சிவாஷ்டோத்திர சத நாமபூஜை செய்யவும். இந்த அஷ்டோத்திரம், கேதாரேஸ்வர விரதத்தில் எழுதியிருக்கிறது, பார்த்துக் கொள்ளவும். இஷ்டமானால், ஸஹஸ்ர நாமமும் செய்யலாம்.

---

## தூபதீப நைவேத்தியங்கள்.

கோரரூப நமஸ்துப்பியம், ஸர்வ காமார்த்ததாயக, தாப: ஸ்வரூபதனத தூபோயம் பிரதிகிருஹ்ஹியதாம் || பக்தேஸ்வராய....நம: தூபமாக்கிரபயாமி|| கோரகோர நமஸ்துப்பியம், கட்ககேடதராவ்வியய, கண்டேந்து பௌளீசிகர தீபோயம் பிரதி கிருஹ்ஹியதாம்|| பக்தேஸ்வராய....நம: தீபம் தர்சயாமி || நம:ஸர்வாயஸர்வேச, ஸர்வாவாஸஸநாதன, ஸதாநந்த ஸுராசிரேஷ்ட, நைவேத்தியம் பிரதி கிருஹ்ஹியதாம் பக்தேஸ்வராய....நம: நைவேத்தியம் ஸமர்ப்பயாமி|| சர்வாயச நமஸ்துப்பியம், ரஜநீகரபூஷண, சம்போ சங்கரகௌரீச, தாம்பூலம் பிரதிகிருஹ்ஹியதாம் பக்தேஸ்வராய....நம: தாம்பூலம் ஸமர்ப்பயாமி. ருத்திர ரூப நமஸ்துப்பியம், பக்தப்பிரியசதாசிவ, கஜசர்மபரீதான நீராஜனமிதம்தவ. பக்தேஸ்வராய....நம: கர்பூரநீராஜனம் ஸமர்ப்பயாமி|| தத்புருஷாய நமஸ்துப்பியம், திரயீமயத்ரிலோசன, திரிஸ்வராகாரதத்வக்ஞ, மந்திரபுஷ்பம் கிருஹாணபோ பக்தேஸ்வராய....நம: மந்திரபுஷ்பம் ஸமர்ப்பயாமி. சு. சாந்தம் பத்மாஸனஸ்தம் சசிதரமகுடம், பஞ்சவக்திரம், திரிணேத்திரம் சூலம் வஜ்ஜிரஞ்சகட்கம பரசுமபயதம, தக்ஷபாகேவஹந்தம், நாகம் பாசஞ்சகண்டாம், ஸ்படிகமணிநிபம் பார்வதீசம் நமாமி|| சு. மஹாதேவ நமஸ்துப்பியம், மாயாதீத மஹாமதே, பிரதக்ஷணம் கரோமித்துவாம், பாபம் நாசயமேப்ரபோ || பக்தேஸ்வராய....நம: பிரதக்ஷணம் ஸமர்ப்பயாமி|| ஈசானாய நமஸ்துப்பியம் பார்வதீபதயே நம: ஸர்வேஸ்வர நமஸ்துப்பியம், பஞ்சசக்திர் நமோ நம:|| சு. சத்தியோஜாத நமஸ்துப்பியம், வாமதேவாயதே நம: அகோராய நமஸ்துப்பியம், தத்புருஷாயதே நம: பக்

தேஸ்வராய நமஃ நமஸ்காரான் ஸமர்ப்பயாமி. குபேர மித்திர தேவேசபூதேசத் திரிபுராந்தக, பார்வதீ ஹிருதயானந்த, கிருஹாணார்க்கியம் நமோஸ்துதே|| பக்தேஸ்வராய நமஃ இதமர்க்கியம் ஸமர்ப்பயாமி. சு. கைலாஸவாஸின் தேவேச புவனத்ரயபாலக|| ஹிமவத்புத்திரிகாகாந்த, கிருஹாணார்க்கியம் நமோஸ்துதே பக்தேஸ்வராய.... நமஃ இதமர்க்கியம் ஸ—மி. சந்திரமௌளேத்ரயீனேத, ஜடாமகுடசோபித, உமாகாந்தநமஸ்துப்பியம், கிருஹாணார்க்கியம் நமோஸ்துதே பக்தேஸ்வராய நமஃ இதமர்க்கியம் ஸ—மி. ருணபாதக தௌர்ப்பாக்கிய, தாரித்திரிய விநிவிர்த்தயே, அசேஷாக்க விநாசாய ப்ரஸீத மமசங்கர|| சு. துக்கசோகாதிஸந்தப்தம், ஸம்ஸாரபயபீடிதம், பஹு ஜன்மாகுலம் தீனம், திராஹிமாம் விருஷவாஹன|| பக்தேஸ்வராய நமஃ, பிரார்த்தனும் ஸமர்ப்பயாமி|| ஏஸயஸ்மிருத்தியாச நாமோக்தியா, தபஃ பூஜாகிரியாதிஷு நியூநம்ஸம் பூர்னதாம்யாதி, ஸத்தியோவந்தே ஸசங்கரம, மந்திரஹீனம் கிரியாஹீனம் பக்திஹீனமுமாபதே அநேந பூஜாவிதாநேந பக்தேஸ்வராய.... நமஃ ஸுப்ரீத ஸுப்ரஸன்னோ வரதோபவது||

இதி பூஜாவிதானம் ஸம்பூர்ணம்.

---

# பக்ஷேஸ்வர விரத கதை.

ஒருநாள் நைமிசாரண்ணிய வாசிகளாகிய சௌனகாதி மஹரிஷிகள், முனி சிரேஷ்டரும் சகல புராண இதிஹாஸங்களை அறிந்தவருமாகிய ஸூதமஹா முனிவரைப்பார்த்து: "ஓமஹர் ரிஷியே, தங்களிடத்தில் அனேக விரத கதைகளைக் கேட்டிருந்த போதிலும், நாங்கள் மனத்ருப்தி அடையாமல் இருக்கிறபடியால், மென்மேலும் மிக ரகசியமான இன்னொரு கதை தங்களால் கேழ்க்க விரும்புகிறோம். தாங்கள் தயைசெய்து சொல்லவேண்டு" மென்று கேழ்க்க அப்போது ஸூதர் சொல்லத் தொடங்கினார்; "ஓ சௌனகாதி ரிஷி சிரேஷ்டரே, புத்திர பௌத்திர ஆயுர் விருத்தியும், முக்திகரமுமான பக்ஷேஸ்வர விரத மொன்று சொல்லுகிறேன் கேளுங்கள்: முன்னொரு காலத்தில் கைலாஸத்தில் மிக அழகான நிர்மலமான ரத்தின சிம்ஹாஸனத்தில் சுகமாய் வீற்றிருந்து உலகங்களுக்கு க்ஷேமத்தையுண்டாக்கும்படியாய் பரமசிவனைப் பார்த்து உலகத்துக்கு நல் விஷயங்களை விருத்திசெய்ய விரும்பினவளான பார்வதியானவள் பிரஸ்னை செய்து கேட்டதாவது ஸமஸ்தமான பேருக்கும் சுகம் கொடுக்கும்படியானதும் ஓ பரமசிவா உங்களுக்கு நமஸ்காரம் செய்கிறேன், புத்திர ஸம்பத்தும், ஆயுராரோக்கியமும கொடுக்கும்படியானதும் மலட்டுத்தனம் முதலிய தோஷங்களினின்றும் காப்பாற்றும்படியான உலக நன்மைக்குரியதான ஒரு கதை எனக்குச் சொல்ல வேண்டுமென்று பிரார்த்தித்து தங்களுடைய உத்திரவை சிரஸாவஹித்து அந்த விரதம் செய்கிறேன் என்று சொல்ல, பரம

சிவன் சொல்லுகிறார்: "ஓ பார்வதீ, நான் சொல்லும் விரதத்தை நன்றாய் கேழ்ப்பாயாக, சரதருதுவில், கார்த்திகை மாத பூர்வபக்ஷ பருவத்தில உதயகாலத்தில் விதிப்படி ஸ்நாநாதி நித்தியகர்மங்களை முடித்து சித்திரவஸ்திரம் தரித்து, மஞ்சள், குங்குமம் தரித்துககொணடு கணணுககு மையிட்டு ஆபரணங்கள் தரித்துக்கொண்டு, பர்த்தாவின் உத்திரவு பெற்று விரதாசரணம் செயயவேண்டும். நல்ல சந்தனத்தினுல் ஈஸ்வரனையும், மஞ்சளால் பார்வதியையும், மணலால், நந்தியையும் ஏற்படுத்திக்கொண்டு, சிவ நாம மந்திரங்களால் பூஜை செய்ய வேண்டும். ஸ்திரீகள் நான்கு வர்ணத்தாரும் இவ்விரதம் செய்யலாம். சூரியன் அஸ்தமித்த பிறகு, வீட்டிலாவது அல்லது தேவாலயததிலாவது கோமயததால் மெழுகிய சுத்தமான இடத்தில், சித்திரக் கோலங்களிட்டு மண்டபமேற்படுத்தி மாயிலை தோரணங்கள் கட்டி அப்பிரதேசத்தில், பார்வதி பரமேஸ்வரர்களை ஆவாஹனமசெய்து பூஜைசெய்யவேண்டும். பக்தியோடு பூஜிப்பதால் பக்தேஸ்வரரென்று பெயர் வழங்குகிறது. ஸர்வமங்களமாங்கல்யே, சிவேஸர்வார்த்த ஸாதகே, சரண்ணியே திரயம்பகே கௌரீ, பக்தேஸ்வர நமோஸ்துதே என்னும் புராணமந்திரத்தால் தியானுவாஹனுதி சோடசோபசார பூஜைகள் செய்து, மூங்கிலால் அநேக ரந்திரங்களுள்ள ஜல்லடை ஏற்படுத்திக் கொண்டு முப்பத்திமூன்று கட்டுகள் பொன் கம்பியால் கட்டி, பூமியின் பேரில், பருப்பு, நெய், சர்க்கரை முதலியவைகள் சேர்த்தமாவினுல் அப்பங்கள் தட்டிப் பரப்பிவைத்து, அதின்மீது ஜல்லடையைவைத்து, அதின் மத்தியில் ஒரு தோசையைவைத்து, அதின்மேல் சர்க்கரையும் நெய்யும் போட்டு, பச்சரிசிமாவினுல் செய்த மாவு விளக்கு பாத்திரத்தில் வர்த்தி

போட்டு நெய்விட்டு விளக்கேற்றி, பிறகு, சுமங்கலியை பூஜித்து கௌரீ பக்தேஸ்வரர் சந்தோஷத்தின்பொருட்டு, அந்த (வேணு பாத்திரத்தை) அதாவது ஜல்லடையை தானம் செய்யவேண்டியது. கௌரீ பக்தேஸ்வரர்களை பிரார்த்தித்து, என்னை காப்பாற்றும். இந்த தானத்தி ஞல் திருப்தி அடைந்து, எங்கள் குலத்தில் தீர்காயுசுடன், என் பர்த்தாவையும், புத்திர பௌத்திராதிகளும், தனதானிய ஸம்பத்தும், பசு விருத்தியும், பந்துக்கள் விருத்தியும் எனக்குக் கொடுத்து அனுகிரஹித்து எம்மை ரக்ஷிக்கவேண்டு மென்று பிரார்த்தனை செய்துக் கொண்டு, இவ்விதமாய் முதல் பருவத்தில் ஆசரித்துசெய்யவேண்டும். முன்போலவே, மார்கழிமாத பருவத்திலும், மாவு விளக்குகள் இரண்டும், இரண்டு தோசையும் வைத்து, தன் ஆயுள் விருத்திக்காக கௌரி தேவிக்குக கொடுப்பது. தைமாதத்தில் பருவதினத்தில் மூன்று விளக்கும், மூன்று தோசையும், மாசிமாதத்தில் நான்கு தோசையும், நான்கு விளக்கும் பங்குனிமாதத்தில் ஐந்து விளக்கும், ஐந்து தோசையும், சித்திரைமாதத்தில் ஆறுதோசையும், ஆறுவிளக்கும், வைகாசிமாதத்தில் ஏழுதோசையும். ஏழுவிளக்கும் இம்மாதிரியாய் ஏகோத்திர விருத்தியாக முப்பத்திமூன்று பருவங்களிலும் ஆசரித்துச் செய்யவேண்டியது. அப்போதைக்கப்போது தேவிசமீபத்தில் வைத்த தீபங்களையும் தோசைகளையும் சுமங்கலிக்கு தாம்பூல தக்ஷிணைகளுடன் கொடுக்க வேண்டியது'' ஓ பார்வதிதேவி ஸ்திரீகளுக்கு, சௌபாக்கிய கரமான இந்த விரதம் சொன்னாய், ஆனல் பூர்வத்தில் இவ்விரதம் யார் செய்து அனுசரித்தார்கள் என்று கேழ்க்க, இதற்கொரு இதிஹாஸமுண்டு அதைக் கேழ்க்

கிறவர்களுக்கு எல்லா பாவங்களும் விலகி மூவுலகத்திலும், ஸத்கீர்த்தி அடைவார்களென்று, ஸூதர் வாக்களிக்கிறார்.

பூமண்டலத்தில் கிருதமாலா என்னும் நதிக்கரையிலுள்ள மதுராபட்டணத்தில் மிக தர்மகுணங்களாலும் ரூபமும் ஸம்பத்துமுள்ளவனையும், இராஜ லக்ஷணங்களுடன் கூடியவனையும், சாஸ்திரங்கள் தெரிந்தவனையும், தனவந்தனையும், சூரனையும், சௌரிய தைரியமுமுள்ளவனாய் பிரதாபத்தினாலும் கீர்த்தியினாலும் மூன்றுலோகங்களிலும் பேர்பெற்றவனான சந்திரவமசத்தில் பிறந்த சந்திரபாண்டிய மஹாராஜரென்றொருவரிருந்தார். அவருக்கு மஹா பாக்கியசாலியும், பதிவிரதாசிரோன்மணியும், பெரியோர்களைப் பூஜிக்கக்கூடியவளுமான குமுத்துவதி என்னும் பாரியாள உண்டு. அப்படிக்கொத்த அனுகூலமான களத்திரத்தினால் கூடியவரும், பூமியை யுடையவரும, மெத்தைமேடைகளால் பிரகாசிக்கின்ற பட்டணத்தையுடையவரும், விசேஷ தர்மங்களுடன் பரிபாலனம் செய்துக்கொண் டிருப்பருமானவர், புத்திர ஹீனத்தால் ஜனங்களில்லா வனத்தில், மிக பக்தியோடு நிராதாரனையும், ஜிதேந்தியனையும், சிவத்தியானம் செய்துக்கொண்டு சிவபஞ்சாக்ஷரமந்திரம் ஜெபித்துக்கொண்டு, பதினயிரவருஷம் இரவும் பகலும் ஒருபாதத்தின்மீது நின்றுக்கொண்டு தவம் புரிந்தார். இப்படி தவம் புரியும் போது, பத்துவருஷம், பழங்களைப் பக்ஷித்தும், முப்பது வருஷம் ஜலாஹாரம் செய்துக்கொண்டும, வெயில்காற்று குளிர் மழை முதலியவைகளைச் சகித்துக்கொண்டு அஹங்காரமற்றவனாய், ஊமத்தம் பூவினாலும், அநேகமான தாமரை கமலங்களினாலும் சிவனை பூஜைசெய்து அதிதிகளுக்கு கந்தமூல பலங்களால் திருப்தி படுத்திக் கொண்டிருந்தார். அவருடைய ஆஸ்சிரமத்தில், மிக ஆச்சரியமான தபோ

பலத்தினால் புலிகளுடன் பசுக்களும், சிங்கங்களுடன் யானைகளும், கீரிப்பிள்ளைகளோடு ஸர்ப்பங்களும், ஜாதி பேதம் விட்டு விளையாடிக்கொண் டிருந்தது. சூரியன் பிரகாசிக்காமலிருந்தார், தேவதைகளும் நடுங்கி அவருடைய தபசைப்பற்றி ஆலோசித்துக் கொண்டிருந்தார்கள். இப்படியிருக்க, அவருடைய உக்கிரமானதபசைமெச்சி பார்வதி பரமேஸ்வராள் திருப்தி அடைந்து பிரத்தியக்ஷமாய், தயையுடன் பரமசிவன் கேழ்க்கிறார்: ஓ ராஜ ராஜேந்திரரே உங்கள் பிதுர்க்களுடைய ராஜ்ஜியத்தைவிட்டு இப்படிக் காட்டில் என்ன காரணத்திற்காக தவம் புரிகின்றீர்கள என்று கேழ்க்க, இராஜன் தன் பாரியாளுடன் சிவவாக்கியத்தைக் கேட்டு, மிகதிருப்தி அடைந்தவராய், தண்டனிட்டு பக்தியோடு அஞ்ஜலிபக்தராய் கைகூப்பிக்கொண்டு, நான் தன்னியனானேன், அனுக்கிரஹிக்கப்பட்டேன், காப்பாற்றப்பட்டேன், பிரஸன்னமானீர். என் வம்ச விருத்தியின் பொருட்டும், இராஜ்ஜியம் பரிபாலிக்கும் பொருட்டும், தீர்காயுசுள்ள புத்திரனைத் தரவேண்டுமென்று கேழ்க்க, ஜன்மாந்திரபாபத்தினால் உனக்கு ஸந்தானமில்லை, ஆகிலும் உன் பக்திக் கிணங்கி உன் கோரிக்கையை நிறைவேற்றுகிறேன். மாங்கல்யஹீனமான சிரஞ்சீவியான பெண் வேண்டுமா? அற்ப ஆயுளுள்ள புத்தியுள்ளவனான புத்திரன்வேண்டுமா? என்னவேண்டும் உன் கோரிக்கையை சொல்லுமென, இராஜன் சொல்லுகிறார்: பெண் தேவையில்லை, புத்திரனையே தயவு செய்யுமென்றுசொல்ல, பரமேஸ்வரன் ததாஸ்து என்று சொல்லி பார்வதி பரமேஸ்வராள் அந்தரத்யானமடைந்தார்கள். இராஜன் பட்டணம்வந்து சேர்ந்தார். சிலகாலத்திற்குப்பிறகு, குமுத்வதி சந்திரபாண்டிய மஹாராஜனால், கர்ப்பமடைந்தாள். பத்தாவது மாதத்தில், சுப

நக்ஷத்திரயுக்தமான தினத்தில் ராஜலக்ஷணங்களோடுகூடிய நல்ல தேர்ச்சியுள்ள புத்திசாலியான புத்திரனைப் பெற்றாள். இராஜன் இந்த சுபவார்த்தமானம் கேட்டு புத்திரோத்ஸவம் செய்து பிராம்ஹணளுக்கு விசேஷதனம் தானம் செய்தார் ஜாதகர்மாதிகிரிகைகள் செய்து, ஈஸ்வரபாண்டியனெனும் நாமகரணம் செய்து, எட்டாவது வயதில் உபநயனம் செய்து, சகல வித்தைகளையும் கற்பித்தார். பதினாறுவயது வந்த உடனே இந்த புத்திரன் எவ்விதத்தால் தீர்க்காயுசு உடையவனாவான் என சிந்தித்துக் கொண்டு விவாஹம் செய்த பிறகு தெரியத்தக்கதென்று எண்ணி இருந்தார். இப்படியிருக்க அந்த சமயத்தில், மேன்மையானமனதுள்ளவனும், சிவபக்தனும், அலகாபுரியை பரிபாலிக்கும் மித்ரஸஹ னென்னும இராஜனொருவன் உண்டு. அவனுக்கு பக்தேஸ்வர விரதம் செய்யப்பட்ட கலாவதி என்னும் பாரியாளுண்டு. அவர்களுக்கு பக்தேஸ்வர விரதாப்பியாஸத்தால் ஒரு பிள்ளையும், ஒரு பெண்ணும் உண்டானார்கள். அக்கன்னிகைக்கு யௌவனம் வந்த உடனே கன்னியாதானம் செய்ய வேண்டு மென்று யோசித்திருக்க, மதுரை பட்டணத்து எஜமானனுடைய மந்திரிகள், அந்த கன்னிகையைப் பார்க்க அவ்விடம் சென்றார்கள். அப்போது மித்திரஸஹ மஹாராஜன் அந்த மந்திரிகளை வரவழைத்து தன்குமாரத்தியைக் கன்னியாதானம் செய்கிறதாய்சொல்லி மதுராபட்டணத்து இராஜனை சீக்கிரமாய் பந்துமித்திர ஸமேதராய் இவ்விடம் அழைத்து வரவேண்டுமென்று சொல்ல, அந்த மந்திரிகள் மதுரைக்குச் சென்று, இந்த சுப விருத்தாந்தம் எல்லாம் இராஜனுக்கு தெரிவித்தார்கள். அப்போது இராஜன் ஸந்தோஷித்து பார்யாள் பந்து ஸமேதராய், சதுரங்க சைனியத்துடன் அலகாபுரிக்கு வந்தார். வந்தவர்களை மித்திர

ஸஹுராஜன் பார்க்து ஸந்தோஷித்து, சாஸ்திரோக்த விதிப் படி பூர்ணமி தினத்தில் விவாகம நடத்தினார். அவர் பார் யாள் கலாவதி அந்த பருவதினத்தில் பக்தேஸ்வர விரதோத்தியாபனை செய்வதற்கு பிரயத்தனம் செய்து, முப பத்திமூன்று பொன் கட்டுகள் போட்ட ஜல்லடையில், சந் தனத்தால், ஈசுவரனையும், பஞ்சவால் சௌரி தேவியையும, மணலால் நந்தியையும் ஏறபாடு செய்துக்கொண்டு கல் போக்தப் பிரகாரமாய் விதிவத்தாய், சந்தன புஷ்பாக்ஷதை யுடன் நன்றாய் பூஜை செய்து, பருப்பு, நெய், சர்க்கரை யுடன் கலந்த முப்பத்திமூன்று தோசைகளின்மீது, முப பத்திமூன்று மாவினாலசெய்த தீபங்களை வைத்துக்கொண்டு, கல்யாணி என்னும் பேருள்ள பெண்ணிற்கு, வஸ்திரம, சந்தனம், புஷ்பம், அக்ஷதைகள, மஞ்சல், குங்குமம, மைச் சிமிழ் இவைகளால் அலங்கரித்து பக்திபோடு, அந்த ஜல்ல டையை வாயனம் கொடுத்தாள. இநத தோசைகளும், பூரா ணங்களும் இருந்த அநத மூங்கில் பாத்திரத்தை பக்தேஸ் வரருடைய திருப்திக்காக நான் கொடுக்கிறேன், கொடுக கிறவர்களுக்கும் வாங்குகிறவாகளுக்கும், சௌமங்கல்யத் தைக் கொடுக்கவேண்டும், புததிர பௌததிராபி விருத்தி யையும் கொடுக்கவேணடும், விரத பரிபூர்த்திக்காக கொடுத் தேன் என்று சொலலி தானமசெய்து வரனுடைய ஸமீ பத்திற்கு, கன்னிகையை அனுப்பி, பந்துக்களோடு சாப் பிட்டுக்கொண்டு ஸுகமா யிருந்தார்கள். அபபோது கல் யாண மானவரனுடன், அந்த கனனிகையும் படுக்கை அறையில் இருக்கும்போது, அறைக்குச் சமீபத்தில் மிருத் தியு தேவதை வந்து, அடிக்கடி கதவைத் திறக்கவேண்டு மென்று சொன்னது. அந்த வார்த்தையைக் கேட்ட கல் யாணியானவள் கதவு திறக்கிறதில்லை என்று சொல்ல,

பிறகு மிருத்தியு தேவதை சொல்லுகிருன். நான் மிருத்தியு தேவதை, அற்ப ஆயுள் உள்ள உன் கணவனை க்ஷணத்தில் கொண்டுபோக வந்தேனென்று சொன்னுன். பிறகு கல்யாணியானவள் பக்தேஸ்வர ரனுக்கிரஹத்தினுல் சௌமாங்கல்யத்தால் என் பர்த்தாவிடத்தில் இருக்கிறேன், நீ எப்படி வருகிருய், போ போ வென்று சொல்லி, பரமசிவனைப் பிரார்த்தித்தாள். "சரணுகத வத்ஸலனே, தயாசமுத்திரனே, ஓ பக்தேஸ்வரா என்று, மிருத்யுகிரஸ்தனை என் பர்த்தாவை ரக்ஷிக்கவேண்டுமென்று வேண்டி ஸ்தோத்திரம் செய்தாள். இதற்குள் மிருத்துதேவதைக்கு கண்கள் சிவந்து மிக கோபத்துடன் அதட்டிக்கொண்டு காலால் கதவுகளை உதைத்து உடைத்து உள்ளே சென்று பிடித்துக்கொள்ள பிரயத்தினம் செய்தான். தயாநிதியான ஈசுவரன் தீபக்கூட்டங்களினின்று படத்தோடு கால ஸர்ப்பமாய் மிக கோபத்துடன் மிருத்துவைக் கடித்தது. அப்போது கண்கள் கிறுகிறென்று சுத்தி வந்து பயங்கரமான எமதர்மன் பூமியின்மேல் விழுந்தான். அதை சித்திரகுப்தாதிகள் பார்த்து பரமசிவனைப் பிரார்த்திததார்கள். பரமசிவன் மிக சந்தோஷித்து சித்திரகுப்தனைப் பார்த்து சொல்லுகிருர்: இந்த கல்யாணி என்பவள், என் பங்கிலீடுபட்டவள் பக்தேஸ்வர விரதம் ஆசரித்தவள், இந்த எமன் எவ்விதமாய் இவளுடைய பர்த்தாவை கொண்டுபோகவந்தான். இப்பேர்க்கொத்த என் பக்தர்களிடம் இனிமேல் வரத்தகாது, எமனைக் குறித்து மன்னித்தேன. இந்த எமனேடு உங்கள் ஸ்வயஸ்தானம் செல்லுங்கள் என்று அவர்களுக்கு உத்திரவு கொடுத்து பிறகு பார்வதி பரமேஸ்வராள் இந்த கல்யாணிக்கு சில வார்த்தைகளைச் சொல்லுகிருர்கள். ஓ குழந்தாய் கல்யாணி உன் பர்த்

தாவினுடைய மிருத்துவைக் குறித்து இனி பயப்பட வேண்டாம். இனிமேல் நீ பக்தேஸ்வர விரதத்தை செய்ய வேண்டும். என் அனுக்கிரஹத்தால், நீ உன் பர்த்தா தீர்க்காயுளுடன் புத்திரசம்பத்தாய் ஸுகமா யிருப்பீர்கள் என்று சொல்லி பார்வதி பரமேஸ்வரர்கள் அந்தரத்யான மடைந்தார்கள். பிறகு அந்த கல்யாணியானவள் தன் பர்த்தாவுடன் அந்த இராத்திரி சுகமாய் இருந்து, மறு நாள் உதயத்தி லெழுந்து ஸ்நாநாதி கிருத்தியங்கள் முடித்துக்கொண்டு, விவாஹ மண்டபத்திற்கு வந்து உட் கார்ந்து நலங்கு முதலிய வேடிக்கைகள் நடத்திக்கொண் டிருக்கும்போது சுந்திர பாண்டியனும், குமுத்வதியும், தங்கள புத்திரன ஆயுசைக் குறித்து சிந்தை பட்டுக் கொண்டு, மருமகளுடைய தபோ பாக்கியத்தால் ஆயுசு உண்டாகுமென்று எண்ணிக்கொண் டிருந்தார்கள். அந்த ஸமயத்தில், கலாவதியும் அலகேஸ்வரனும், வாத்திய கோஷத்தோடு சம்மந்திகளுடைய விடுதிக்குள் சென்று, பந்துக்களை அழைத்தார்கள். அவர்களும், சந்தோஷத் தோடு கல்யாண மண்டபத்திற்கு வந்து, வதூவரர்களைப் பார்த்து மிகச சந்தோஷித்தார்கள். அப்போது குமுத் வதியானவள், தன் மருமகளாகிய கல்யாணியிடம் சென்று, நிஜமாய் இராத்திரி நடந்த சமாசாரம் எனக்கு சொல்ல வேண்டும், ஏனென்றால் என் குமாரன் அற்ப ஆயுசுள்ள வன் உன்னுடைய மாங்கல்யபலத்தினால்தான் பிழைக்க வேணடுமென்று இவனுக்கு விவாஹம செய்யப்பட்டது. இப்போது எந்த விரத மகிமையினால் உன் கணவனுக்கு தீர்க்காயுசு உண்டாச்சுதென்று கேழ்க்க, கல்யாணி உடனே இராத்திரி தங்கள் படுக்கைவீட்டில் நடந்த விருத் தாந்தத்தை உள்ளபடி மாமியார் மாமனாருக்குத் தெரிவித் தாள். அந்த விருத்தாந்தங்களைக் கேட்ட மாமி மாமனார்

இருவரும் மிக சந்தோஷித்து மருமகளை அடிக்கடி கட்டிக் கொண்டு முத்தமிட்டு, அந்த விரதம் எனக்கும் சொல்ல வேண்டும், நானும் அதைச் செய்கிறேன் என்று மாமியான வள் கேட்டாள். அப்போதந்தப் பெண் பரமேஸ்வரன் தனக்குச் சொன்னபடி அந்த விரத மஹிமையை எடுத்துச சொன்னாள். குமுத்வதி அந்த விரத பிரபாதத்தைக்கேட்டு, தானும் அந்த விரத மகிமையால் புத்திரபௌத்திர ஸம்பத் தோடு கூடினாள். சந்திரபாண்டியன், இந்த புத்திரஸம்பத் தோடு கூடினவராய், மதுராபுரிபோய்சசேர்ந்து விசேஷமான ஸம்பத்துடனும் கோதனத்துடனும் சுகமாய் வாழ்ந் தார். அதுமுதற்கொண்டு இந்த பக்தேஸ்வர விரதம உல கத்தில் பிரசித்தமாச்சுது" என்று பார்வதி தேவிக்கு பர மேஸ்வரன் சொன்னார். ஆகையால் சௌனகாதி மஹரிஷிக ளுக்கு இந்த விரதப்ரபாவம் தெரிவித்தார். அப்போது பக்தேஸ்வர விரதம், பருவத்திலேயே செய்ய வேண்டு மென்று உலகத்தாருக்கும் பிரசித்தியாய் எல்லா ஸ்திரீக ளுக்குமம இந்த நோன்பு ஆசரிக்கலாம். எந்த ஸ்திரீ இந்த நோன்பு செய்கிறாளோ அந்த ஸ்திரீ, சௌமங்கல்யத் தோடு புத்திர ஸமபத்துடன், இவ்வுலகில் எல்லா சுகங் களையு மனுபவித்து பரலோகததில் சதாசிவனுடைய பாதாரவிந்த மடைந்து, பரமசுக மடைவாள் என்று ஸூத புராணிகர் சொன்ன வாக்கியங்களை, சௌனகாதி இருஷி கள் கேட்டு, மிக சந்தோஷத்தோடு தங்கள் தங்கள் பாரி யாக்களை விரதம் செய்யும்படி செய்தார்கள். அது முதல் பூமியில் இந்த விரதம் பிரசித்தமாச்சுது. இப்படி பவிஷ் யோத்தர புராணத்தில், பார்வதிக்கு பரமேஸ்வரன் உப தேசித்த பக்தேஸ்வரவிரத கல்பம் ஸம்பூர்ணம்.

---

# அமாவாஸ்யா

# சோமவார விரதம்.

—∘∘⁂∘∘—

ஆசம்மிய சங்கல்ப்யா || சுபேசோபனே முஹூர்த்தே ........ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம், அஸ்யாம் அமாயாம் சுபதிதௌமம, ஸமஸ்த ஜன்மஸௌபாக்கிய ஸித்தியர்த்தம், இஹ ஜன்மனி, ஜன்மாந்தரேச, ஸகலபாப க்ஷயார்த்தம் புத்ர பௌத்ராத்யபி விருத்யா, ஸந்ததி, சிரஜ்ஜீவித்வ, பரம சௌபாக்கியகாமா, அஸ்யாம் சோமவத்தியா, மமாயாம், பிரம்ஹ, விஷ்ணு, சிவாத்மக அஸ்வத்த விருக்ஷபத்கா மினிதோபசாரை:, மனோவாக் காய கிருத மஹா பாதக நிவிருத்யர்த்தம், மஹைதைஸ் வர்ய ப்ராப்தியர்த்தம் ஐஹிக, ஆமுஸ்மிக, ப்பலாவாப்தியர்த்தம், ஸ்ரீமஹாவிஷ்ணுப் பிரீத்யர்த்தம், பவிஷ்யோத்தர புராணோக்தப் பிரகாரேண அமா சோமவார விரதே லக்ஷ்மீ நாராயண பூஜாம, கரிஷ்யே நம: ஆதௌ கலச பூஜாம் கிருத்வா, அனந்தரம், கணபதி பூஜாஞ்ச கரிஷ்யே நம:. பிறகு பீட்ட பூஜையும் துவார பூஜையும் செய்ய வேண்டியது. அரசமரததடியில், சுத்தப்படுத்தி, ஜலம் தெளித்து, கோலங்கள் போட்டு பூஜைக்கு வேண்டிய வஸ்துக்களை சேர்த்துக்கொண்டு, அம்மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு, வேதமந்திரத்தாலாவது அல்லது, புராணோக்தத்தினாலாவது, ஸ்ரீ லக்ஷ்மீ நாராயணப் பிரீதியின் பொருட்டு லக்ஷ்மீநாராயண தியானம் செய்துக்கொண்டு பூஜையை ஆரம்பிக்க வேண்டியது.

தியான சுலோகம். மூலதோப்பிரமஹ ரூபாய, மத்தியதோ விஷ்ணு ரூபிணே, அக்கரதஃ சிவரூபாய, விருக்ஷ ராஜாயதே நமஃ || இந்த மூல மந்திரத்தால் அரச மரத்திற்கு (அஸ்வத்த விருக்ஷத்திற்கு) சோடசோபசார பூஜைகள் செய்யவேண்டியது. பிறகு, சு. இந்திராதி ஸுர ஸம்ஸேவ்ய, யோகநித்ரா பராயண, லக்ஷ்மியா ஸஹ ஸுரஸ்ரேஷ்ட, ஸுஸ்திரோபவ ஸர்வதா || தேவதேவ மஹாப்ராக்ஞ, லோகேச ஸுரபூஜித, யாவத் பூஜாம் ஸமர்ப்யேஹம் தாவத்துவம் ஸன்னிதிபவ|| (அதோதேவாயிதி மந்திரேண அஸ்வத்தமூலே, விஷ்ணும் தியாத்வா; ஸ்பிருஷ்ட்வா பூஜயேத்து.) ஸ்ரீமதஸ்வத்த நாராயண தேவதாப்யோநமஃ || தியானம் ஸமர்ப்பயாமி || சு. சரணம்மே ஜகன்னாத, சரணம் பக்தவத்ஸல வரதோபவமே நாத, கருணாகர சாஸ்வத. ஸ்ரீமதஸ்வதத நாராயண ஸ்வாமிநே நமஃ ஆவாஹனம் ஸமர்ப்பயாமி || சு. ஓம் நமோ வாஸுதேவாய சத்யானந்த சிதாதமனே, மூலானி, பிரம்ஹணேயஸ்ய, ருக்வேதோங்கானி பல்லவாஃ, ப்பலானி எக்ஞசாகாஸ்ச, நாராயண தயாம் குரு, ரத்னஸிம்ஹாஸனம் துப்பியம் தாஸ்யாமி ஸ்வீகுருப்பிரபோ || அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ ரத்ன சிம்ஹாஸனம் ஸமர்ப்பயாமி || சு. க்ககவாஹன அலலது கஜவாஹன ஸர்வக்ஞ, ஸர்வலக்ஷண ஸம்யுதம், பாத்தியம் கிருஹாண மத்தத்தம், ஸ்ரீயாஸஹ ஸுரோத்தம || அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ பாத்தியம் ஸமர்ப்பயாமி || சு. பரித்ராண பராநந்த, பத்மபத்ரேக்ஷணப் ப்ரப்போ, ஸ்ரீ க்ருஷ்ணார்க்கியம் மயாதத்தம் கிருஷ்ண விஷ்ணோஜநார்த்தன || அஸ்வத் நாராயண ஸ்வாமிநே நமஃ அர்க்கியம் ஸம....யாமி || சு. கர்ப்பூரே லாலவங்காதி சீதலம் ஸலிலம்விப்போ, ரமாரமண தேவேச ஆசம்மி

யம் பிரதி கிருஹ்யதாம் || ஸ்ரீமதஸ்வத்த நாராயண ஸ்வாமிநேநமஃ ஆசமநீயம் ஸ....மி || சு. நமோ நித்தியாய சுத்தாய, யோகித்யான பராயண, மதுபர்க்கம் கிருஹாணேதம், ஸர்வ லோகைகநாயக || அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ மதுபர்க்கம் ஸ...மி. சு. பஞ்சாமிருதம், மயாநீதம், பயோ ததிகிருதம்மது, சர்க்கராதி ஸமாயுக்தம், ஸ்நாநார்த்தம் ப்ரதி கிருஹ்ப்தாம் || ஸம் ஸ்நாபனம் கரிஷ்யாமி, லக்ஷ்மீ நாராயணப்ரப்போ || ஸ்நாநேந நாநேந தேவேச, மமபாபம் வ்யபோஹது. அஸ்வத்த நாராயணஸ்வாமிநேநமஃ பஞ்சாமிருத ஸ்நாநம் ஸ....மி|| சு. கங்கோதகம ஸமாநீதம், ஸுவர்ண கலச ஸ்திதம், ஸ்நாபநார்த்தம் மயாநீதம், கிருஹாண பரமேஸ்வர|| அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ சுத்தோதக ஸ்நாநம் ஸ....மி. || சு கந்தாதி பூர்வ பூஜாம் கிருத்வா, அபிஷேகம் குர்யாத்து || தேவ தேவ ஜகன்னாத, நமஃ ஸ்ரீ வத்ஸதாரிணே, வஸ்திர யுக்மம், பிரதாஸ்யாமி, ஸம் கிருஹாண ஜநார்த்தன || அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ வஸ்திரயுக்மம் ஸ....மி.|| சு. லக்ஷ்மீசாய நமஸ்தேஸ்து, திராஹிமாம் பவஸாகராத், பிரம்ஹஸூத்ரம் சோத்தரீயம், கிருஹாண ப்ரார்த்திதோ மயா. || அஸ்வத்த நாராயணஸ்வாமிநே நமஃ ஏக்ஞோபவீதம் ஸ....மி || சு. அஸ்வத்த ஹூதபுகவாஸ, கோவிந்தஸ்ய, ஸதாஸ்ரய. அசேஷம், ஹரமேபாபம், வ்ருக்ஷ ராஜநமோஸ்துதே || அஸ்வதத நாராயணஸ்வாமிநே நமஃ || ஸூத்ர தாரணாலங்காரான் ஸ....மி || சு. கர்ப்பூரா கருகஸ்தூரி குங்குமோன் மிஸ்ர சந்தனம், துப்பியம் தாஸ்யாமி தேவேச, ஸங்கிருஹாண நமோஸ்துதே|| (மலயாசல ஸம்பூதம் க்கனஸாரம் மனோஹரம், விலேபனம் ஸுர ஸ்ரேஷ்டம் சந்தனம் பிரதி க்ருஹ்பதாம.) || அஸ்வத்த நாராயண

ஸ்வாமினே நமః கந்தான் ஸ....மி. || சு. தண்டுலா நார்தர கான் ஸ்வச்சான், மஹாவ்ரீஹி சமுதபவான், அக்ஷதான் அற்பயேத்துப்பியம், கிருஹாண பரமேஸ்வர || அஸ்வத்த நாராயண ஸ்வாமினே நமః அக்ஷதான் ஸ....மி. || மால்யானிச ஸுகந்தீனி, மாலத்யா தீனிசப்ரப்போ, மயாஹ்ருதானி பூஜார்த்தம், கிருஹாண கமலாத்திப || சு. துளஸீ ஜாதிமகலா மல்லிகா சம்பகானிச, புஷ்பாணிஹர கோவிந்த கிருஹாண பரமேஸ்வர || அஸ்வத்த நாராயணஸ்வாமினே நமః நாநாவித புஷ்பாணி பூஜயாமி. ||

## அத்தாங்க பூஜா.

| | |
|---|---|
| நாராயணாயநமః | பாதௌ பூஜயாமி |
| கேசவாயநமః | குல்பௌ பூ—மி |
| ஹரயேநமః | ஜங்கே பூ—மி |
| ஸங்கர்ஷணாயநமః | ஊரு பூ—மி |
| வராஹாயநமః | கடிம பூ—மி |
| பத்மநாபாயநமః | நாபிம் பூ—மி |
| தாமோதராயநமః | உதரம் பூ—மி |
| காலாத்மனேநமః | ஸ்தனௌ பூ—மி |
| ராமாயநமః | ஸ்கந்தௌ பூ—மி |
| வைகுண்டாயநமః | கண்டம் பூ—மி |
| அனிருத்தாயநமః | பாஹூன் பூ—மி |
| பரமேஸ்வராயநமః | ஹஸ்தௌ பூ—மி |
| தேவாதிதேவாயநமః | முகம் பூ—மி |
| புஷ்கரநேத்திராயநமః | நேத்திரே பூ—மி |
| வாஸுதேவாயநமః | சுரோத்திரே பூ—மி |
| ஸர்வவிபாபினேநமః | சிர பூ—மி |
| ஸர்வேஸ்வராயநமః | ஸர்வாண்யங்கானி பூ—மி |

## அத்த நாமாவளி.

முதலில் ஓம் என்றும், கடைசியில் நமஃ என்றும் ஒவ்வொரு நாமத்திற்கும் சேர்க்கவும்.

ஓம் பரமாத்மநே நமஃ
பரமேஸ்வராய
பரப்ரம்ஹணே
விரிஞ்சயே
சிவாய
ருத்திராய
நாராயணாய
வனஸ்பதயே
விருக்ஷராஜாய
வேதாத்மநே 10
ப்ரகிருதயே
தேவாத்மனே
த்ரிமூர்த்தியாத்மனே
ஊர்த்வமூலாய
ச்சந்தஃ பர்ணாய
அவ்யயாய
பாபக்னாய
ஞானவிருக்ஷாய
பபூதாவாஸாய
புண்யாய 20
சிவாகாராய
மஹாமூலாய
இருஷிஸேவிதாய
தபஃப்பலாய
அக்னிகர்ப்பாய

ஓம் அரணயே நமஃ
ஸமிதாகராய
ஸ்ரேயாஸ்வஜாய
விபூதயே
சமீபதயே 30
அஸ்வத்தாய
கேசவாய
ஹரயே
ஸங்கர்ஷணாய
வராஹாய
பத்மநாபாய
தாமோதராய
காலாத்மனே
வைகுண்டநாதாய
அனிருத்தாய 40
பரமேஸ்வராய
தேவாதிதேவாய
புஷ்கரநேத்ராய
வாஸுதேவாய
ஸாவவியாபிநே
ஸர்வேஸ்வராய
ஸ்ரீமதஸ்வத்த நாராயண ஸ்வாமிநே 48
நாநாவிதபரிமள பத்ர புஷ்பாணி ஸமாப்பயாமி.

ஸாவகாசமிருந்தால் விஷ்ணு ஸஹஸ்ர நாமமும் செய்யலாம். பிறகு தூபதீப நைவேத்தியாதிகள் செய்யலாம்.

குக்குலம் கிருதஸம்யுக்தம் நாஞகந்தை ஸுஸம்யுதம், த்தூபம் கிருஹாண கிருபயா, ஸுப்ரீதோ வரதோபவ அஸ்வத்த நாராயணஸ்வாமிநே நமஃ தூபம் ஆக்கிருபயாமி|| சு. அக்ஞானதமனுயேதி, ஞானபுத்திப் பிரதோப்பவ, அக்னிஞயோஜிதம் தீபம், கிருஹாண, பரயாமுதா அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ தீபம் தர்சயாமி|| சு. திவ்வியான்னம், ஷட்ரஸோபேதம், நாநாப்பக்ஷியைஸ்ச ஸமயுதம், மயாப்பிரதத்தம் நைவேத்தியம், ஸங்கிருஹாண ஸ்ரீயாஸஹ|| ப்பக்ஷியம் ப்போஜ்ஜியம், லேஹ்ஹியபேயே, சோஷ்ஷியம், க்காத்தியம், மயாஹிருதம், பிரீதயே பரமேசஸ்ய தத்தம்மே ஸவீகுருப்ரப்போ அஸ்வத்த நாராயண ஸ்வாமிநே நமஃ மஹா நைவேத்தியம் நிவேதயாமி. பிராணாயநமஃ, அபாநாயநமஃ, வியாஞயநமஃ, உதாஞயநமஃ, ஸமாநாயநமஃ || சு. கங்கோதகம், ஸமாநீதம், பாநார்த்தம், பரமமசிவம், ஹிருஷீகேச நமஸ்துப்பியம் கிருஹாண பரயாமுதா, அஸ்வத்த நாராயணஸ்வாமிநேநமஃ மத்தியே மத்தியேபாநீயம் உத்தராபோசனம், ஹஸ்தப்பிரக்ஷாளனம், முக்கப்பிரக்ஷாளநஞ்ச கரிஷ்யே நமஃ கரோத்துவர்த்தநார்த்தே, சந்தனம. இதம்ப்பலமிதிப்பலானி பூகிப்பலமிதி தாம்பூலம், ஹிரண்ணியகர்பேதி தக்ஷிணும் ஸ....மி|| சு. துவத்ப்பாஸா, ப்பாஸ்வதேலோகஃ கோடிசூர்ய ஸமப்பிரப, நீராஜயிஷ்யே த்துவாம் விஷ்ணோ, கிருபாங் குருமயிப்பிரபோ அஸ்வத்த நாராயணஸ்வாமிநே நமஃ கர்ப்பூர நீராஜனம் தாசயாமி. சு. ஸ்ரீமதே, ஸர்வப்பூதாத்மன், த்ராஹிமாம், ப்பவஸாகராத், மதுஸூதன தேவேச, கிருஹாண குஸுமாஞ்ஜலிம|| அஸ்வத்த நாராயணஸ்வாமிநே நமஃ மந்திர புஷ்பாஞ்ஜலிம் ஸ....மி || சு. பிரதக்ஷிணத்ரயம் தேவம், பிரயத்நேநமயாகிருதம், தேநபாபானி, ஸர்வாணி நாச

யாசு மமாவ்விய. பிரதக்ஷிணம் ஸ....மி|| சு. வ்யக்தா வ்யக்த ஸ்வரூபாய ஸ்ருஷ்டி ஸ்த்தித்யந்த காரிணே, ஆதி மத்தியாந்த ஹீனாய விஷ்டரஸ்ரவஸேநம: நமஸ்கரோம்மிய ஹம் ப்பக்தியா, ஸர்வபாப ஹராவ்விய, குருமே ஸபலம ஜன்ம, துவத்பாதாம்போஜ வந்தநாத். நமஸ்காரான் ஸ....மி|| சு லக்ஷ்மீச ஸர்வலோகேச ஸர்வஸம்பத் பிர தோப்பவ, கிருஹாணார்க்கியம் மயாதத்தம், கிருபயாபரயா மூதா. பிரஸன்னார்க்கியம் ஸ....மி|| சு தேவதேவ ஜகன் னாத கிருஷ்டி ஸம்ஹாரகாரக, சரணம் துவாம் பிரஸன் னோஸ்மி, த்ராஹிமாம் புருஷோத்தம, நிமக்னோஸ்மி மஹாக்கோரே, ஸம்ஸாரே, துக்கஸாகரே, மாமுத்தர ஹ்ருஷீகேச, போப்போபவ ப்பயாபஹ || இவ்விதமாய் அஸ்வத்த நாராயணனைப் பிரார்த்திக்கிறது. || அமாஸோம பூஜை செய்கிறது. அமாயைச நமஸ்துப்பியம, ஸோமாயச, நமோஸ்துதே, உபயோ: ஸ்ஸங்கமே விஷ்ணூ, பூஜாப்பல மவாப்னுயாத்து. அமாயை, ஸோமாயசநம:, ஸர்வோப சாரார்த்தே. கந்தாக்ஷத புஷ்பதூபதீப, நைவேத்தியானி ஸமர்ப்பயாமி. அநேக மந்திரேண ஷோடசோபசாரை:, பஞ்சோபசாரைர்வா பூஜயேத்து. இவ்விதமாய் அமாஸோம பூஜை முடிந்தது. எஸ்யஸ்மிருத்தியாச நாமோக்தியா தப: பூஜாக்ரியாதிஷு, நியூனம் ஸம்பூர்ணதாம்யாதி சத்யோ வந்தே தமச்சுதம், மந்திரஹீனம், கிரியாஹீனம், ப்பக்தி ஹீனம், ஜநார்த்தன || அநேகபூஜயாச, நைவேத்தியேநச ப்பகவான் ஸர்வ தேவாத்மக:, ஸ்ரீ லக்ஷ்மீநாராயண ஸ்வ ரூப, அஸ்வத்த நாராயண தேவதா ஸுப்பிரீதாஸ் ஸுப் பிரஸன்னோ வரதோபவது என்று இந்த மந்திரத்தோடு அக்ஷதை, புஷ்பம், ஜலத்துடன் ஸ்வாமிக்குமுன்னே அர்ப் பணை செய்யவேண்டியது. அத்திய பூர்வோக்த ஏவங்குண

விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சுபதித்தௌ - கல் போக்த ப்பலசித்தியர்த்தம், அஸ்வத்தமூலே அமுகத்ரவி யேண, அஷ்டோத்ர சதபிரதக்ஷணக்கியம் கர்மகரிஷ்யே|| என்று இந்த சங்கல்பத்தோடு 108-தடவை, அரசமரத்தை நாம் பிரதக்ஷணத்திற்காக என்ன வஸ்து ஏற்பாடு செய்துக் கொண்டோமோ அதில் ஒவ்வொன்றுப் கையிலெடுத்துக் கொண்டு, அரசமரத்தை பிரதக்ஷணம் செய்து, சுவாமிக்கு முன்புறம் போட்டுக்கொண்டே 108-தரம் வலம் சுத்த வேண்டியது. பிரதக்ஷணம் செய்யும்போது சொல்லவேண் டிய மந்திரம் அல்லது சுலோகம் || மூலதோ பிரம்ஹ ரூபாய, மத்யதோ விஷ்ணுரூபிணே, அக்கிரதஃ சிவரூபாய, விருக்ஷ ராஜாயதே நமஃ || இதி பிரதி பிரதக்ஷண முச்சரன், உக்த த்ரவ்வியம், பிரதக்ஷணஸமயே விருக்ஷஸ்யாக்கிரே ஸ்தாப்பிய, ஏவ மஷ்டோத்திர பிரதக்ஷணி கார்யாணி. அப்படி பிரதக்ஷணம செய்தபோது போட்ட வஸ்துவை, பிராம்ஹணுளுக்கு தானபூர்வமாய் வாயனம் கொடுத்து, மிகுதியை மற்ற பேருக்கு உபயோகிக்கலாம். உவாயண தாம்பூலம் தக்ஷிணையுடன ஆசார்யருக்குக் கொடுக்குங் காலத்தில் சொல்லும்படியான மந்திரம். அஸ்வத்தஃ பிரதி கிருண்ஹாது, அஸ்வத்தோ வைததாதிச, அஸ்வத்தஃ தார கோபாப்பியாம், அஸ்வத்தாய நமோ நமஃ என்று சொல்லி தாம்பூலம் கொடுக்கவும். அஸ்மைப் பிராம்ஹ ணய, லக்ஷ்மீநாராயண ஸ்வரூபாய, இதம்திரவியம், அஸ் வத்த நாராயணப் பிரீதிம் காமயமான ஸ்துப்யமஹம் ஸம் ப்ரததே நமம. || வாங்குகிறவர் சொல்வது தேவஸ்யத்வா இதி பிரதி கிருண்ஹாமி || என்று சொல்வர்.

பூஜை முற்றிற்று.

---

# அமாவாஸ்யா சோமவதி

## விரத கதை ஆரம்பம்.



தர்ம ஸ்வபாவமுள்ள ஸ்ரீ யுதிஷ்டிரர், சரதல்பத்தில் சயனித்திருந்த பாட்டனாராகிய பீஷ்மரிடம்சென்று, ஸாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து கேழ்க்கிறார்: கௌரவாளும் இன்னும் சில இராஜாக்களும் செருக்கோடு கூடினவராய் இருந்தபடியால் பீமஸேனன் மிக கோபங்கொண்டவராய், இவாகளை ஜெயித்தார். துரியோதனனுடைய துராலோசனையினால் நம்முடைய குலமெல்லாம் நாசமடைந்தது. பூமியில் இராஜாக்களெல்லோரும், மிக இளைத்துப் போனார்கள். பூமியில் சிறியவர்கள், பெரியவர்கள், வியாதியஸ்தர்கள் தவிர மற்றொருவருமில்லை. இந்த பாரத வம்சத்தில் நாங்கள் ஐவர் மீந்தோம். அப்பேர்க்கொத்த ஒரேகுடையின்கீழ் ஆளுகை இருந்தும் பிரகாசமில்லாத தாயிற்று. நம்முடைய சந்ததியார் நாசமடைந்த விஷயத்தை ஆலோசித்துப் பார்க்கில் மனதில் கொஞ்சமாவது சந்தோஷம் உண்டாகவில்லை. அஸ்வத்தாமாவின் அஸ்திரத்தால் உத்திரையின் காப்பம் எரிந்ததால், பிண்டம் கலைந்ததென்கிற வியஸன மதிகரித்தது. ஆகையால், நான் என்னசெய்வேன், எவ்விடம் செல்வேன் உத்திர க்ஷணத்தில் வெகுகாலம் ஜீவித்திருக்கும்படியான சந்ததி எப்படி யுண்டாகுமோ அதற்குபாயம அறிவிக்க வேண்டுமென்று கேழ்க்க, பீஷ்மர் சொல்லுகிறார். ஓ தர்ம புத்திரா எதை செய்தால் வெகுகால மிருக்கும்படியான சந்தான விருத்தி உண்டாகுமோ, அப்பேர்க் கொத்த விர

தங்களில் உத்தமமான விரதம் சொல்லுகிறேன் கேள்: அமாவாசை சோமவாரத்தோடு கூடின தினத்தில், (அஸ்வத்தம்) அரசமரத்தடியில், விஷ்ணுவை பூஜை செய்து, நூற்றெட்டு எண்ணுள்ள ரத்தினங்களாவது, பொன் முதலிய ஸ்வர்னங்களாவது, பழவாக்கங்களாவது எடுத்துக் கொண்டுபோய், அவ் விருக்ஷத்தை நூற்றெட்டு முறை பிரதக்ஷிணை வரவும். அப்படி சுத்திக்கொண்டு வரும்போது மேற் சொன்ன வஸ்துக்களில் சுத்துக் கொன்றாகப் போட்டுக்கொண்டு வரவும். "ஓ ராஜனே! இந்த சிரேஷ்டமான விரதம், மகா விஷ்ணுவுக்கு மிக இஷ்டமானதும், சிரேஷ்டமானதுமாம். ஆகையால், உத்திரைக்கு இந்த விரதத்தால், சிரஜீவகர்ப்ப உற்பத்தி உண்டாகி க்ஷேமமாயிருப்பாள். மூவுலகத்திலும் பிரசித்தமான கீர்த்தி பெரும்படியான புத்திரனைப்பெருவாள். மேலும் இவ்விரதம், பிரம்மருத்திராளுக்கும், மிக திருப்தி யுண்டாக்கும்படியான புண்ணிய விரதம். இவ் வரசமரம் திரிமூர்த்தி சுவரூபமானது. ஆகையால், உத்தரையைக் கொண்டு இவ்விதம் செய்துவையும்,'' என்று பீஷ்மர் சொல்லவே, தருமராஜன், பிதாமஹரைப் பார்த்து: "ஓ பிதாமஹரே! இப் புண்ணிய விரதம் யார் பூமியில் வெளிப்படுத்தி செய்தார்கள், இதைக் குறித்து விவரித்து சொல்லவேண்டு" மென்று கேழ்க்க, பீஷ்மர் சொல்லுகிறார்: "தர்ம நந்தன! கைலாயத்துக் கொபபான மெத்தை மேடைகளால் நிறைந்த, காஞ்சீபுரி என்கிற ஒரு பட்டணமுண்டு. அப்பட்டணத்தில் பிராம்ஹணாதி நாலுவர்ணஸ்தர்களும், தங்கள் குலாசார தர்மங்களை சரிவர செய்துக்கொண்டு, ஸ்திரீ புருஷாள் ஸர்வாலங்காரத்துடன் கூடி இருப்பார்கள். அவ்விடத்தில் வேசியர்கள் ரூபலாவண்ணிய முள்ளவர்களாய் தங்கள்

யுக்தி சாமர்த்தியத்தால், ஜனங்களை வசப்படுத்தி வரு வார்கள். அப்பேர்க்கொத்த காஞ்சிநகரத்தை இரத்தின சேனன் என்கிற இராஜன் ஜனத்ருப்திகரமாய இராஜ்ஜிய பரிபாலனம் செய்துக்கொண்டிருந்தான். அந்த பட்டணத் தில் தேவஸ்வாமி என்கிற பேர் பிரசித்தியான ஒரு பிரா மணருண்டு. அவருடைய பாரியாள் லக்ஷ்மிக்கொப்பான மிக அழகுள்ள தனவதி என்கிறவள். அவள் மிக பதிவ் ரதா தர்மத்தோடு இருந்தாள். அவள் ஏழு புத்திரர்களை யும் ஒரு ரூபவதியான பெண்ணையும் பெற்றாள். அந்தப் பெண்ணின் பெயர் குணவதி எனபபடும். அந்த தேவ சுவாமி என்கிற பிராமணர், தன் புத்திராகளுக்கு விவா கம் செய்துவைத்தாா. அப் புத்திரர்களும் தங்கள மனை விகளுடன் சுகமாய வாழ்ந்துக்கொண் டிருந்தார்கள். தன் குமாரத்திக்கு பருவகாலம் வந்ததே, தாய்தநதையாகள் அவளுக்குத் தகுந்த கணவனைத தேடிக்கொண்டிருநதார் கள். இப்படி யிருக்க ஒரு பிராமணன் தன் தம்பாபலத்தி னுல அக்கினி தேவனைப்போல் பிரகாசித்துக் கொண்டு, அந்த தேவஸ்வாமியின் வீட்டிற்கு வநது, வாசற்படி யண்டை நின்றுக்கொண்டு ஆசீர்வாதம் செயதார். அப் போது அந்த வீட்டின் மருமக்கள்மார் ஏழுபேரும் உடனே எழுந்துவந்து, அந்த பிராமணுருக்கு ஒவ்வொருவராய் பிசசையிட்டாாகள். அப்போது அந்த பிராமணர், அவ் வேழுபேர்களுக்கும் தீர்க்க மாங்கல்யமும், எல்லா ஐசுவரிய முமம் உண்டாகும்படி வாழ்த்தினர். பிறகு தனவதி, தன் குமாரத்தியான குணவதியை, அவருக்கு பிச்சை யிடும்படி அவளோடு சொல்லவே, அப்படியே அப்பெண் பிச்சை யிட்டாள். உடனே அந்த யோகி: அச்சிறுமியைக் குறித்து, 'ஓ பெண்ணே, நீ தர்மாத்மா ஆவாய்' என்று ஆசீர்

வாதம் செய்தார். உடனே குணவதி தன் முகத்தை சுளிக்கினவளாய் வீட்டிற்குள் சென்று தாயாருடன், அந்த பிராமணர் ஆசீர்வாதம் செய்ததை தெரிவித்தாள். அவள் தாயாரான குணவதி அதைக்கேட்டு தன் குமாரத்தி யைக் கைபபிடித்து அழைத்துக் கொண்டுவந்து மறுபடி யும் பிசைையிடும்படி சொல்லி, பிச்சையிடவே, அவர் முன் போலவே ஆசீர்வதித்தார். அப்போது அப்பெண்ணின் தாய் பிராமணரைப் பார்த்து: 'ஓ பிராம்ஹணோத்தமரே, என் மருமக்கள் ஏழுபேரும் தங்களுக்கு பிசைைபிட்டு நமஸ்கரித்தபோது, அவர்களுக்கு தீர்க்க சௌமங்கல்யத் துவமும் சகல ஐசுவரியமு முண்டாகும்படி வாழ்த்தினீர், என் குமாரத்தி நமஸ்கரித்தபோது தர்மிஷ்டி ஆவாய் என்று வாழ்த்தினீரே, அதற்குக் காரணம் தெரிவிக்கக் கோருகிறேன்' என்று கேழ்க்க, அப்போது அந்த பிராம ணர் தனவதியைப் பார்த்து: அவாளவாளுக்குத் தக்கபடி நான் வாழ்த்தினேன் என்றார். ஆனால், இந்தப் பெண் கல் யாணத்தின் சப்தபதி மத்தியிலேயே அமங்கல்யத்துவ மடைவாள, ஆகையால் தர்மம் செய்கிறது முக்கியமென் கிற காரணமாய், தர்மானுஸரணம் செய்வது முக்கிய மென்று ஆசீர்வாதம் செய்தேனென்று சொன்னார். அந்த வார்த்தைகளைக் கேட்ட தனவதி மிக சிந்தையோடு கூடின வளாய், அடிக்கடி அந்த பிராமணரைச் சேவித்து அவரைப் பார்த்து: 'ஓ தயாநிதே, நீர் நேரும் அபாயத்தைமாத்திர மறிவித்தீர், நான் என்ன செய்வேன், அதற்குரிய உபாயத் தையும் தாங்களே தெரிவிக்கக் கோருகிறேன்' என்று வினவ, ஓ தனவதி, சிம்ஹளத்தீவில சோமை என்னும் ஒரு ரஜகஸ்திரி (வண்ணாத்தி) இருக்கிறாள், அவளை நீ இவ்வி டம அழைத்துவந்தால் உன் குமாரத்தியின் அமங்கலித்து

வம் நீங்குமென்று சொல்லி, அவர் பிச்சைக்காக வேறொரு இடம் சென்றார். பிறகு தனவதியானவள் தன் பிள்ளைகளைப் பார்த்து: என் பிள்ளைகளா! சோமை என்னும் ரஜகஸ்திரீ, சிம்ஹளத்தீவில் இருக்கிறாளாம், அவளை அழைத்துவந்து உங்கள் தங்கை குணவதியின் வைதவ்விய துக்கத்தை விலக்கி விடுங்களென்று தாயார் சொல்ல, உடனே அப்பிள்ளைகளெல்லோரும், தாயே உன் எண்ணத்தைத் தெரிந்துக்கொண்டோம், உனக்குப பெண்ணினிடத்தில் மிக ஆசை யுண்டாயிருக்கிறது: எங்களை தேசத்தை விட்டுத் துரத்தப் பார்க்கிறாய்; அந்த வழியின் மத்தியில், தாண்டமுடியாத சமுதரம் இருக்கிறது, அதை நாங்களெப்படி தாண்டிப்போக முடியுமென்று சொல்லவே, அப்போது தேவசுவாமி: எனக்கு ஏழு புத்திரர்களிருந்தும் புத்திரர் இல்லாதவனானேன், என் புத்திரிகையுடைய அமங்கல்யத்துவத்தைத் துலைக்க நானே அந்த சோமையை அழைததுக்கொண்டு வருகிறேன் என்று மிககோபத்துடன் சொல்லவே, கடைசி குமாரனை சிவஸ்வாமி என்கிறவன், "அப்பா கோபித்துக் கொள்ளாதேயும், நானிருக்க தங்களுக்கு இந்த கஷ்டம் ஏற்படவேண்டாமென்று சொல்லி, உடனே தன் தங்கையாகிய குணவதியை அழைத்துக் கொண்டு சிம்ஹளத்தீவிற்குப் போக புறப்பட்டு, சிலநாளுக்குள் அச்சமுத்திரக் கரையைச் சேர்ந்து, சமுத்திரத்தைத் தாண்ட முயற்சிசெய்துக்கொண்டு, அச்சமுத்திரக் கரையிலுள்ள ஒரு விசாலமான ஆலமரத்தடியில் அத்தினம் இரவு சயனித்துக் கொண்டனர். அந்த மரத்தில் ஒரு கழுகு முட்டையிட்டு குஞ்சுபொரித் திருந்தது. அந்தக் கழுகு ஒவ்வொருநாளும் வெளியில் சஞ்சரித்து இரை சம்பாதித்து வந்து தன் குஞ்சுகளுக்கு கொடுக்கிற வழக்கம். அந்த மாஜு

யின்படி அக்கழுகு அன்றையதினம் இரவு இரை கொண்டு வந்து குஞ்சுகளுக்கு வைக்கவே, அக்குஞ்சுகள் அந்த இரையைத் தின்னவில்லை. அப்போது தாய்க்கழுகு, தன் குஞ்சுகளைப் பார்த்து. நீங்கள் நான் கொண்டுவந்த இரையை ஏன் தின்னவில்லை என்று கேழ்க்க. அந்தக் குஞ்சுகள் தாயைப் பார்த்து: "தாயே, இம் மரத்தடியில் இரண்டு மானிடர்களிருக்கிறார்கள், அவர்கள் சாப்பாடில்லாமல் பட்டினியாயிருக்க நாங்களெப்படி சாப்பிடலா'மென்று சொல்லிற்று. உடனே தாய் கழுகு தயையுடன் கீழே இறங்கி வந்து, ஓ பிராமஹுணு, உஙகள அபிப்பிராயம் யான் அறிந்தேன். உங்களுடைய காரியம நான் செய்துக்கொடுககிறேன் என்று சொல்ல, சிவசுவாமி கழுகைப் பார்த்து: "நாங்களிந்த கடலைத் தாண்டி சிம்ஹளத்தீவைச் சேர்ந்து என் தங்கையின் அமங்கல்யத்துவத்தை போக்கடிக்க சோமை என்பவளை அழைத்துக்கொண்டு வரலாமென்று எண்ணுகிறோம்" எனறு சொல்ல, ஓ பிராமஹண சிரேஷ்டரே! நான் பொழுது விடிந்தபிறகு, உங்களை சிம்ஹளத் தீவுக்கு கொண்டுபோய் சோமையின் வீட்டைக் காண்பிக்கிறேன் என்று சொல்லி, தன் குஞ்சுகள் இருக்கும் கூடு சென்றது. இவர்களிருவரும் மரத்தடியிலேயே படுத்திருந்தார்கள். மறுநாள் காலையில் அந்தக் கழுகு, இவ்விருவரையும் அந்தத் தீவிற்குக் கொண்டுபோய் சோமை என்னும் சாதிகைவீட்டு வாசற்படியைக் காண்பித்தது. அவர்கள் சோமை வீட்டைப் பார்த்ததுமுதல் ஒவ்வொருநாளும், அச்சோமையின் வீட்டின் முன்வாசலை பொழுது விடிவதற்கு முன்னமே பெருக்கி, சாணம் தெளித்து, மெழுகி சுத்தப்படுத்திக் கோலங்களிட்டுப் போய்க்கொண் டிருந்தார்கள். இப்படி அவா ளிரண்டு

பேரும் சோமையின் வீட்டு வாசலைக் கூட்டி சுத்தப்படுத்திக்கொண்டு ஒரு வருஷ காலம் கழித்தார்கள். பிறகு சோமை என்பவள் தன் பிள்ளைகளையும், மருமக்கள் மார்களையும் பார்த்து, நம்முடைய வீட்டு வாசலை யார கூட்டி மெழுகிக் கோலமிட்டு போகிறார்களென்று கேழ்க்க, அவை எல்லாம் எங்கள் காரியமேயென்றே அவர்கள் சொன்னார்கள் பிறகு சோமையானவள் நிஜமான சங்கதி கண்டுபிடிக்க, அசையாமல் ஒரு மூலையில் நின்றுங்கொண்டிருந்து தன் வீட்டு வாசலை பெருக்கிகொண்டிருந்த குணவதியையும், மெழுகிக்கொண்டிருந்த சிவசுவாமியையும் பார்த்து நீங்கள் யார்? இப்படி ஏன பணிவிடை செய்கிறீர்களென்று கேட்டாள். நாங்கள் பிராமணப் பிள்ளைகள் என்று அவர்கள் சொன்னார்கள். ஐயோ! என்ன அநியாயம், நீங்கள் பிராம்ஹணரா இருந்து, என் வீட்டு வாசலில் வேலை செய்துக்கொண் டிருந்தால் நான் இந்தப் பாவத்திலிருந்து எப்படி நிவர்த்திக்கப் படுவேன், நான் என்ன கதி அடைவேனோ! நானோ இழிகுலமான வண்ணாரஜாதியிலுதித்தவள். நீங்கள் பிராம்ஹணரா யிருந்தும ஏன் இப்படி அநியாயமாய் நடந்துக் கொள்ளுகிறீர் என்று கேழ்க்க, சிவசுவாமி சொல்லுகிறார்: ஓ சாதிகா (ஓ வண்ணாத்தியே) சொல்லுகிறேன் கேள், இந்தப் பெண் என் தங்கை, இவளுககு குணவதி என்று பெயர். இவளுடைய கல்யாண சமயத்தில் ஸப்தபதி மத்தியத்திலேயே விதவையாவாள். அந்த அமங்கலியத்துவம் ஒழிவதற்கு நீ இவள் ஸமீபத்திலிருந்து அந்த விவாகம் முடிப்பது மிக அவசியமாகையால் அழைத்துக்கொண்டுபோக எண்ணி இப்படி இவ்விழிவாகிய வேலையைச் செய்கிறோமென, சோமையானவள் அவர்களைப் பார்த்து: உங்கள் இஷ்டப்படி வருகிறேன் என்றுசொல்லி

உள்ளேவந்து, தன் மருமக்கள்மார்களைப் பார்த்து: நீங்கள் நான் வருகிற வரையில் நம்முடைய வீட்டில் யாராவது ம்ரணமடைந்தாலும் அவர்களைத் தகனம் செய்யாமல் ஓரிடத்தில் பத்திரப் படுத்தி காப்பாற்றுமென்று உத்தரவு செய்து அவ்விடத்திலிருந்து புறப்பட்டு வந்து அவர்களை கடலைக் கடக்கும்படி செய்து, தான் ஆகாயமார்க்கமாய் கடலைக் கடந்து வந்து, ஒரு நிமிஷத்தில் காஞ்சீபுரம் சேர்ந்தாள். அவர்களப்படி சேர்ந்த உடனே, தனவதி திருப்தியான மனதோடு, சோமைக்கு வெகு மரியாதைகள் செய்தாள்.

பிறகு சிவசுவாமி, தன் தங்கை குணவதிக்கு, தகுந்த வரனை தேடிக் கொண்டுவருவதற்காக வேறு இதர தேசங்கள் சுற்றி, முடிவில் உஜ்ஜயநீ பட்டணம சேர்ந்து, அவ்விடத்தில வேத சர்மாவின் குமாரனாகிய ருததிரசர்மா என்பவனை அழைத்துவந்து ஒரு சுப முகூர்த்தத்தில், குணவதியை அவருக்குக் கொடுத்து கலயாணம்செய்ய நிச்சயித்தார். அப்போது தேவசுவாமி, நலல சுப முகூர்தத தினத்தில் சுப லக்கினத்தில, சோமையும் கூடவே இருந்து கலயாணத்தை நடத்தி வைக்கும்படி ஏற்படுத்திகொணடு, தன் குமாரத்தியாகிய குணவதியை ருத்திர சர்மாவுக்கு தேவசுவாமி கன்னிகாதானம் செய்துக் கொடுத்தார். பிறகு விவாஹ மத்தியில் பிரதான ஹோமம் நடக்கும் சமயததில், சப்தபதீமத்தியில் கல்யாணபிள்ளையாகிய ருத்திரசர்மா திடீரென்று மரணமடைந்தான். அபபோது பநதுக்க ளெல்லோரும வியஸன மடைந்தார்கள். சோமையானவள் நிச்சய மனதுடையவளாய் இருக்க, அந்த விவாஹ மஹோற்சவம் பார்க்க வந்தவர்க ளெல்லோரும் ஆபால கோபாலமாய் வியஸன மடைந்தார்கள். அப்

போது சோமையானவள், உடனே மரணத்தை போக்கடிக்கும்படியான விரதராஜப பிரபாவததை தான சக்கல்பம் செய்துக்கொண்டு குணவதிக்கு விரத பலனைக் கொடுத்தாள. அப்போது ருத்திரசர்மா இந்த விரதப் பல பிரபாவத்தால் மறுபடியும் பிழைத்தெழுந்து துயிலுற்றவனைப் போல் தான் கண் விழிததுக்கொண்டு உட்கார்ந்தான். ஸோமை இவ்விதமாய் விவாஹத்தை நிறைவேற்றி விரதோத்தமமான அமாஸோமவதி விரதத்தை அந்த தமபதிகளுக்கு உபதேசம் செய்வித்துவிட்டு தன் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனுள். இப்படி ஸோமை மரணமடைந்த பிராம்ஹணனை பிழைப்பு மூட்டி ஸம்பூர்த்தியான மனதுடன் வருவதற்குள்ளே, அவளுடைய விட்டில் முதலில் பிள்ளைகளும், பிறகு தன் கணவனும், அதன் பிறகு தன் மருமக்கள்மாரும் மரணமடைந்தார்கள். அந்த ஸோமை தன் இருபபிடம் வரும்போது, வழியில் இறந்தவர்களை பிழைப்பு மூட்டும்படியான ஸோமவாரத்தோடுகூடிய அமாவாஸ்யை வந்தது. அப்போது வழி நடுவில் ஒரு கிழவி தென்பட்டு, ஓ அம்மா, நான் இந்த பஞ்சிமூட்டையைத் தூக்க முடியாமல் தவிக்கிறேன், இதைக் கொஞ்சம் இறக்கு என்றுள். சோமையானவள், ஓ கிழவீ இன்றைககு அமாசோமவதி விரதம் ஆகையால் என் கையால் இந்த பஞ்சியைத் தொட மாட்டேன். இவ்வித நியமம் வைத்துக்கொண்டேன் என்று சொல்லி இன்னும் கொஞ்ச தூரம் சென்றபோது, முள்ளங்கிக் கூடையை எடுத்துக்கொண்டுபோகிற வேறொரு ஸ்திரீ சந்தித்து சோமயைப் பார்த்து: இக் கூடையைக் கொஞ்சம் இறக்கவேண்டுமென்று கேட்டாள். சோமை முன்போலவே பதில் சொல்லி நதிக்கரையைச் சேர்ந்து, அங்கே ஸ்நாநம் செய்து மடி கட்டிககொண்டு, அங்கிருந்த

அரசமரத்தடியில் ஸ்ரீமன் நாராயண மூர்த்தியை ஆவாஹ ஞாதி பூஜைகள் செய்து பருக்காங் கற்களைக்கொண்டு நூற்றெட்டு தடவை பிரதக்ஷிணை செய்தாள். எப்போது ஸோமை கல்லெடுத்துக்கொண்டு அந்த மரத்தை சுத்தத் தலைப்பட்டாளோ, அப்போதே அந்த ஸோமையின் பிள்ளைகள், புருஷன். மருமக்கள்மார்கள் இவர்கள் அனைவரும் எழுந்து உட்கார்ந்தார்கள். பட்டணமெல்லாம் வெகு பிரகாசமாய் இருந்தது. அதிலும் சோமையின் வீடு மிக ஐசுவரியத்துடன் நிறைந்திருந்தது. பிறகு பாக்கியசாலியாகிய அந்தம்மாள் தன் வீடுவந்து சேர்ந்தாள். அவள் பிள்ளைகள் முதலியவர்கள் இறந்து மறுபடியும் பிழைத்தெழுந்த சமாசாரம் கேட்டு மிக சந்தோஷப்பட்டனள். தன் நாட்டுப் பெண்களெல்லோரும் மாமியாரைச் சேவித்து, அம்மா நம்முடைய வீட்டில் மரணமடைந்தவர்கள் யாவரும் எப்படி மறுபடியும் ஜீவித்தெழுந்தார்கள் என்று எங்களுக்குச் சொல்லவேண்டுமென்று கேழ்க்கவே, ஸோமை தன் மருமக்கள்மார்களைப் பார்த்து சொல்லுகிறாள்: நான் இந்த விரதராஜப் பிரபாவத்தால் கிடைத்த புண்ணியத்தை குணவதிக்குக் கொடுத்தேன் ஆகையால், நீங்கள் எல்லோரும் ஓரேகாலத்தில் மரித்தீர்கள். நான் திரும்பி வருங்கால் அமா சோமவார விரதம் வழியில் வந்தபடியால் நான் பஞ்சி, முள்ளங்கி முதலியவைகளைக்கூடத் தொடாமல் அரசமரத்தடியில் சென்று லக்ஷ்மீ நாராயணர்களைப் பூஜித்து, 108 பிரதக்ஷிணை செய்தேன், அப்போது பகவானுடைய கிருபையினாலும், விரத மகிமையினாலும் நீங்கள் அனைவரும் பிழைத் தெழுந்தீர்கள். ஓ மருமக்கள்மார்களே, நீங்களெல்லோரும் இந்த விரதத்தை அனுஷ்டியுங்கள், உங்களுக்கு தீர்க்க சௌமங்கல்யத்துவமும், சம்பத்தும் உண்

டாகும் என்று சொல்லி அவர்கள் கையினால் அந்த விர தத்தை செய்விக்க, அதுமுதல் அவர்கள் சகல சௌக்கியங் களு மனுபவித்து முடிவில் எல்லோரும் வைகுண்ட பதவி அடைந்தார்கள்." ஆகையால், ஓ தர்மநந்தனா நான் இந்த நோன்பின் மகிமையை தங்களுக்கு விரிவாகச்சொன்னேன்; நீயும் அதை பக்தியோடுசெய்யுமென்று பீஷ்மர் அவருடன் சொல்லவே, தர்மராஜன் மறுபடியும் பீஷ்மரைப் பார்த்து: ஓ தாதா, அந்த விரதராஜத்திற்கு என்ன விதி, மகிமை எப்பேர்க் கொத்தது, புருஷர்களா அல்லது ஸ்ரீகளா இந்த விரதத்தை செய்யவேண்டியது, இதை எனக்கு விவரித்து சொல்லவேண்டுமென்று கேழ்க்க, பீஷ்மர் சொல்லுகிறார்: தருமநந்தனா, அமாவாஸ்யை என்றைக்கு சோமவார சகித மாய் வருகின்றதோ அந்தத் தினம் மிகவும் புண்ணிய தினம். தேவர்களுக்கும் கிடைப்ப தருமை. விரதம் செய் கிறவர்கள் அந்த தினம் அதிகாலையிலெழுந்து சாஸ்திர விதிப்படி ஸ்நாநம் செய்து மௌனமாய் பட்டு வஸ்திரங்க ளைக் கட்டிக்கொண்டு, அரசமரத்தடியில் வியக்தாவ்வியக்த ரமஃ என்கிற மந்திரத்தோடு விஷ்ணு முதலிய தேவதைக ளைப் பூஜை செய்து, பின்பு "அஸ்வத்தேவோப நிஷதம்"—

(வேத மந்திரம்.)

"ஆராத்தே, அக்னிரஸ்துதே," நமஸ்ச கிருத்ஸ்ய "ருத் ராய, ஊர்த்துவ, மூலமதஃ ஸ்சாக்கம், தத்திவிஷ்ணோஃ பர மம்பதம் ஆத்வாவஹந்து,ஹரயஸ்ஸசேதஸஃ," "தேவானை யத் எக்னேகுர்வத," "பிரம்ஹஜ ஞானம் பிர்தமம் புரஸ் தாத்து" இந்த மஹா மந்திரங்களாலும் பிறகு முன்வந் துள்ள புராணோக்த சுலோகமாகிய:

சு. "மூலதோ பிரம்ஹ ரூபாய........விருக்ஷ ராஜாயதே நமஃ." எனப்பட்ட மந்திர விசேஷங்களால் லக்ஷ்மீநாராயண ஸ்வரூபமான அஸ்வத்த நாராயணனை ஷோடசோபசாரங்களால் பூஜித்து, முத்து, இரத்தினம், பொன், வெள்ளி முதலிய நாணயங்களையாவது, பக்ஷைகள், ரவைகள், மற்றும் உணவு பதார்த்தங்களாகிய பக்ஷணாதிகளாலும நிறைந்த தாம்பரம் அல்லது வெண்கலத்திலுல்செய்த பாத்திரத்தில் 108-கனி வாக்கங்களாலும் நூற்றெட்டுத் தடவை பிரதக்ஷிணை செய்யவும். ஒவ்வொரு பிரதக்ஷிணைக்கும் ஒவ்வொன்றாக அம்மரத்தடியில் போட்டுக்கொண்டு வரவேண்டியது. பிரதக்ஷிணை முடிந்தவுடனே ஆசார்யரை சந்தன புஷ்பாதிகளால் பூஜித்து, பிரதக்ஷிணை செய்து போட்ட வஸ்துக்களில் இஷ்டபபடி சேர்த்து தக்ஷிணை தாம்பூலம் கொடுக்க வேண்டியது. ஸோமையின் பிரீதிக்காக சுமங்கலிகளுக்கு சந்தன புஷ்ப தீப தாமபூலங்கள் கொடுத்து நமஸ்கரித்துக்கொண்டு பூஜைசெய்து அனுப்ப வேண்டியது. பிறகு, தங்கள் சக்திக்குத தக்கபடி பிராமணர்களுக்கு போஜனம்செய்துவைத்து தானும் கடைசிவரையில் பேசாமல் மௌனமாய் இருந்து போஜனம் செய்ய வேண்டியது. ஓ தர்மநந்தன! இவ்விரதோத்தமக் கிரமத்தை நீ அறியும்படியாய்ச சொன்னேன். நீர் இந்த விரதம் கல்போக்தப்படி திரௌபதி, சுபத்திரை, உத்தரை முதலியவர்களை பூஜிக்குமபடி செய்யும். உத்தரையின் கர்ப்பத்தி லுள்ளவன் வெகு காலம் வாழ்ந்திருப்பான் என்று பீஷ்மர் சொல்லவே, தர்மா பீஷ்மரைப் பார்த்து: சுவாமீ, பொருளில்லாத ஏழை ஸ்திரீகள் பொன் முதலியனவற்றால் எப்படி இந்த விரதத்தை பூர்த்தி செய்வார்களென; அத்தகைய ஸ்திரீகள் பழங்கள், புஷ்பங்கள், பக்ஷ

ணங்கள், வஸ்திரங்கள் முதலியவைகளைப் போட்டு பிரத க்ஷணை செய்துவந்தால் அவ்விரத பலன் பூர்த்தியாய் அடைவார்கள். ஓ நரேந்திரனே, எல்லா தேவர்களும், முக்கியமாய் மஹா விஷ்ணுவும் சந்தோஷப் படும்படியான இம் மஹா விரதராஜத்தை உனக்குபதேசித்தேன், தன தான்னிய ஸம்பத்துகளையும், பல பாக்கியமும், புத்திர பௌத்திர விருததியும் கோரும்படியான ஸ்திரீகள் இதை செய்தாககளேயாகில், சகலமான ஐசுவரியங்களையும் அடைவார்கள என்பதைப்பற்றி பவிஷ்யோத்திர புராணததில் சோமவத்தி யமாவாஸ்யை விரத கதை விசேஷமாய் சொல்லப்பட் டிருக்கிறது. ஆகையால், நான்கு வாணஸ்தர்களும் இந்த விரதம் செய்து மேற்படி பலனை அடையலாம் என்று சூத புராணிகர் சௌனகாதி மஹரிஷிகளுக்கு உபதேசித்தார்.

முற்றிற்று.

---

# உத்தியாபனை விதி.



இவ்வித உத்தியாபனையின் விதியையும் தெரிவிக்கிறார். உத்தியாபனை என்றால், விரதப்பல பூர்த்தி எனப்படும்.

ஓ யுதிஷ்டிரரே, உத்தியாபனை செய்யும் விதம் சொல்லுகிறேன் கேளும். உத்தியாபனை செய்யாத எந்த விரதமாவது பூர்ணப்பலனைத் தராது. ஆகையால், ஸர்வதோ பத்திரமென்கிற மண்டலமேற்படுத்தி, அம்மண்டலத்தில பதினான்கு கலசங்களை ஸ்தாபித்து, பொன்னால் அரசமரம் செய்து, ரத்தினத்தால் மேடை ஏற்படுத்தி, நான்கு புஜங்களுள்ள விஷ்ணு ப்ரதிமையும்செய்து, லக்ஷ்மீதேவிபரதிமை, இரண்டு குன்றுமணி முதல் ஒரு பலம வரைக்கும் எடையுள்ள பிரதிமைகளை செய்து மற்ற பிரம்ம, ருத்திர பிரதிமைகளை சக்திக்குத் தக்கபடி செய்யவேண்டியது. இப்படி மேற்சொன்னவைகளைச் செய்ய சகதி இல்லாவிடில், லக்ஷ்மீ நாராயணப்ரதிமை முககியமாய் செய்விக்கவேண்டியது. இவைகளை ஏற்படுத்திக்கொண்டு கலசஸ்தாபனை செய்து, ஷோடசோபசார பூஜைகள் செய்து, இராத்திரி ஜாகரணம் செய்து 4-ஜாமமும் பூஜையும் பஜனைகள் முதலிய சத்கதா காலக்ஷேபங்கள் செய்து, மறுநாள் காலையில் ஸ்நாநாதி முதலிய நித்யகிருத்தியங்களை முடித்துக்கொண்டு, அரசன் சமுத்தோடு பாயஸமும் எள்ளும் கொண்டு, (இதம விஷ்ணுர் விசக்கிரமே) என்னும் வேதமந்திரத்திலாவது, பிரணவத்திலாவது, அஷ்டாக்ஷரியிலாவது அல்லது பஞ்சாக்ஷரத்திலாவது பிராமஹணனைக்கொண்டு ஹோமம் செய்யவேண்டியது. இதரமானவர்கள் விஷ்ணு ஸஹஸ்ர

நாமாதி சூக்தங்களால் ஹோமம்செய்து, பிறகு திரிமூர்த்தி ஸ்வரூபமான அஸவத்தநாராயணனைக் குறித்து, மூலதோ பிரம்ஹரூபாய என்கிற சுலோகத்தினல் நூற்றெட்டுதரம் ஹோமம்செய்து பூர்ணாஹூதி நடத்தவேண்டும். பிறகு, ஆசார்ய பிரம்ஹாக்களைப் பூஜித்து, கோதானுதி தசதானங் களும் வஸ்திரதானங்களும் செய்யவேண்டியது. பிரம்ஹ விஷ்ணு கலசங்கள் முக்கியமாகையால், இதோடு பதினுறு கலசங்கள் சேர்த்து தானம் செய்யவேண்டும். மற்றவர்க ளுக்கு ஷட்ரஸோபேதமாய் போஜனுதி, தாம்பூல தக்ஷிணை களால் திர்ப்திசெய்து, வஸ்திர எக்ஞோபவீதாதிகள் கொடுத்து நமஸ்கரிதது, பிராம்ஹண ஆசீர்வாதம் பெற் றுக்கொண்டு, அவாகளுக்கு உத்தரவு கொடுக்கவும். உத்தி யாபனை முதலிலாவது மத்தியிலாவது கடைசியிலாவது செய்யவேண்டியது முக்கியம். அதன்பிறகு பந்துமித்திரா ளுடன் போஜனுதிகள்செய்து தாம்பூலாதிகள் கொடுதது அவர்களிடததிலும ஆசார்யரிடத்திலும் ஆசீாவாதம் பெற வேண்டும். விரதம்செய்த காத்தா மௌனமாய் போஜ னம் செய்கிறவரையி லிருக்கவேண்டியது. இவ்விதமாய் பீஷ்மர் தர்மநந்தனருக்கு அமாசோமவார உத்தியாபனைக் கிரமம் அறிவித்து விரதப்பிரபாவத்தையும் தெரிவித்தார். அப்போது, உத்திரை முதலிய ஸ்திரீகளின் கையில் விரதம் நடத்தி வைத்தபடியால், உத்திரைக்கு புத்திரனுண்டாகி மென்மேலும் விருததி யடைந்தாரென்று சூதபுராணிகா சௌனகாதி மஹரிஷிகளுக்கு உபதேசித்தார். இப்புண் ணிய சரித்திரமும் விரதமும் பவிஷ்யோதர புராணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

முற்றிற்று.

---

ஸ்ரீ ர ஸ் து.

# கருடபஞ்சமி விரதகல்பம்.



அத்யபூர்வோக்த ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ அஸ்மாகம் ஸஹகுடும்பானாம் க்ஷேமஸ்தைர்ய ஆயுராரோக்கிய ஐஸ்வர்யாபி விருத்யர்த்தம் தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித்த ப்பல புருஷார்த்த சித்யர்த்தம் புத்திர பௌத்ராப்பி விருத்யர்த்தம் தீர்க்கஸௌவாஸிநீத்வ சித்யர்த்தம் ஸமஸ்த மங்களா வாப்தியர்த்தம், வருஷே வருஷே ப்ரயுக்த ப்பணிகௌரீ தேவதா முத்திஸ்ய, பணி கௌரீ தேவதா ப்ரீத்யர்த்தம் கௌரீபூஜாம்ச கரிஷ்யே. ஆதௌ கலசபூஜாம கரிஷ்யே (நமஃ) கணபதி பூஜாம் கரிஷ்யே. கணபதி பூஜை முடித்து, கௌரி பூஜையும் ஆரம் பித்து செய்யவேண்டியது.

கௌரீதியானம். ஆகர்சதேவ தேவேசி சங்கரார்த்த சரீரிணி, ஆவாஹயாமி பக்தியா த்வாம்ப்பணிகௌரீ நமோஸ்துதே. ப்பணிகௌரீ தேவதாயைநமஃ தியாயாமி, ஆவாஹ யாமி. மாணிக்ய வஜ்ர வைடூர்ய நீலரத்னதி சோப்பிதம், ரத்ன சிம்ஹாசனம் திவ்வியம் க்ருஹாண பரமேஸ்வரி பணிகௌரீ........நமஃ ரத்னஸிம்ஹாஸனம் ஸமாப்பயாமி. கங்கா கோதாவரீ தோயம் க்ருஷ்ணவேணீ ஸமுத்பவம், அர்க்கியம் தாஸ்யாமிதேதேவி பணிகௌரீ நமோஸ்துதே பணிகௌரிதே....நமஃ அர்க்கியம் ஸ....மி. பயோததிஸமா யுக்தம் க்ருதசர்க்கர ஸம்யுதம், பஞ்சாம்ருத ஸ்நாநமிதம்

க்ருஹாண ஸமர்த்தனீ, பணிகௌரீதே....நம: பஞ்சாம்ருத ஸ்நாநம் ஸ....மி. ஆபோஹிஷ்டேதீ, கங்கேச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி, நர்மதா ஸிந்து காவேரி ஜலேஸ்மின் ஸன்னிதிம் குரு, ஜபம் பிரகல்பயேத்தீர்த்தம் ஸர்வபாப ப்ரமுக்தயே. பணிகௌரீ....நம: சுத்தோதக ஸ்நாநம் ஸ....மி. ரக்தபீதமயம் வஸ்த்ரம் துகூலஞ்ச மனோஹரம், மயாதத்தமிதம் வஸ்த்ரம் தாரயதாம் ப்பண்டமர்த்தனீ. பணிகௌரீ....நம: வஸ்த்ரம் ஸ....யாமி. ப்ரம்ஹஸூத்ரம் சுப்பரமிதம் திரிகுணம் திரிகுணைர்யுதம், பிரம்ஹகிரந்தி யுதம்தேவி த்தாரயஸ்வ மஹேஸ்வரி. பணிகௌரீ....நம: எஜ்ஞோபவீதம் ஸ....மி. கௌரீமிமாயேதி குங்குமாதி பரிமள திரவ்யாணி ஸ....மி. முக்தா மாணிக்ய வைடூர்ய, ரத்னஹேமாதி நிர்மிதம், திவ்ய மாப்பரணமதேவி கிரிஜாயை நமோஸ்துதே. பணிகௌரீ....நம: ஆபரணானி ஸ....மி. ஸ்ரீ கந்த்தம் சந்தநோனமிஸ்ரம் கஸ்தூர்யாதி ஸமன்விதம், கந்த்தம் க்ருஹாணதேவேசி, மயாதத்தமிதம் சுபே. பணிகௌரீ....நம: ஸ்ரீ கந்தான் ஸ....மி அக்ஷதாந்தவளாகாரான், சாலீதண்டுல மிஸ்சிரிதான், ஹரிதரா சூர்ணஸம்யுக்தான் பிரீத்யர்த்தம் ப்ரதிக்ருஹயதாம் பணிகௌரீ நம: அக்ஷதான் ஸ—மி. சாமந்திகா வகுள சம்பக பாடலாப்ஜை:, புன்னாக ஜாஜிகரவீர் ரஸாலபுஷ்பை:, பில்வப்ரவாள துலஸீதள மல்லிகாத்யை:, துவாம் பூஜயாமி ஜகதீஸ்வரி தேபதாப்ஜே. பணிகௌரீ....நம: புஷ்பாணி பூஜயாமி.

## அதாங்க பூஜா.

சிவாயை நம: பாதௌ பூஜயாமி.
பவான்யை நம: குல்பௌ பூ—மி
ருத்திராண்யை நம: ஊரு பூ—மி

| | |
|---|---|
| சர்வாண்யை நமஃ | ஜங்கே பூ—மி |
| ஸர்வமங்களாயை நமஃ | கடிம் பூ—மி |
| அபர்ணாயை நமஃ | ஸ்தனௌ பூ—மி |
| மிருடாயை நமஃ | கண்டம் பூ—மி |
| சண்டிகாயை நமஃ | பாஹூன் பூ—மி |
| ஆர்யாயை நமஃ | முகம் பூ—மி |
| சக்தியை நமஃ | நாஸிகாம் பூ—மி |
| ஸுநேத்திராயை நமஃ | நேத்ரே பூ—மி |
| ஸுகர்ணாயை நமஃ | கர்ணௌ பூ—மி |
| மேனகாத்மஜாயை நமஃ | லலாடம் பூ—மி |
| பணிகௌர்யை நமஃ | சிர பூ—மி |
| மஹாகௌர்யை நமஃ | ஸர்வாங்காணி பூ—மி |

## கௌரீ அஸ்டோத்ர சதநாம பூஜை.

ஓம் மஹாகௌரியை நமஃ
மஹாதேவ்யை
ஜகன்மாத்ரே
ஸரஸ்வத்யை
சண்டிகாயை
லோகஜனன்யை
ஸர்வதேவாதிதேவதாயை
பார்வத்யை
பரமாயை
ஈசாயை
நகேந்திரதனயாயை
ஸத்தியை
பிரம்மசாரிண்யை
சர்வாண்யை
தேவமாத்ரே
த்ரிலோசன்யை
பிரம்ஹண்யை
ஓம் வைஷ்ணவ்யை நமஃ
ரௌத்ரியை
காளராத்ரியை
தபஸ்வின்யை
சிவதூத்யை
விசாலாக்ஷ்யை
சாமுண்டாயை
விஷ்ணுசோதர்யை
சித்களாயை
சின்மயாகாராயை
மஹிஷாஸுரமர்த்தின்யை
காத்யாயின்யை
காலரூபாயை
கிரிஜாயை
மேனகாத்மஜாயை
பவான்யை
மாத்ருகாயை

ஓம் கௌர்யை நமஃ
ரமாயை
ராமாயை
சுசிஷ்மிதாயை
பிரம்ஹஸ்வரூபின்யை
ராஜ்யலக்ஷ்மியை
சிவப்ரியாயை
நாராயண்யை
மஹாசக்த்யை
நவோடாயை
பாக்கியதாயின்யை
அன்னபூர்ணையை
ஸதாநந்தாயை
யௌவனயை
மோஹின்யை
ஞானசக்தியை
ஞானகம்யாயை
நித்யாநித்யஸ்வரூபிண்யை
கமலாயை
கமலாகராயை
ரக்தவர்ணையை
களாநிதயே
மதுப்ரியாயை
கல்யாண்யை
கருணையை
ஜனஸ்தானயை
வீரபத்னியை
விரூபாக்ஷ்யை
விராதிதாயை
ஹேமாபாயை
சிருஷ்டிரூபாயை
சிருஷ்டிஸம்ஹாரகாரிண்யை
ரஞ்ஜனயை

ஓம் யவனகராயை நமஃ
பரமேஸ்வரியாயை
பராயை
புஷ்பிண்யை
புருஷாகாராயை
மஹாரூபாயை
மஹாரௌத்ரியை
மஹாபாதகநாசின்யை
காமாக்ஷ்யை
வாமதேவ்யை
வரதாயை
ப்பயநாசின்யை
வாக்தேவ்யை
வசஸ்யை
வாராஹ்யை
விஸ்வமோகின்யை
வர்ணனிலயாயை
விசாலாக்ஷாயை
குலஸம்பத் ப்ரதாயின்யை
ஆர்த்ததுக்கச்சேததக்ஷகாயை
அம்பாயை
நிகிலயோகின்யை
ஸதாபுரஸ்தாயின்யை
தருமூலதரங்கிதாயை
ஹரவாஹஸமாயுக்த முனிமோக்ஷபராவராயை
த்தராதரபவாயை
முக்தாயை
புரமந்த்ராயை
கரப்ரதாயை
காயை
வாக்பவை

ஓம் தேவ்யை நமஃ
க்லீங்கார்யை
ஸூம்விதே
ஈஸ்வர்யை
ஹ்ரீங்காராக்ஷரபீஜாயை
சாம்பவ்யை

ஓம் பிரணவாத்மிகாயை நமஃ
ஸ்ரீமஹாகௌர்யாய
பணிகௌரீதேவதாயை

கௌரீ அஷ்டோத்ர சதநாம
பூஜாம் ஸமர்ப்பயாமி.

பிறகு தூபதீப நைவேத்தியம்.

வநஸ்பத்யுத்பவைர்திவ்யைர் நாநாகந்தைஸுஸம்யுதஃ, ஆக்ரேயஃ ஸர்வதேவானும், தூபோயம் பிரதிகிருஹ்யதாம். பணிகௌரீ தேவதாயை நமஃ தூபம் ஆக்ராபயாமி. பக்தியாதத்தம் மயாதீபம், த்ரிவர்த்தி க்ருதஸம்யுதம், அந்தகார நிவிர்த்தியர்த்தம், கிருஹாண க்ஞானநாசனி. பணிகௌரீதே....நமஃ தீபம் தர்சயாமி. பக்ஷ்யைர் போஜ்யைஸ்ஸசோஷ்யைஸ்ச பரமான்னம் ஸசர்க்கரம், நைவேத்யம் கிருஹயதாம்தேவி சம்புபத்னி நமோஸ்துதே. பணிகௌரிதே....நமஃ மஹாநைவேத்யம் நிவேதயாமி. பூகீப்பல ஸமாயுக்தம், நாகவல்லிதளைர்யுதம், கர்ப்பூர சூர்னஸம்யுக்தம், தாம்பூலம் பிரதி க்ருஹ்யதாம். பணிகௌரி தே....நமஃ தாமபூலம் ஸ்மர்ப்பயாமி ஸ்வாணபுஷ்பதக்ஷிணும் ஸமர்ப்பயாமி, வேத மந்த்ரம். மாஞேஹிகும்ஸீர் ஜாதவேத, இதிகர்ப்பூர நீராஞ்ஜனம் ஸமர்ப்பயாமி. பஞ்சவர்த்தி ஸமாயுக்தம், ஸ்வாது கர்ப்பூரஸம்யுதம், சித்ரம் நீராஞ்ஜனம் தேவி, க்ருஹாண ஹரவல்லபே. பணிகௌரீ தே....நமஃ காப்பூர நீராஞ்ஜனம் தர்சயாமி. வேதமந்த்ரம். கௌரீமிமாயேதி அல்லது மந்தரபுஷ்பம் ஸமர்ப்பயாமி. சு. சரத்சந்த்ர விகாஸ மந்ஹாஸாம், ஸ்புரதிந்தீவர லோசனுபிராமாம, அரவிந்தஸமான சுந்தராஸ்யா, மரவிந்தாஸன ஸுந்தரீமுபாஸே. பணிகௌரீ தே....நமஃ மந்த்ர புஷ்பம் ஸ....மி. யானிகானிச பாபானி ஜன்மாந்தர க்ருதானிச

தானிதானி பிரணஸ்யந்தி ப்ரதக்ஷிண பதேபதே. பணி கௌரீ நமஸ்தேஸ்து, கைலாஸ நிலயேஸ்திதே, லோக மாதர் நமஸ்துப்யம், ஸௌபாக்கியம தேஹிமேஸதா. இம் மாதிரி ப்ராத்தித்து ப்ரதக்ஷண நமஸ்காரம் செய்யவேண்டி யது. (10 முடி) தசகிரந்தி ஸமாயுக்தம், குங்குமாக்தம ஸூதோரகம், கரே பதனுமி வரதே தவப்ரீதி கரம் சுபம். இந்த மந்திரத்தோடு நோன்பு தோரம் (கயிர்) கையில் கட்டிக்கொள்ள வேண்டியது. பிறகு பூஜைசெய்விக்கிற வாத்தியாருக்கு பூஜை செய்து உவாயன தாம்பூலம் கொடுக்கவேண்டியது. மந்தரம். பணிகௌரீச க்ருஹ்ணது, பணிகௌரீ ததாதிச, தாரகௌ பணிகௌரீச, பணி கௌரீ நமோஸ்துதே. புனஃ பூஜைசெய்கிறது. அக்ஷதை புஷ்பம் ஜலத்தோடு கையில் போட்டுக்கொண்டு எஸ்யஸ் மிருத்தியாச என்கிற மந்திரத்தோடு, அனேனபணிகௌரீ தேவதாஸூப்ரீதா ஸூப்ரஸன்னு, வ்ரதாபவந்து என்று, ஈசுவரி ப்ரீதியாய் கீழே ஜலம் விட்டுவிடவேண்டியது.

கருடபஞ்சமி விரதகதை கேட்கும்போது ஆரம்பத்தில், புஷ்பாக்ஷதைகளை கையில் வைத்துக்கொண்டு கதைக் கேட்கவேண்டியது. கடைசியில் அந்த புஷ்பாக்ஷதையை அம்மன்பேரில் போட்டு நமஸ்காரம் செய்யவேண்டியது. பிறகு, கதை சொல்பவராகிய ப்ராம்ஹணரையும் நமஸ் கரித்து அக்ஷதை ஆசீர்வாதம் பெற்றுக்கொள்ள வேணடியது.

இதி பூஜாவிதானம் ஸம்பூர்ணம்.

---

# கருடபஞ்சமி விரதகதை.



ஸ்ரீமத் புராணிக சிரேஷ்டரான ஸூதமாமுனிவர், சௌனகாதி மஹரிஷிகளைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினார். அஃதெப்படி என்றால், ஓ சௌனகாதி மஹரிஷிகளே, விரதங்களில் உத்தமமான ஒரு விரதம் சொல்லுகிறேன் கேளுங்கள். எந்த விரதம் அனுஷ்டித்து செய்யுமளவில் ஸதிரீகள், மாங்கல்யவிர்த்தி அடைவார்களோ, அப்பேர்கொத்த க்ஷேமகரமான விரதத்தை ஆவணிமீ (பூர்வபக்ஷ) அல்லது சுத்த பஞ்சமிதிதி தினத்தில், சகோதரர்கள் உள்ளவர்களால் பத்துவருஷம் செய்யவேண்டியது. இப்படிச் சொன்ன சூதருடைய வார்த்தைகளை சௌனகாதிகள் கேட்டார்கள். "ஓ புராணிக சிரேஷ்டரே" மிக ஶ்ரத்தாபக்தியுள்ள எங்களுக்கு, உத்தமமான இந்த விரத மகத்துவத்தை கருணையுடன் உபதேசம் பண்ணவேண்டுமென்று கேட்க, அதை சூதமாமுனிவர் எடுத்துரைக்க ஆரம்பித்தார். ஓ தபஸ்ரேஷ்டர்களே தம்பி தமையன்மாருள்ள ஒரு ஸ்திரீயானவள் சிராவணமென்கிற ஆவணிமாத சுத்த பஞ்சமியில், உதயத்திலெழுந்து தந்ததாவனாதிகள் முடித்து மஞ்சள் முதலியவைகளால் மங்கள ஸ்நானம் செய்து மடிவஸ்திரங்களைத் தரித்து சதுரமான மண்டபமேற்படுத்தி பஞ்சவர்ணக் கோலங்கள் போட்டு பல புஷ்பங்களால் அதை அலங்கரித்து அந்த மண்டப மத்தியில் உயர்ந்தாஸனம் போட்டு அந்த மணையின்மீது தலைவாழையிலை போட்டு ஒருபடி அரிசி கொட்டி, பொன்னால் அல்லது வெள்ளியினால இல்லாவிடில் தாம்பரத்தினால்,

முடிவுக்கு திரவிய லோபமின்றி மண்ணுலாவது சக்திக்குத் தக்கபடி ஸாப்பபிரதிமை செய்வித்து, அரிசியின்மேலதை வைத்து, அதின் படத்தின் மத்தியில் கௌரீபிம்பம் மஞ்சளால் செய்து ஸ்தாபிதது பணி பணமண்டல வர்த்தினியான கௌரீதேவியை, தியானவாஹன ஆபரண சந்தன புஷ்ப அக்ஷதைகளாலும், தூபதீப போஜ்ய பக்ஷ்யங்களாலும், நைவேத்திய தாம்பூல, கர்ப்பூர தீபாராதனை ஸ்வர்ண மந்த்ர புஷ்ப பிரதக்ஷிண நமஸ்காராதி சகலமான ஷோடசோபசார பூஜைகளால் கௌரீதேவியைப் பூஜித்து சந்தோஷப்படுத்தி பத்து முடியுள்ள புதுதோரத்தையும் வைத்து பூஜித்து, அந்த தோரததை உபாத்தியாயருடைய ஆசீர்வாதத்துடன் கையில் வாங்கிக் கட்டிக்கொண்டு தாம்பூல தக்ஷிணைகளுடன் பூஜை செய்விக்கிற பிராம்ஹணருக்கு சந்தனபுஷ்ப தாம்பூலாதி உபாயனதானம் செய்து பிராம்ஹண போஜனம் திருப்தியாயிட்டு, பிறகு தானும் சாப்பிட வேண்டியது. இப்படி எந்த ஸதிரீயானவள் சுசீலையாய் பக்தியோடு பத்துவருடம் ஆசரித்து வ்ரதபூர்ததி செய்கிருளோ, அப்பெண்மணியின் கோரிக்கைகள் பூர்த்தியடைந்து, இம்மையில் சௌக்கியமாயிருந்து போகபாக்யங்களை அநுபவித்து மறுமையில் மோக்ஷத்திற்காளாவாள். இப்படிச சொன்ன ஸூதமாமுனியின் வார்த்தைகளைக்கேட்ட தபோநிதிகளாகிய சௌனகாதிகள் சொல்லத் தொடங்கினார். ஸ்ரீமத் வேதவ்யாஸானுக்கிரகத்தால் கிடைதத அனேக புராணங்களை எடுத்துச் சொலலத்தக்க சக்தியுள்ள ஓ ஸூதமாமுனிகளே மஹாத்மாவான கருடனுடைய ஜனன சரித்திரமும், அவர் பராக்ரமும் கேட்க விரும்புகிறோமென்று சொல்ல, அப்போது கிருஷ்ணத்வைபாயனருடைய கிருபைக்குப் பாததிரரான ஸூதமாமுனி,

சௌனகாதி மஹாருஷிகளைப்பார்த்துச் சொல்லத்தொடங்கினார். "ஓ முனிவர்களே, முன்னே பிரம்ஹாவின் புத்ரரான, கஸ்யப மஹார்ருஷி தன் பத்னியான ஸுபர்ணியினிடத்தில் மிக வீர்ய தைர்யமுள்ளவனான கருடனென்னும் ஒரு புத்திரனை பெற்றாள்." அவர் அப்படி அபிவிருத்தி அடையும்போது தன் தாயாருக்கு சம்பவித்த அடிமைத் தன்மையைப் பார்த்து, "ஓ மாதாவே, நீ இப்படி கடினமான அவஸ்தை படும்படி நேர்ந்த காரணம் தெரிவிக்க வேண்டுமென்று வினவ," தன் விருத்தாந்தத்தை புத்திரனுக்குத் தெரியசசொல்லி, ஓ என் மகனே என் சக்களத்தி களின பிள்ளைகளான காகோதரர்களுக்கு, அமிர்தம் கொண்டுவந்து கொடுப்பாயாகில் அப்போது என்னுடைய தாஸத்துவம ஒழியுமென்று சொன்னதைக் கேட்டு, உடனே ஸாக்ஷாத் புண்டரீகாக்ஷனுடைய கருணைக்குப் பாத்திரரான தார்க்ஷியன் என்னும் கருடன் அமுர்தம் கொண்டுவருவதற்காக ஆகாயமார்க்கமாய்ப் பறந்து தேவலோகம் சென்று, அனேக சஸ்திர, அஸ்திரங்களுடைய இந்திராதி தேவாகளைப் பார்த்து நமஸ்கரித்து தன் இறகுகளால் உண்டான காற்றினால் அதி கஷ்டமான மார்க்கங்களைத தாண்டி பாற்கடலில் அமிர்தத்தைப் பாதுகாத்துக் கொண்டிருந்தவர்களை யெல்லாம் ஜயித்து தன் புத்தி பலதால் ஒரு விநாடியிலே புத்திசாலியாகிய தார்க்ஷ்ய புத்திரனாகிய கருடனால் அமிர்தகலசம் கொண்டுவந்து கத்ரு என்கிற சக்களத்தி தாயாரிடத்தில் கொடுத்தான். கத்ருவாகிய ஸாபதனி மாதருவானவள் கருடனைப் பார்த்து, ஸுபர்னனென்று பேரிட்டழைத்தாள். அப்போது கருடன் கத்ருவைப் பார்த்து "ஓ அம்மணி, என் தாயாருடைய தாஸத்துவம் நீங்கும்படிகேட்க," அப்போது கத்

ருவை தன் புத்திரர்களாகிய காகோதரர்கள் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு, ஸர்பானனைப் பார்த்து இது முதல் உன தாயாரா தாஸத்துவம் துலைந்தொழிந்தது. நீ உன் இஷ்டப்படி சுகமாயிருக்கலாமென்று சொல்லி, வேலைக் காரித் தன்மையிலிருந்து விடுவிக்கப்பட்டாள். அப்போது இந்திராதி தேவர்கள் அமிர்தத்தை பங்கிட்டுக்கொள்ள மிக சந்தோஷத்துடன் தேவ கூட்டங்கள் ஒன்றுசேர்ந்து, ஸர்ப்பங்களால் பானம் பண்ணுவதற்கு முன் தேவர்களே சென்று அமிர்தத்தை கிரஹித்துக்கொண்டு போனார்கள். இப்பேர்க்கொத்த கஷ்டமும் அருமையுமான கார்யங்கள் செய்த பக்ஷிராஜனான கருடனுடைய சரித்திரத்தை விசேஷ மாய் எடுத்து ஸ்தோத்திரம்செய்ய, ஆயிரம் நாவுள்ள ஆதி சேஷனுக்கும் சொல்லத்தரமோ. இதுவுமன்றி, ஆவணி பூர்வபக்ஷ பஞ்சமி தினத்தில் இந்த அமிர்தம் கொண்டு வரப்பட்டதாகையால், இது கருடபஞ்சமி என்னும் பிர ஸித்தியான பேர் பெற்றது. மேலும். இந்த விரதத்தை அநுஷ்டிக்கிறவர்களும், இந்த விரதமகிமையைப் படிக்கிற வர்களும், சிரவணஞ்செய்கிறவர்களும், எழுதுகிறவர்களும், எழுதிப் படித்தவர்களும், இவ்வுலகசுக மனுபவித்துப் பிறகு, ஸ்ரீ மஹா லக்ஷ்மி கடாக்ஷத்தாலும், கௌரீ கிருபை யாலும் சகலபாப விமுக்தர்களாய் நற்கதி அடைவார்கள். அதாவது, சுவர்க்கலோக மடைவது திண்ணமென்று சொன்ன சூதமஹா முனிவருடைய வார்த்தைகளை பூஷண மாக தாங்கள் கிரஹித்தரிந்த சௌனகாதி முனிவர்களெல் லோரும் மிக சந்தோஷத்துடன் கூடினவர்களாய் அதிக திருப்தி அடைந்தார்கள். இப்படி பிரம்ஹாண்ட புராணத் தில் பிரம்ஹநாரத ஸம்வாதத்தில் எடுத்துச்சொன்ன பணி கௌரீ விரதமென்னும் கருடபஞ்சமி விரதம் முற்றிற்று.

ஸ்ரீ சுப்பிரமண்யாய நமஃ

---

ஸ்ரீ மஹாலக்ஷ்மியைநமஃ

# வரலக்ஷ்மீ விரதகல்பம்.

ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சுபதிதௌ அஸ்மாகம்ஸஹ குடும்பானாம், ப்பர்தாஸஹ க்ஷேமஸ்தைர்ய விஜய, ஆயுராரோக்ய ஐஸ்வர்யாப்பி விருத்யர்த்தம தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித ப்பல புருஷார்த்த சித்யர்த்தம் இஷ்ட காமியார்த்த சித்யர்த்தம் ஸத்ஸந்தான ஸௌபாக்கிய சுப்பபலா வாப்த்யர்த்தம் வருஷே வருஷேப்ரயுக்த வர்லக்ஷ்மீ தேவதா ப்ரீத்யர்த்தம் ப்பவிஷ்யோத்ரபுராண கல்போக்த ப்ரகாரேணயாவச்சக்தி தியானுவாஹனாதி ஷோடசோபசார பூஜாம் கரிஷ்யே. (நமஃ) ததங்கத்வேந கலசபூஜாம் கரிஷ்யே. (நமஃ) கலசேகந்த புஷ்பாக்ஷதைரர்ப்யர்ச்ய கலசஸ் சோபரிஹஸ்தம் நிதாய. சுலோகம். கலசஸ்யமுக்கே விஷ்ணு, கண்ட்டேருத்ர ஸமாஸ்ரிதஃ மூலே தத்ரஸ்திதோப்ர்ஹ மத்தியே மாத்ருகணு ஸ்முருதாஃ குக்ஷௌது ஸாகராஸ்சர்வே ஸப்தத்வீபா வஸுந்த்ரா, ருக்வேதோத்த ஜைுர்வேத ஸாமவேதோஹ்பதர்வணஃ அங்கைஸ்சஸஹிதாஸர்வே கலசாம்புஸமாஸ்ரிதாஃ ஆயாந்து தேவீபூஜார்த்தம் துரிதக்ஷயகாரகாஃ. சு. கங்கேச யமுனேசைவ கோதாவரி ஸரஸ்வதி, நர்மதாசிந்து காவேரிஜலேஸ்மின் சன்னிதிம்குரு. ஏவம் கலசபூஜாம் குர்யாத்து. ஆதௌ கணபதி பூஜாஞ்சகரிஷ்யே (நமஃ) அனந்தரம் லக்ஷ்மீ பூஜைக்கி முந்தி ப்ராணப்ரதிஷ்டைசெய்து பூஜைக்கு ஆரம்பிக்கவேண்டியது. லக்ஷ்மீதியானம். சு. பத்மாஸநேபத்

மகரே ஸர்வலோகைக பூஜிதே, நாராயணப்ரியே தேவி ஸுப்ரீதாப்பவ ஸர்வதா. பிறகு ஷோடசோப சாரபூஜை. சு. க்ஷீரோதார்ணவஸம்ப்பூதே கமலேகமலாலயே ஸுஸ்திராப்பவமேகேஹே, ஸுராஸுர நமஸக்ருதே. ஸ்ரீவரலக்ஷிமீ தேவதாயை நம: த்யாயாமி. ஸர்வமங்கள மாங்கல்யே, விஷ்ணுவக்ஷஸ்தலாலயே, ஆவாஹயாமிதேவீத்வாம் ஸுப்ரீதாப்பவ ஸர்வதா வரலக்ஷிமீ தேவதாயைநம: ஆவாஹயாமி. சு ஸூர்யாயுத நிப்பஸ்பூர்தே, ஸ்புரத் ரத்னவிப்பூஷிதே, ஸிம்ஹாஸன மிதம்தேவி, ஸ்தீயதாம் ஸுரபூஜிதே வரலக்ஷிமீ தேவாதாயைநம: ரத்னசிம்ஹாஸனம் ஸ....மி சுத்தோத கஞ்ச பாதரஸ்தம், கந்த்த புஷ்பாதிமிஸ்ரிதம் அர்க்யம் தாஸ்யாமிதே தேவி, க்ருஹாண ஸுரபூஜிதே. மஹாலக்ஷிமீ தே....நம: அர்க்கியம் ஸ....மி. ஸுவாஸித ஜலம் ரம்யம்; ஸர்வதீர்த்த ஸமுத்ப்பவம்; பாத்தியம் கிருஹாணதேவித்வாம். ஸர்வதேவ நமஸ்க்ருதே. ஸ்ரீவரலக்ஷிமீ தே....நம: பாத்யம் ஸ....மி. ஸுவர்ணகலசாநீதம் சந்தனுகரு ஸம்யுதம், க்ருஹாணசமனம்தேவி மயாதத்தம் சுபப்ரதே. வரலக்ஷிமீ தே....நம: ஆசமநீயம் ஸ....மி. பயோதத்திக்ருதோபேதம், சர்க்கராமத்துஸம்யுதம், பஞ்சாம்ருதஸ்நாநமிதம்; கிருஹாண கமலாலயே. வரலக்ஷிமீ தே....நம: பஞ்சாமருதஸ்நாநம் ஸ....மி. கங்காஜலம் மயாநீதம் மஹாதேவ சிரஸ்திதம்; சுத்தோதக ஸ்நாநமிதம் க்ருஹாணவித்து ஸோதரி வரலக்ஷிமீ தே....நம: சுத்தோதக ஸ்நாநம் ஸ....மி. ஸுராார்சிதாங்கிரியுகளே; துகூலவஸனப்ரியே; வஸத்ரயுக்மம்ப்ரதாஸ்யாமி; கிருஹாண ஹரிவல்லபே வரலக்ஷிமீ தே....நம: வஸ்த்ரயுக்மம் ஸ....மி கேயூரகங்கணே திவ்யே; ஹாரநூபுரமேக்கலான் விப்பூஷணுன்ய மூல்யாநி, கிருஹாணருஷி பூஜிதே. வர

லக்ஷ்மீ தே....நமஃ திவ்ய ஆப்பரணானி ஸ....மி தப்தஹேம க்ருதம் ஸூத்ரம், முக்தாத்தாம விப்பூஷிதம், உபவீதமிடதம்தேவி, க்ருஹாணத்வம், சுப்பப்ரதே வரலக்ஷ்மீ தேவதாயைநமஃ, எக்ஞோபவீதம் ஸ....மி. கர்ப்பூராகரு கஸ்தூரி ரோசனதிப்பி ரன்விதம் கந்தம் தாஸ்யாம்யஹம்தேவீ, ப்ரீத்யர்த்தம பிரதிக்ருஹ்யதாம். வரலக்ஷ்மீ தே....நமஃ ஸ்ரீகந்த்தம் ஸ....மி. அக்ஷதான த்தவளான்தேவி சாலீயான் தண்டுலான் சுப்பான், ஹரித்ராகுங்குமோபேதான், க்ருஹ்பதாம், அப்த்திபுத்ரிகே. வரலக்ஷ்மீ தே....நமஃ அக்ஷதான் ஸ....மி. மல்லிகாஜாதி குஸுமை, ஸ்சம்பகைர் வகுளேஸ்தத்தா, சதபத்ரைஸ்ச கல்ஹாரைஃ பூஜயாமி ஹரிப்ரியே வரலக்ஷ்மீ தே....நமஃ புஷ்பாணி பூஜயாமி.

## அத்தாங்க பூஜை.

| | |
|---|---|
| சஞ்சலாயை நமஃ | பாதௌ பூஜயாமி |
| சபலாயை | ஜானுநீ பூ—மி |
| பீதாம்பரத்தராயை | ஊரு பூ—மி |
| கமலவாஸின்யை | கடிம் பூ—மி |
| பத்மாலயாயை | நாபிம் பூ—மி |
| மதனமாத்ரே | ஸ்தனௌ பூ—மி |
| லலிதாயை | ப்புஜத்வயம் பூ—மி |
| கம்புகண்ட்யை | கண்ட்டம் பூ—மி |
| ஸுமுக்காயை | முக்கம் பூ—மி |
| ஸ்ரீயை | ஓஷ்டௌ பூ—மி |
| ஸுநாஸிகாயை | நாஸிகாம் பூ—மி |
| ஸுநேத்திரே | நேத்ரே பூ—மி |
| ரமாயை | கர்நௌ பூ—மி |
| கமலாயை | சிரஃ பூ—மி |
| வரலக்ஷ்மியை. | ஸர்வாண்யங்காணி பூ—மி |

## லக்ஷ்மீ அஷ்டோத்ரம்.

முதலில் ஓம் என்றும் கடையில் நமஃ என்றும் ஒவ்வொரு நாமத்திற்கும் சேர்க்கவேண்டும்.

ஓம் ப்ரக்ருத்யை நமஃ
விக்ருத்யை
வித்யாயை
ஸர்வபூதஹிதப்ரதாயை
ஸ்ரார்த்தாயை
விபூத்யை
ஸுரப்யை
பரமாத்மிகாயை
வாசே
பத்மாலயாயை (10)
பத்மாயை
சுசயே
ஸ்வாஹாயை
ஸ்வத்தாயை
ஸுத்தாயை
த்தன்யாயை
ஹிரண்மையை
லக்ஷ்மியை
நித்யபுஷ்ட்டாயை
விபாவர்யை (20)
அதித்யை
தித்யை
தீப்தாயை
வஸுத்தாயை
வஸுத்தாரிண்யை
கமலாயை
காந்தாயை
காமாக்ஷ்யை
க்ரோதஸம்பவாயை
ஓம் அனுக்ரஹப்ரதாயைநமஃ (30)
புத்தயே
அநக்காயை
ஹரிவல்லபாயை
அசோகாயை
அம்ருதாயை
தீப்தாயை
லோகசோகவிநாசின்யை
தர்மநிலயாயை
கருணாலோகமாத்ரே
பத்மப்ரியாயை (40)
பத்மஹஸ்தாயை
பத்மாக்ஷ்யை
பத்மஸுந்தாயை
பத்மோத்பவாயை
பத்மமுக்யாயை
பத்மநாபப்ரியாயை
ரமாயை
பத்மமாலாத்தராயை
தேவ்யை
பத்மின்யை (50)
பத்மகந்தின்யை
புண்யகந்தாயை
ஸுப்ரசன்னாயை
ப்ரஸாதாபிமுக்கியை
ப்ரபாயை
சந்த்ரவதனாயை
சந்த்ராயை
சந்த்ரஸஹோதர்யை

ஓம் சதுர்ப்புஜாயை நமஃ
சந்த்ரரூபாயை (60)
இந்திராயை
இந்துசீதலாயை
ஆஹ்லாதஜனன்யை
புஷ்ட்யை
சிவாயை
சிவங்கர்யை
சத்யை
விமலாயை
விஸ்வஜனன்யை
துஷ்டாயை (70)
தாரித்ரநாசின்யை
ப்ரீதிபுஷ்கரிண்யை
சாந்தாயை
சுக்லமால்யாம்பரத்தராயை
ஸ்ரீயை
ப்பாஸ்கர்யை
பில்வநிலயாயை
வராரோஹாயை
யஸஸ்வின்யை
வஸுந்த்தராயை (80)
உதாராங்காயை
ஹரிண்யை
ஹேமமாலின்யை
த்தனத்தான்யகர்யை

ஓம்சித்தயேநமஃ
ஸ்த்ரைணஸௌம்யாயை
சுபப்ரதாயை
ந்ருபவேஸ்ம கதாநந்தாயை
வரலக்ஷ்மீயை
வஸுப்ரதாயை (90)
சுப்பாயை
ஹிரண்யப்ராகாராயை
ஸமுத்ரதனயாயை
ஜயாயை
மங்களாயை
விஷ்ணுவக்ஷஸ்தளஸ்திதாயை
விஷ்ணுபத்ன்யை
பிரஸன்னாக்ஷ்யை
நாராயணஸமாஸ்ரிதாயை
தாரித்ரத்வம்ஸின்யை (100)
தேவ்யை
ஸர்வோபத்ரவவாரிண்யை
நவதுர்காயை
மஹாகாள்யை [யை
ப்ரம்ஹவிஷ்ணு சிவாத்மிகா
திரிகாலஞானஸம்பன்னாயை
புவனேஸ்வர்யை
ஸ்ரீமஹாலக்ஷ்மியை (108)
லக்ஷ்மீ அஷ்டோதர சதநாம
பூஜாம் ஸமர்ப்பயாமி.

# தோரகிரந்தி பூஜை.

அல்லது நோன்புகயற்றின்மீது பூஜை செய்கிறது.



மலாயை நமஃ
மாயை

ப்ரத்தமக்ரந்திம் பூஜயாமி.
த்விதீயக்ரந்திம் பூ—மி

| | |
|---|---|
| லோகமாத்ரே நமஃ | த்ருதீயக்ரந்திம் பூ—மி |
| விஸ்வஜனன்யை | சதுர்த்தக்ரந்திம் பூ—மி |
| மஹாலக்ஷ்மியை | பஞ்சமக்ரந்திம் பூ—மி |
| க்ஷீராப்திதனயாயை | ஷஷ்டக்ரந்திம் பூ—மி |
| விஸ்வஸாக்ஷிண்யை | சப்தமக்ரந்திம் பூ—மி |
| சந்திரஸோதர்யை | அஷ்டமக்ரந்திம் பூ—மி |
| ஹரிவல்லபாயை | நவமக்ரந்திம் பூஜயாமி. |

## த்தூபதீப நைவேத்யாதிகள்.

தசாங்கம் குக்குலோபேதம், ஸுகந்தம் ஸுமனோஹரம், த்தூபம்தாஸ்யாமி. தேவேசி வரலக்ஷ்மீ க்ருஹாணதம். வரலக்ஷ்மீதேவதாயை நமஃ தூபமாக்ருபயாமி. க்கருதார்த்தி வர்த்திஸம்யுக்தம்; அந்த்தகாரவிநாசனம், தீபம் தாஸ்யாமி தேவேசி கிருஹாணமுதிதாபவ. வரலக்ஷ்மீ தேவதாயை நமஃ தீபம்தாசயாமி. நைவேத்யம், ஷட்ரஸோபேதம்; ததிமத்துவாஜ்ஜிய ஸமயுதம். நாநாப் பக்ஷ்யப்பலோ பேதம், கிருஹாண ஹரிவல்லப்பே. வரலக்ஷ்மீ தே....நமஃ, நைவேத்யம் ஸமர்ப்பயாமி. க்கனஸார ஸுகந்தேனமிஸ்ரிதம் புஷ்பவாசிதம்பாநீயம் க்ருஹ்யதாம்தேவி, சீதலம் ஸுமனோஹரம். வரலக்ஷ்மீ தேவ....நமஃ மத்யே மத்யேபாநீயம் ஸ....மி. பூகீப்பல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம், கர்ப்பூரசூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ரதிகிருஹ்யதாம். வரலக்ஷ்மீ தே....நமஃ தாம்பூலம் ஸ....மி நீராஜனம் ஸமாநீதம் கர்பூரேண ஸமன்விதம்; துப்யயம் தாஸ்யாம்யஹம் தேவி கிருஹ்யதாம் விஷ்ணுவல்லப்பே வரலக்ஷ்மி தே....நமஃ கர்ப்பூர நீராஜனம் ஸ....மி. நீராஜநாநந்தரம் ஆசமநீயம் ஸ....மி. பத்மாஸநே பத்ம

கரே ஸர்வலோகைக பூஜிதே; நாராயணப்ரியேதேவி ஸுப்பிரீதாப்பவ ஸர்வதா. மஹாலக்ஷ்மீ தே....நமஃ திவ்விய மந்தரபுஷ்பம் ஸ....மி. யானிகானிசபாபானி ஜன்மாந்தர க்ருதானிச தானிதானி ப்ரணஸ்யந்தி பிரதக்ஷிணபதே பதே. நமஸ்தே லோகஜனனீ நமஸ்தே விஷ்ணுவல்லபே, த்ராஹிமாம் ப்பக்தவரதே; வரலக்ஷ்மை நமோநமஃ. ஸ்ரீ வரலக்ஷ்மீ தேவதாயை நமஃ பிரதக்ஷிண நமஸ்காரான் ஸ....மி. தோரபந்த்தனம் (நோன்பு கயர்) கட்டிக்கொள்ள வேண்டிய மந்த்ர ஸ்லோகம்.

சு. பத்மமிதக்ஷிணே ஹஸ்தே நவஸூத்ரம் சுபப்ரதம் புத்திர பௌத்ராப்பி வ்ருத்திஸ்ச ஸௌபாக்யம் தேஹிமேரமே.

இந்த ஸ்லோகத்தால் நோன்புகயர் கட்டிக்கொள்ள வேண்டியது. பூஜை செய்விக்கிற ப்ராமஹணருக்கு சந்தனபுஷ்ப தாம்பூலாதி வாயன தானம் செய்யவும்.

ப்ராம்ஹணுள் தவிர, இதராள் பலஹாரங்களுக்குப் பதிலாக கோதுமை மாவு $\frac{1}{4}$ படி, சர்க்கரை, நெய், பழம், தேங்காய் முடி, தக்ஷிணைகளுடன் தாம்பூலம் கொடுக்க வேண்டியது.

## வாயனதான மந்த்ரம்.

இந்திராப் பிரதிகிருஹ்ணுது, இந்திரோவை ததாதிச, இந்திரா தாரகோபாப்யாம், இந்திராயை நமோநமஃ.

நமஸ்காரம் செய்து ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு பிறகு மற்ற பேர்களுக்கு தாம்பூலம் நடத்தவேண்டியது.

---

# வரலக்ஷ்மீ விரதகதை.



நைமிசாரண்ய க்ஷேத்ரத்தில் தவம் செய்துக்கொண்டிருக்கும் சௌனகாதி மஹா இருஷிகளைப்பார்த்து, சூத மஹாமுனிவர் சொல்லுகிறார்: ஓ முனி ஸ்ரேஷ்டர்களே ஸ்திரீகளுக்கு ஸர்வ சௌபாக்யத்தைக் கொடுக்கும்படியான உத்தமவிரதம் ஒன்றுண்டு, அதை பரமேஸ்வரன் பார்வதிக்குச்சொன்னார். அந்த ஸ்ரேஷ்டமான விரதத்தை உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள் என்று கைலாஸ பர்வதத்தில் வஜ்ஜிரவித்ரும வைடூர்யமயமான மணி கணங்களால் இழைக்கப்பட்ட சிங்காஸனத்தில் வீற்றிருந்த பரமேஸ்வரனை பார்வதீ தேவி நமஸ்கரித்து, 'ஓ தேவா! உலகத்தில் ஸ்திரீகள் எந்த விரதத்தை செய்தால் புத்ர பௌத்திராதி சகல ஸம்பத்துண்டாகி ஸுகமடைவார்களோ அப்பேர்க்கொத்த விசேஷ விரதமொன்றை எனக்கு தெரிவிக்க வேண்டு'மென்று பார்வதி கேட்டபோது, பரமேஸ்வரன் சொல்லத் தொடக்கினார். ஓ ப்ரியே! ஸ்திரீகளுக்கு சர்வ ஸம்பத்கரமானதும் புத்திர பௌத்திராப்பி விருத்தியும் உண்டாகும்படியான வரலக்ஷ்மீவிரத மொன்றுண்டு. அந்த விரதம் ஆவணிமாத பூர்வ அல்லது சுக்ல பக்ஷ பருவத்திற்கு முன்னே வரும் வெள்ளிக்கிழமையில் செய்யவேண்டுமென்று சொன்னார்.

பார்வதியானவள் அப்போது பரமேஸ்வரரை நோக்கி: ஓ மஹாப்ரப்போ, தாங்கள் சொல்லப்பட்ட இந்த விரதம் எவ்விதமாய் எந்த தேவதையை எந்த காலத்தில் பூஜிக்க

வேண்டியது, பூர்வத்தில் இந்த விரதம் யார் அனுஷ்டித்து பயனடைந்தார்களோ அந்த விரத கதையும் எடுத்து சொல்லுமென்று ப்ரார்த்தித்துக்கேழ்க்க, பரமேஸ்வரர் பார்வதியை நோக்கி சொல்லத் தொடங்கினர். ஓ காத்யாயினீ! இந்த வரலக்ஷிமீ விரதத்தை விவரமாய் சொல்லுகிறேன்கேள மகததேசத்தில் குண்டினபுரமென்று ஓர் பட்டணமுண்டு, அப்பட்டணமானது பொன் மயமான கோபுரங்களாலும் மெத்தை மேடைகளாலும் மதில்களாலும் மிக அலங்கிருதமாய் யிருந்தது. அப்பட்டணத்தில், சாருமதி என்னும் ஒரு பிராமண ஸ்திரீ இருந்தாள. அப்பெண்மணி மிக பதிவிரதை என்பது தான்செய்யும் பதிபக்தியினுலும், பெரியோர்களிடத்திலுள்ளப் பயபக்தியாலும், தெய்வபக்தியினுலும் விளங்கி வந்தனள். தன் கணவனையே தெய்வமாக நினைத்து, நிைம் உதயகாலத்தில் எழுந்து பதிக்கு நமஸ்கரித்து பாதஙகளே ப்ரக்ஷாளனம்செய்து புஷ்பங்களால்பூஜைசெய்து, பிறகு மாமிமாமனுக்கும் தகுந்த பணிவிடைகள் செய்துவிட்டு வீட்டுவேலைகள்செய்யத் தலைப்படுவாள். தவிர, யாரிடத்திலும் மிதபாஷிணியாகவும், உரத்த குரலின்றியும் பேசுவாள். இப்படி கர்ப்புடனிருந்த அந்த ஸ்திரீ விஷயத்தில் மகாலக்ஷிமிக்கு மிகக் கருணை உண்டாகி அனுக்கிரஹித்தாள். ஒரு நாள் ராத்திரி சாருமதியின் சொர்ப்பனத்தில் வரலக்ஷிமீதேவி பிரசன்னமாகி, ஓ சாருமதீ உன்னிடத்தில் எனக்கு கிருபையுண்டாகி உனக்கு அனுகரஹிக்க ப்ரத்யக்ஷமானேன். ஆவணிமாத பூர்வபக்ஷ பருவத்திற்குமுனவரும் சுக்கிரவாரத்தில் என்னை பூஜித்தால் உன் கோரிக்கைகளைப பூர்த்திசெய்கிறேன் என்று சொல்ல, உடனே சாருமதி தன் கினவிலேயே லக்ஷிமீதேவியை வலம் சுற்றிவந்து நமஸ்கரித்து ஸ்தோத்திரம் செய்தாள்.

(சுலோகம்.)

---

நமஸ்தே ஸர்வலோகாநாம், ஜனன்யை புண்ணிய மூர்த்தயே, சரண்யே த்ரிஜகத்வந்தியே, விஷ்ணுவக்ஷஸ்த லாலயே என்று அனேகவிதமாய் ஸ்தோத்ரம் செய்து, "ஓ ஜகன்மாதா, உன் கடாக்ஷத்தினால் ஜனங்களுக்கு சகல ஸம்பத்தும், வித்தைகளுமுண்டாகும் என்பதற்கு என்ன தடை. என்னுடைய பூர்வ புண்ணியவசத்தால், உம்முடைய பாத தர்சனம் கிடைத்தது என்று சொல்ல, மஹாலக்ஷிமிக்கு மிக சந்தோஷமுண்டாகி, சாருமதிக்கு வெகு வரங்களளித்து, பிறகு அந்தரத்யான மடைந்தாள். சாருமதி உடனே கண் விழித்தெழுந்து வீட்டின் நான்குபுறமும் சுற்றிப்பார்த்து வரலக்ஷிமீதேவியைக்காணமல், ஓஹோ! நான் கனவுகண்டேன் என்று அறிந்து, இந்த சொர்ப்பன விருத்தாந்தத்தை தன் கணவரிடமும், மாமி மாமனாரிடமும் மற்றுமுள்ளவர்களிடமும் சொன்னாள். அவர்களிந்த கனவு மிக உத்தமமானது என்று சொல்லி, ஆவணி மாதம் வந்தவுடனே மஹாலக்ஷிமீ சொன்னநாளில் கனவிற்கண்டபடி மேற்படி விரதத்தை அவசியமாய் நடத்தவேண்டுமென்று சொன்னார்கள். பிறகு சாருமதியும், மற்றவர்களும் அந்த நாளை எதிர்பார்த்திருந்து வரலக்ஷிமியால் சொன்ன நாள் வந்தவுடனே அந்த வெள்ளிக்கிழமையில் உதயகாலத்தில் விழித்துக்கொண்டு ஸ்நானம்செய்து, அநேக சித்திரமான பட்டு வஸ்திரங்களை உடுத்தி சாருமதீ தேவியின் வீட்டில் ஓர் இடத்தில் கோமயத்தால்மெழுகி மண்டபமேற்படுத்தி அங்கே ஒரு ஆஸனம் போட்டு, அவ்விடத்தில் கோலங்களிட்டு புதிதான அரிசியைக்கொட்டி, ஆலம், அரசன், குருவேலன், அத்தி, மாயிலை கிளைகளும், வெற்றிலை முதலிய

பஞ்ச பல்வங்கள் வைத்து ஓர் தேக்காயுடன் கலசம் அலங்கரித்து வரலக்ஷ்மீ தேவியை அந்த கலசத்தில் ஆவாஹணம் செய்து, சாருமதி முதலிய ஸ்திரீகளெல்லோரும் மஹா பக்தியும் வணக்கமுமுள்ளவர்களாய் ஸாயங்காலத்தில் அந்த வரலக்ஷ்மீதேவியை த்யானித்துச சொல்லுகிறார்கள். (சு.) பத்மாஸநே பத்மகரே ஸர்வலோகைகபூஜிதே, நாராயணப்ரியேதேவி ஸுப்ரீதாப்பவ ஸர்வதா என்கிற சுலோகத்தினால் வரலக்ஷ்மீ தேவியை த்யானித்து, ஷோடசோபசார பூஜைகள் செய்து ஒன்பது இழைகளும் முடிகளுமுள்ள நோன்புக்கயர் என்னும் தோரத்தை வலதுகையில் கட்டிக்கொண்டு, வரலக்ஷ்மிதேவிக்கு ஒன்பதுவித பலஹார தினுசுகள் நிவேதனம் செய்து கர்ப்பூர தீபாராதனை முதலிய சோடசோபசாரங்களுடன் பிரதக்ஷிண நமஸ்காரம்செய்ய ஆரம்பித்தார்கள். ஒருதரம் வலம் சுற்றிவந்தவுடனே அந்த ஸ்திரீகளுடைய கால்களில் கல்கல்லென்று ஓசை யுண்டாச்சுது. உடனே எல்லாரும் தங்கள் கால்களைப் பார்த்துக்கொள்ள கெஜ்ஜை முதலிய ஆபரணங்கள் உண்டாயிருக்கக்கண்டு, சாருமதி முதலிய ஸதிரீகள் ஓஹோ வரலக்ஷ்மீ கடாக்ஷத்தினல் இந்த ஆபரணங்கள் உண்டானதென்று மிகக் களித்து, இரண்டாவது பிரதக்ஷிணம செய்ய, ஹஸ்தங்களில் தளதளவென்று பிரகாசிக்கும்படியான நவரத்தினக் கசிதமான கங்கணதி ஹஸ்தாப்பரணங்களை பார்த்தார்கள். "அதிசயமாய்ச் சொல்லவேண்டியது யாது." மூன்றாவது ப்ரதக்ஷணை செய்தவுடனே அந்த ஸ்திரீகளெல்லோரும், ஸர்வாப்பரண ப்பூஷணலங்க்ருதர்களானார்கள், ஸ்வர்னமயமான ரதகெஜதுரகாதி வாஹனங்களுடன் நிறைந்ததான மெத்தை மேடைகளுடன் கூடியதாயுள்ள வீடுகளுடையவர்களாய் சாருமதிமுதலிய ஸ்திரீகளுக்குண்டாச்சுது. பிறகு

அந்த பெண்மணிகளை அழைத்துக்கொண்டுபோக, அவாளவாள் வீடுகளிநின்று வேலைக்காரர்கள், பலவிதமாயுள்ள வாஹநங்களுடன், வரலக்ஷ்மீதேவியை பூஜிக்கும்படியான இடம்வந்து நிறைந்திருந்தார்கள். அப்போது சாருமதிமுதலிய ஸ்திரீகளுக்கு கல்போக்த விதிப்படி இவர்கள்கையால் பூஜைசெய்துவைத்த ப்ராம்ஹணோத்தமரை கந்தபுஷ்பாக்ஷதைகளால் பூஜித்து, அவ்விடத்தில் ஸ்வாமிக்கு நிவேதனமான பலஹாரதினுசுகளில், பனிரெண்டு எண்ணுள்ளதான பலஹார வகைகளையும், தக்ஷிணை தாம்பூலங்களுடனும், அவருக்கு உவாயனம் கொடுத்து நமஸ்கரித்து அவ்வந்தணரின் ஆசீர்வாதமடைந்து, பிறகு, அத்தேவிக்கு நிவேதித்த மீதிப் பக்ஷியங்களை தங்கள் பந்துக்களுடன் ப்புஸித்து தங்களை அழைத்துக்கொண்டுபோக வந்திருந்த வாஹனங்களி லேறிக்கொண்டு, தங்கள் தகைள் வீடுகளை நோக்கி போகும்போது ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு போகிறவிதம், "ஓஹோ சாருமதீதேவியின் ப்பாக்கியமென்னவென்று சொல்லலாம்" வரலக்ஷ்மீதேவி நேராக சாருமதியின் ஸ்வர்ப்பனத்தில் ப்ரத்தியக்ஷமாய் சொல்லியபடியே செய்தாள். அவளாலல்லவோ நாமெல்லோரும் இப்படிக்கொத்த மஹாபாக்கியவதிகளானதென்று அச் சாருமதீதேவியை மிகப்புகழ்ந்து பேசிக்கொண்டே அவாளவாள் வீடுகளுக்குப்போய்ச் சேர்ந்தார்கள் அதுமுதல் சாருமதி முதலிய ஸ்திரீகளெல்லோரும, இந்த வரலக்ஷ்மீவிரதம், ப்ரதிவருஷமும்செய்து புத்ரபௌத்ர வ்ருத்தியாய், ஸகல ஸம்பத்துடன் வாழ்ந்திருந்தார்கள். ஆகையால் ஓ பார்வதீ, இவ்வுத்தம விரதத்தை, ப்ராம்ஹணாதி முதல் நாலு ஜாதியர்களும் செய்யலாம். அப்படி செய்கிறவர்களுக்கு, ஸகலஸம்பத்துண்டாகி, ஸுகமாய் இருப்பார்கள். இக்

கதையைக் கேழ்க்கிறவர்களுக்கும், படிக்கிறவர்களுக்கும், விரதபூர்த்தி செய்கிறவர்களுக்கும், வரலக்ஷிமீ பிரசாதமுண்டாகி சகல கார்யசித்தி அடைந்து, பிறகு ஸத்கதி அடைவார்கள். இது ப்பவிஷ்யோத்திர புராணததில், பார்வதீ, பரமேஸ்வர ஸம்வாதத்தில் இவ்வரலக்ஷிமீ விரத்த்தை சொல்லப்பட்டது.

மஹாலக்ஷிமீகடாக்ஷப் பல ஸித்திரஸ்து.

முற்றிற்று.



உ

ஸ்ரீகணேசாயநம:

# ஜீவவார ஏகாதசி விரதம்.



சுக்லாம்பரத்தரம் விஷ்ணும........ஸர்வவிக்னோப சாந்தயே. ஆசமநீயம செய்துக்கொண்டு, பிறகு ஸங்கல்பம செய்கிறது. சுபே சோபனே முஹூர்த்தே........ஏவங்குண விசேஷண விசிஷ்டாயாம் அஸ்யாம் சுபதிதௌமம ரஜஸ்வலாஸம்பர்காதி ஜனிதானாம் ஸர்வேஷாம் பாபானாம் அபநோதநார்த்தம், மனோவாஞ்சாப்பலசித்தியர்த்தம், ஜீவவார ஏகாதசீவிரதமஹம் கரிஷ்யே (நம:) ததங்கத்வேந கலசபூஜாம கரிஷ்யே (நம:) ஆதௌ நிர்விக்நேன பரிஸமாப்த்யர்த்தம், கணபதி பூஜாம்கிருதவா ஸம்க்ஞாச்சாயா தேவீஸமேத, ஸ்ரீ ஸூர்யநாராயண பிராணப்பிரதிஷ்டாம் கிருத்வா அத்தத்யானம். சு. சசாயாதேவீ ஸமாயுக்தம்; பாஸ்கரம் தேவரூபிணம், த்ரயீமயதனும் த்யாயேத்; ஜகத் ஸாக்ஷிணமவ்யயம ஸ்ரீஸம்ஞாச் சாயாதேவீஸமேத, ஸ்ரீ ஸூர்யநாராயணஸ்வாமிநம் த்யாயாமி த்ரயீமயதனோதேவ ப்ரம்ஹரூபின் ஸுரேஸ்வர; இமாம்மயாக்ருதாம் பூஜாம், க்ருஹாண ஸுரஸத்தம. ஸம்ஞாச்சயாதேவீ ஸமேத ஸூர்யநாரா....நம: ஆவாஹனம் ஸ....மி. பாஸ்கராய நமஸ்துப்பியம்; நமோவேத மயாயச, கங்காஜல ஸமாநீதம்; இதபர்ச்யம் கிருஹாணபோ ஸம்க்ஞாச்சாயாதேவீ....ஸ்ரீஸூர்யநாரா....நம: அர்க்கியம் ஸ....மி. புண்ணியதீர்த்த ஸமாநீதம்; பாவனம் ஸுமனோஹரம்; பாத்யம் கிருஹாணதேவேச; தேவதேவ நமோஸ்துதே ஸம்க்ஞாச்சயா....ஸூர்ய

நாரா....நமஃ பாத்யம் ஸ....மி. மதுவர்க்கம் க்ருஹாணே தம், மத்வாஜ்யேந ஸுஸம்யுதம், கதளீநாரிகேளாத்யைஃ, ச்சாயாகாந்த நமோஸ்துதே. ஸம்ஞாச்சாயா....ஸூர்யநாரா யண....நமஃ மதுபர்க்கம ஸ....மி. க்ஷீரேண தத்ஞ, மதுஞ, பலோதேன, க்ருதேநச, பஞ்சாம்ருதம் வித்தாயத்வாம்ஸ்நா பயிஷ்யாமி பாஸ்கர. ஸம்க்ஞாச்சாயா....ஸ்ரீஸூர்யநாரா யண....நமஃ பஞ்சாமிருதஸ்நானம ஸ....மி. காங்கஞ்ச சுசி தம் சைவ, ததாஸாரஸ்வதம்பயஃ, ஸ்நாநார்த்தம்தே மயா நீதம், ஸ்நாபதேன ஸுரேஸ்வர ஸம்க்ஞாச்சாயா....ஸூர்ய நாரா....நமஃ சுத்தோதகஸ்நாநம் ஸ....மி. ரக்தவஸ்த்ரதுவ யம்தேன,மயாபக்த்யா ஸமர்ப்பிதம்,ருக் எஜுஸ்ஸாமரூபா பதுப்பியம் வேதஸ்வரூபிணே. ஸ்ரீஸம்ஞாச்சாயா....ஸூர்ய நாரா....நமஃ வஸ்த்ரயுக்மம் ஸ....மி. ஸுவர்நேநக்ருதம் திவ்யம் உபவீதம் ஸுசோபனம், க்ருஹாணும்பதயே துப் பியம்; திருத்திபதயரவே ஸம்க்ஞாசசாயா....ஸூர்யநாரா ....நமஃ எக்ஞோபவீதம் ஸ....மி. ஸகுங்குமம் ஸகர்ப்பூரம், ம்ருகநாப்பிஸமன்விதம், கந்தம் கிருஹாணதேவேச, ச்சாயா காந்த நமோஸ்துதே. ச்சாயாதேவீஸமேத ஸூர்யநாரா.... நமஃ கந்தம் ஸ....மி. அக்ஷதான்த்தவளான்தேவ, பத்ம கர்ப்ப ஸமத்யுதே, அக்ஷதாகாரபகவன், சாஸ்வதாயநமோ நமஃ ஸம்க்ஞாச்சாயாதேவீ....ஸ்ரீஸூர்யநாரா....நமஃ அக்ஷ தான் ஸ....மி. நாநாவிதானி புஷ்பாணி, ஸுகந்தீனி ஸுரேஸ்வர, மயார்பிதானி பகவன், ஸங்க்ருஹாண நமோஸ் துதே ஸம்ஞாசசாயாதேவீ....ஸ்ரீ ஸூர்யநாரா....நமஃ புஷ் பாணி பூஜயாமி.

## அத்தாங்க பூஜை.

| | |
|---|---|
| பாஸ்கராய நமஃ | பாதௌ பூஜயாமி |
| ப்ரப்பாகராய | குல்ப்பௌ பூ—மி |

| | |
|---|---|
| திவாகராயநமஃ | ஜங்கே பூ—மி |
| அஹஸ்கராய | ஊரு பூ—மி |
| த்யுமணயே | கடிம் பூ—மி |
| மித்ராய | உதரம் பூ—மி |
| ஜலஜபாந்தவாய | ஹஸ்தான் பூ—மி |
| விசாலவக்ஷஸே | வக்ஷஸ்தலம் பூ—மி |
| கம்புகண்டாய | கண்டம் பூ—மி |
| பிம்பரூபாய | முகம் பூ—மி |
| ஜலஜநேத்ராய | நேத்ரே பூ—மி |
| ஜகன்மாயாய | சிரஃ பூ—மி |
| ஸ்ரீஸூர்யநாராயணாய | ஸர்வாண்யங்காணி பூ—மி |

பிறகு ஸூர்யாஷ்டோத்திரம் செய்து பின் தூபதீப நைவேத்தியம் செய்யவேண்டியது. வனஸ்பதிரஸைர் திவ்யைர் நாநாகந்தை ஸ்ஸுஸம்யுதஃ ஆக்கிரேயஃ ஸர்வதேவாநாம், தூபோயம் ப்ரதிகிருஹ்யதாம். ஸ்ரீஸூர்யநாராயண ஸ்வாமிநே நமஃ தூபமாக்ருபயாமி. ஸாஜ்ஜியம் த்ரிவர்த்தி ஸம்யுக்தம், வன்ஹிணஜ்யோதிதம்மயா, கிருஹாணமங்களம் தீபம், த்ரைலோக்யம் திமிராபஹ, பக்தியாதீபம் பிரயச்சாமி தேவாயபரமாத்மனே, திராஹிமாம் நரகாத்கோராத் திவ்வியஜ்ஜோதிர் நமோஸ்துதே. ஸ்ரீ ஸூர்யநாராயண.... நமஃ தீபம்தர்சயாமி. நைவேத்யம் விவிதம் பக்ஷிய போஜ்ய சோஷ்யை ஸமன்விதம், லேஹ்யைரூச்சாவசைஸ் சைவ கிருஹாணஸூர வல்லப்ப. ஸ்ரீஸம்ஞாச்சாயதேவீ ஸமேத ஸ்ரீஸூர்யநாராயண ஸ்வாமிநேநமஃ மஹா நைவேததியம் நிவேதயாமி. பிராணாதி பஞ்சபிராணாஹூதிகள் சொல்ல வேண்டியது. பூகீப்பல ஸமாயுக்தமிதி தாம்பூலம் ஸ....மி. சந்திராதித்யாச தரணீவித்யுதக்னிஸ் தநைவச, த்மேவ ஸர்வஜ்யோதீம்ஷி, ஹியார்திச்யம் பிரதிக்ருஹ் யதாம்.

ஸ்ரீஸூர்ய நாரா........நமஃ கர்ப்பூர நீராஞ்ஜனம் ஸ........மி. த்யேயஃ ஸதா ஸவித்ருமண்டல மத்யவர்த்தீ, நாராயணஃ ஸரஸிஜாஸன ஸன்னிவிஷ்டஃ, கேயூரவான் மகரகுண்டலவான் கிரீடஹாரீ ஹிரண்மயஃவபுஃ த்ருதசங்கசக்ரஹ. இந்த சுலோகத்தினுல் மந்த்ரபுஷ்பம் இடவேண்டியது. யாநிகானிச பாபாநிஜன்மாந்த்ர க்ருதானிச தானிதானி விநஸ்யந்தி ப்ரதக்ஷிணபதேபதே. இந்த சுலோகம் சொல்லிக்கொண்டே பிரதக்ஷணம் செய்து பாபோஹம் பாபகர்மாஹம் பாபாத்மாபாப ஸம்பவ, த்ராஹிமாம் க்ருபயாதேவ ரக்ஷரக்ஷ ஜநார்த்தன என்று சொல்லி நமஸ்காரம் செய்யவும். பாஸ்கராய நமஸ்துப்பியம், நமோ வேதமயாயச, கங்காஜல ஸமாநீதம், இதமர்க்யம் க்ருஹாணப்போ, ஸ்ரீஸூர்ய நா.... நமஃ இதமர்க்கியம் ஸ....மி. இந்த சுலோகத்தால் பன்னிரண்டுதடவை அர்க்கியம் விடவேண்டியது. எஸ்யஸ்மிருத்தியாச நாமோக்த்யா தபஃபூஜாக்ரியாதிஷூ நியூநம்ஸம்பூரணம் தாம்யாதி பரிபூர்ணம் ததஸ்துதே. அனேன ஜீவவார ஏகாதசி விரதப்ரயுக்த பூஜாவிதானேன, ஸ்ரீசம் க்ஞ்யாச்சாயா தேவிசமேத ஸ்ரீஸூர்ய நாராயணஃ, ஸூப்ரீதஃ, ஸூப்ரஸன்னோ வரதோபவது. இந்த மந்திரம் சொல்லி அக்ஷதை, புஷ்பம், ஜலம், கையிலிட்டுக்கொண்டு கீழே விட்டுவிடவேண்டும்.

---

கணபதிதுணை.

# ஜீவவார ஏகாதசி விரதகதை.

---

பரமேஸ்வரன், கைலாஸ பர்வதத்தில் நவரத்னமய மான சிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கும்போது பார்வதீ தேவி, மிக வணக்கத்துடன் பரமசிவனுக்கு நமஸ்கரித்து சொல்லுகிறாள்: "ஓ தேவ தேவரான பரமேஸ்வரரே, ஸ்திரீகளுக்கு எந்த பாபத்தால் மாதமாதமும், பக்ஷபக்ஷமும், ரஜஸ்வலையாய் மூன்றுநாள் வரையில் ஏன் பாதிக்கிறது. இந்த பாவம் அவர்களுக் கெப்படி விலகுமென்று கேட்டாள்". அப்போது பரமசிவன் பார்வதியைநோக்கிச் சொல்லுகிறார்: "முன்னே ஒரு காலத்தில் தேவராஜன் விருத்திராஸுரனைக் கொன்றதால் அவருக்குப்ரம்ஹஹத்ய தோஷம் நேர்ந்தது. அவா அப்பிரம்ஹஹத்தியை நாலுபங்காக்கி, ஒரு பங்கு ஸ்திரீகளுக்கு ஆர்த்தவரூபமாயும், ஒரு பங்கு பூமியில் சவுட்டுமண் ரூபமாயும், ஒருபங்கு செடிகளில் பால்ரூபமாயும, மற்றொருபங்கு ஜலத்தில், நுரைரூபமாயும் ஏர்படுத்திவைத்தார். அப்படி ஸ்திரீகளுக்குரஜோரூபபாவத்தால் மாத பக்ஷங்களில் பாதிக்கிறது. ஓ பார்வதி! இந்த ரஜோரூபமான பாபம் விலகிப்போக ஒரு விரதம் உண்டு. அது மிக உத்தமமான விரதம். அதை உனக்கு தெரிவிக்கிறேன் ஊக்கத்துடன் கேள. எப்போது சுக்கிலபக்ஷ ஏகாதசி குருவாரத்துடன் வியாழக்கிழமை கலந்துவருகிறதோ, அன்றையமுதல் பத்துநாள் வரையில் ஸூர்யநாராயண ஸ்வாமியை பூஜை செய்யவேண்டும். பதினோராவதுநாளில் பூஜையானபிறகு, பிராம்ஹணுளுக்கு பலஹாரம் உளுந்து வடைகளுடன் தக்ஷிண தாம்பூலங்கள் வாயன தானம்கொடுக்

கவேண்டியது. உத்தியாபனம், விரத ஆரம்பத்திலாவது இடையிலாவது, கடைசியிலாவது செய்யலாம். விரத பூர்த்தி செய்யாவிடில் பலன் கிடையாது. ஆகையால், விரதபூர்த்தி சுக்லபக்ஷ ஏகாதசி வியாழக்கிழமை கூடிய தினத்தில் ஸூர்ய நாராயணரை பத்னீ ஸமேதராய் ஆவாஹணம்செய்து பத்துநாள் பூஜிக்கவேண்டியது. கிருஷ்ண பக்ஷ பஞ்சமிதினத்தில் உதயகாலத்தில் ஸ்நாநம்செய்து, மடிவஸ்திரம் தரித்துக்கொண்டு, தன் வீட்டின் வடபுரத்தில் மண்டபமேற்படுத்தி நன்ருய் அலங்கரித்து ஒரு பலம் அல்லது அரை பலமாவது, கால்பலமாவது, இதில் பாதியாவது இடையுள்ள பொன்ஞல் சூர்யப்பிரதிமை செய்து, அதில் சசாயாதேவீ ஸமேதரான ஸூர்ய நாராயணரை ஆவாஹணம் செய்து, நாலு ஜாமமும் பூஜைசெய்து, ராத்திரி ஜாகரணம் செய்து,மறுநாள் காலையில ஸ்நாநம்செய்துக்கொண்டு வீட்டிற்குவந்து சுவாமிகரு புநஃ பூஜைகள்செய்து ஹோமம் செய்துவைத்து, ஆசாரியருக்கு கோதானம் செய்து, மற்ற ருத்விகஞாளுக்கு கலச வஸ்திர பிரதிமா தானம் செய்யவேண்டியது. பிறகு பிராம்ஹண சந்தர்ப்பணை சக்திக்குத்தக்கபடி செய்யவேண்டியது. பிராம்ஹணர்களை தக்ஷிணை தாம்பூலாதிகளால் திருப்திப்படுத்தி, பிறகு, தான் பந்துக்களுடன் போஜனம்செய்யவேண்டியது. இவ்விரதம சாஸ்திரவிதிப்படி செய்கிறவர்களுக்கு, ரஜஸ்வலா ஸம்பாக்கங்களாஞண்டாகும் தோஷங்கள் விலகுவதேயன்றி, சகலஸம்பத்துமுண்டாகு” மென்றுபரவசிவன் பார்வதிக்குபதேசித்தார். அப்படி உபதேசம்பெற்ற பாாவதீ தேவியானவள்: “ஓ நாதா! இந்த விரதம் முன்னே யாரால் செய்யப்பட்டது” என்று கேழ்க்க, அவர் சொல்லுகிருர்: “ஓ தேவீ ! முன்னே நர்மதா நதிக்கரையில் சுமித்ரன்

# மத்தன த்வாதசீ விரதகதை.

ஸூதபௌராணிகர் நைமிசாரண்ணிய வாசிகளாகிய சௌனகாதி மஹாருஷிகளைப் பார்த்துச் சொல்லுகிறார். ஓ! முனிஸ்ரேஷ்டர்களே, இன்னொரு உத்தமவிரதத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி முன் ஒருகாலத்தில் வனத்தில் உல்லாசமாய் ஸஞ்சரிக்க எண்ணினவராய் ஸத்யபாமையுடன் ப்ருந்தாவனம் சென்றார். அப்போது அவ்விடத்தில், ஸ்ரீ கிருஷ்ணனை தர்சிக்க நாரத மஹாமுனிவர் வந்தார். உடனே அவரைக்கண்ட ப்பகவான் அர்க்கியபாத்யாதி உபசாரங்கள்செய்து பூஜித்து, ஆஸனம் கொடுத்து அமரவைத்து சொல்லத் தொடங்கினார்: "ஓ முனீந்திரரே! தாங்கள் திரிலோகங்களிலும் சஞ்சரிக்கப்பட்டவராகையால், ஏதாவது விசேஷ ஸமாசாரங்கள் இருந்தால் சொல்லவேண்டுமென்று கேட்க" நாரதர் சொல்லத் தொடங்கினார். "ஓ யசோதாநந்தனரே! நான் ப்ரம்ஹலோகத்திலிருந்து இப்போதுதான் வருகிறேன். பிரம்ஹதேவன் தன் பத்தினியாகிய ஸரஸ்வதி தேவிக்கு உத்தமமான ஒரு விரதத்தைச் சொன்னார், அந்த விரதத்தைச் சொல்லுகிறேன் கேளும. அவ்விரதம் செய்த பதிவ்ரதா சிரோமணிகளுக்கு, ஸகல ஸம்பத்தும் புத்திரபௌத்திரர்களுண்டாவதற்குச் சந்தேகமே கிடையாது. அவ்விரதம் (ஆஸ்வீஜ) அல்லது ஐப்பிசிமாத சுக்கிலபக்ஷ ஏகாதசிதிதியில் உபவாசமிருந்து சுத்தமான சித்தத்தோடு ஒருமாதவரையில் துளசீ சகிதரான மஹாவிஷ்ணுவை பூஜை செய்யவேண்டும். மேலும் பஞ்சவர்ணத்துடன் ஐந்து பத்மங்களமைத்து அலங்கரித்து ஐந்து தீபங்கள் வைத்து, கந்தபுஷ்ப தூபதீபாதிகளால் ஷோட

சோபசார பூஜைகள்செய்து, ஐந்துவித நைவேத்தியங்கள் வைத்து தாம்பூலாதிகள் ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிண நமஸ் காரங்கள் செய்யவேண்டும். இவ்விதமாய் ஐப்பசி பூர்வ பக்ஷ ஏகாதசிமுதல், கார்த்தீக சுத்த ஏகாதசிவரையில் பூஜை செய்யவேண்டும். ஏகாதசி தினத்தில் உபவாச மிருந்து கல்பத்தின்படி மஹாவிஷ்ணுவை பூஜித்து இராத் திரி (ஜாகரணம்) அதாவது கண்விழித்து மறுநாள் காலை துவாதசியில் ஸ்நாநம்செய்து, மடிவஸ்திரங்கள் தரித்துக் கொண்டு சுமார் ஐந்துபடி அரிசிமாவில் சர்க்கரை, பால் சேர்த்து பிசைந்து மூன்று உருண்டைசெய்து அதிலொன் றுத் துளசிக்கு நைவேத்யம் செய்து, பிராம்ஹணருக கொன்று தானம்கொடுத்து, மற்றொரு உருண்டையை உர லில் போட்டு பால்விட்டு கருப்பங் கழிகளால் இடிக்க வேண்டியது: அப்படி இடிக்கும்போது ஸ்திரீகள் பாட் டுப் பாடிக் கொண்டே இடிப்பார்கள். அச்சமயத்தில் பால் துளிகள் எத்தனை தன் சரீரத்தில் விழுகிறதோ, அத் தனை வருஷகாலம்வரையில் ஸ்வர்க்கலோகத்தில் வாஸம் செய்வார்களென, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி சொல்லுகிறார். "ஓ நாரதமுனிவரே! முன்னே யார் இவ்விரதம் செய் யப்பட்டு அவர் என்ன பலனடைந்தார்களென, நாரதர் சொல்லுகிறார்: "ஓ தேவகீநந்தனரே! பூர்வத்தில் வட தேசத்தில் வேதசாஸ்திரங்களைப் படித்துத்தேர்ந்த தேவ தத்தரென்று ஒரு ப்ராம்ஹணரிருந்தார், அவர் தனக்கு சந்தான மில்லாமையால் திரிலோக கர்த்தனாகிய மஹா விஷ்ணுவைக் குறித்துத் தவம்புரிகிறேனென்று நாட்டைத் துறந்து ஒரு பெரிய காட்டிற்சென்று ஒரு குளக்கரையி லுட்கார்ந்து மிகக் கடினமான தவம் புரிந்தார். அப் போது மஹாவிஷ்ணு ஒரு விருத்த வேதியரூபம் தரித்துக்

கொண்டு அந்த தவசிகளுமுன்னே தோன்றி, ஹே ப்ராம்ஹணகுல சிரேஷ்டரே! நீரேனிப்படி அகோர தவம புரிகின்றீர், சொல்லுமென, அந்த தேவதத்தன் விருத்த ப்ராம்ஹண ஸ்வரூபியாகவந்த ஸ்ரீமந்நாராயணனை வலம்வந்து நமஸ்கரித்து "ஓ ஜகந்நாதா! தங்கள் பாத தரிசனத்தால் என் ஜன்ம ஸாப்பல்யமாயிற்று. நான் கிரு தார்த்தனானேன்" என்று பலவிதமாக ஸ்தோத்திரம்செய்து நின்றபோது, அந்த ப்ராம்ஹண ஸ்வரூபி ஒவிப்ரோத்தமா உனக்கு வேண்டிய வரங்கள்கேளுமென, அப்போது தேவ தத்தன் சொல்லுகிறார்: "ஓ வாஸுதேவா! (அபுத்தரஸ்ய கதிர்நாஸ்தி) என்கிற த்தர்மசாஸ்திரத்தால், புத்திரஹீன னானபடியால் எனக்குக் கதிகளுண்டாகும்படி புத்ரபிக்ஷை அளிக்கவேண்டு" மென்று ப்ரார்த்திக்க, ஸ்ரீமந் நாராயண மூர்த்தி சொல்லுகிறார். ஓ ப்ராம்ஹணா! அற்பாயுஸுள்ள பிள்ளையையாவது, வைதவ்வியமடையும், பெண்ணையாவது கொடுக்கிறேன். இந்த இரண்டில் உனக்கெது இஷ்டமோ அதைச் சொல்லுமென, பிராம்ஹணன் வீட்டுக்குப்போய் என் ப்பார்யாளைக் கேட்டுவந்து சொல்லுகிறேனென்று வீட்டுக்குப்போய் தன் மனைவியுடன் அதைப்பற்றி ஆலோ சித்தபோது வைதவ்வியமடையும் பெண்ணையே கேளு மென்று பாரியாள் சொல்ல பிராம்ஹணன் பழையபடி அவ்விடத்திற்கு வந்து கமலநாபனை நமஸ்கரித்து ஒரு பெண்மகளையே தந்தருளவேண்டுமென்று கேட்க, அப்ப டியே பர்த்தாவில்லாத குமாரத்தியே உண்டாகக்கடவ தென்று சொல்லி ப்பகவான் அந்தர்த்தான மாயினார். பிறகு தேவதத்தன் வீட்டிற்குவந்து ஸுகமா யிருக்கும் காலத்தில் சிலநாட் கழிந்த பின்னர், இந்த ப்ராம்ஹண னுடைய ப்பார்யாள் கருவுற்று 10-ம் மாதத்தில் ஒரு

பெண்ணைப் பெற்ருள். அந்த பெண் குழந்தை நாளளவில் விருத்தி சந்திரனைப்போல் வளர்ந்துவந்தாள். சிலகாலத்திற்கு பிறகு ஐயிரண்டாண்டு பூர்த்தியாய் விவாகப் பருவ காலம் சமீபித்தவுடன் அப்பெண்ணின் பிதாவானதேவதத்தன் ஒரு ப்ராம்ஹணப்பிள்ளைக்கு கன்னிகாதானம்செய்து விவாஹம் நடத்திஞர். அபபடிக் கொடுத்து கல்யாணமான இரண்டாமாத முடிவிலேயே அப்பெண்ணின் ஜன்மாந்திர பாபத்தால் அவள் கணவன் மரணமடைந்தான். இன்னும் சில நாளில் அவள் தாய்தந்தையரும் காலகதி அடைந்தார்கள். வைத்தவ்யமடைந்த அந்தப்பெண் தன் தகப்பஞர் வீட்டிலேயே இருந்துகொண்டு தானதர்மம் செய்யாமலே வீட்டிற்கு வரும் பிச்சைக்காரர்களுக்கெல்லாம் நாஸ்தி நாராயணுவென்று சொல்லிக்கொண்டு பிச்சை யிடாமல் மிகக் கடினமனங்கொண்டு இருந்தாள்.

இப்படி இருக்க ஒருநாள் ஸ்ரீ மகாவிஷ்ணுவானவர் தன் மனதில் கீழ் வருமாறு யோசித்தார். ஓ ஹோ, இந்த விதவை கிஞ்சித்தும் இரக்கமில்லாமல் கடின நெஞ்சுடையவளாயினும் நாராயணு என்னும் நாமத்தைமாத்திரம் விடாமல், ஸ்மரணைசெய்துகொண் டிருக்கின்ருள் என்று சந்தோஷித்து பிராம்ஹண சொரூபியாய் அந்த கைம்பெண் வீட்டிற்குவந்து உபாதானம் கேட்கவே, அவ் விரக்க மில்லாதவள் நாஸ்தி நாராயணுவென்று சொன்ஞள். அப்போது பிராம்ஹணவேஷதாரியாகிய ஸ்ரீமன்நாராயண மூர்த்தி ஓ அம்மா காலைவேளையில் பிச்சைக்கு வந்த அதிதியை ஏன் அவமதிக்கிருய் என அந்த கைம்பெண்ணுனவள், கண்கள் சிவக்க மிகக்கோபத்துடன் தான்மெழுகிக்கொண்டிருந்த சுருணையை, அந்த பிராம்ஹண வேஷதாரியும் ஜகத்ரக்ஷகருமான அவருடைய பிக்ஷாபாத்திரத்

தில் வீசியெறிந்தாள். உடனே அந்த பிராம்ஹணர் தூர விலகிப்போய் தன் பாத்திரத்தைப் பார்க்குங்கால், அந்த மெழுகின சருணையுடன் ஒரு துவரையிருந்தது, அப்போது அந்த துவரையை, நாராயணமூர்த்தி முளைக்கப்போட்டு வைகுண்டத்திற்கு ஏகினர்.

அத்துவரை சிலநாளில் முளைத்து பெரிய செடியாகி இலைகள், புஷ்பங்கள், காய்களுடன் கூடியிருந்தது. அந்த விதவையும் சிலகாலத்திற்குமேல் மரணமடைந்து புழு வாய்ப்பிறந்து அந்தத் துவரைச்செடியிலிருந்த இலைகளைச் சாப்பிட்டுக்கொண்டிருந்தது இப்படி இருக்க சிலகாலஞ் சென்றபிறகு. ஜெகந்நாதனுகிய நாராயணன் லக்ஷ்மீஸமேதராய் விதவையாயிருந்து இப்போது புழுவாயிருக்கும் அந்தப் புழுவிடம்வந்து ஓ கீடகமே நீ நன்ருயிருக்கிருயா என, அந்தப் புழுவானது, ஓ ஜகதீசா, உமக்குத்தெரியாத விஷயம் ஏதாவதுண்டா ! இவ்விதமாய் இலைகளைச்சாப் பிட்டுக்கொண் டிருக்கிறேனென, லக்ஷ்மிதேவி யானவள், தன் பர்த்தாவாகிய வைகுண்டநாதரைப்பார்த்து ஓ பிராண நாதா, இதற்கு இந்த புழுஜென்மம் வருவதற்குக் காரண மென்னவென்று கேட்க, நாராயணன் சொல்லுகிருர்.

இந்தப் புழு, பூர்வத்தில் மனுஷ்யகர்ப்பத்தில் பெண் ணாய்பிறந்து பாலியத்திலேயே விதவையாய், பிறகு புழு வாய் பிறக்கிறவரையில் நடந்த கதையைச்சொல்ல,அதைக் கேட்ட மஹாலக்ஷ்மி, இவளுக்கு இநத புழுஜன்மமெப்படி ஒழியுமென்று கேட்க, நாராயணன், ஓ பிராணநாயகி, இதற்கு கார்த்திகை மாதத்தில் சுத்ததுவாதசியில் நடத் தும் விரதப்பலனில் கொஞ்சம்கொடுத்தால் இந்த ஜன்மம் சாபல்யமாகுமென, ஸ்ரீமஹா லக்ஷ்மி அப்பலனை உடனே கொடுத்தாள்.

அப்பொழுது அந்த புழுவானது ஸ்திரீ ரூபம் தரித்து லக்ஷிமிநாராயணர்களை வலம்புரிந்து பிரதக்ஷிண நமஸ்காரம்செய்து லக்ஷிமிதேவியோடு சொன்னாள்: ஓ ஜகந்மாதா இந்த் விரதம் நானும் செய்யப்பிரியப்படுகிறேன், அதை எனக் குபதேசம்செய்யவேண்டுமென்று லக்ஷிமி தேவியைப் பிரார்த்திக்க அத்தேவி சொல்லுகிறாள். ஓ பெண்மணியே! கார்த்தீக சுத்த ஏகாதசியில் உபவாஸம் செய்து துளசி பிருந்தாவனத்தில் மெழுகி பஞ்சவர்ணத் தோடும் ஐந்துவிதமான பத்மக்கோலங்களாலும் அலங்கரித்து ஷோடசோபசாராதி பூஜைகள்செய்து தூபதீப நைவேத்தியங்களால் விரத கல்பத்தின்படி துளசியைப் பூஜித்துஅவ்விரவுமுழுமையும்கண்விழித்துபுராணஸ்ரவணங் கள்செய்து மறுநாள் உதயத்தில் ஸ்நாநம்செய்து, சுத்த வஸ்திரங்களைத்தரித்து, முன்னேப்போல் துளசிதேவிக்கு புனர்ப்பூஜைகள்செய்து, சர்க்கரை, வெல்லம், பால், பச்சரிசி மாவில் போட்டுக்கலந்து, அந்த மாவை மூன்றுஉருண்டையாக்கி, அதிலொன்றை, துலஸிக்கு நிவேதித்து அதை பிராமணருக்கு தானம்செய்து மிகுந்த உருண்டையை உரலில் போட்டு பால்விட்டு, சுமங்கலிகளுடன் பாட்டு பாடிக் கொண்டு, கருப்பங்கழிகளால் இடித்து, பிறகு பிராம்ஹணர்களையும் ஸ்திரீகளையும் பூஜைசெய்து அவர்களுக்குப் பழம் தாம்பூல தக்ஷணைகளைக்கொடுத்து, அறுசுவையுடன் திருப்தியாக, அன்னமளித்து, பிறகு, தீர்த்த ப்ரஸாதங்கள் நாமும் சாப்பிடவேண்டியது. மேற்சொன்னவாறு ஐந்து வருஷம் இந்த விரதம் அநுஷ்டித்துக்கொண்டு வந்து, ஆரம்பத்திலாவது, மத்தியிலாவது, கடைசியிலாவது, உத்தியாபனை (அல்லது) விரத பூர்த்திசெய்யவேண்டியது. உத்தியாபனைக்ரமத்தைச் சொல்லுகிறேன்கேள். முதலில்

லக்ஷ்மீ நாராயணப் பிரதிமைகளை சக்திக்குத் தக்கபடி பொன்னினாலாவது, வெள்ளியினாலாவதுசெய்து, சுத்தமான இடத்தில் கோமயத்தால் மெழுகிக் கோலங்களிட்டு, அவ்விடத்தில் இலைகள்போட்டு ஐந்து படிக்குக் குறையாமல் வெண்மையான பச்சரிசிக்கொட்டி அதில் பிரதிமாசோதனம் அப்பிஷேகம்செய்து வைத்து, மேற்சொன்ன பிரதிமைகளை வைத்து பிரதிமைகளுக்கு பிரத்யேகமாக வஸ்திரங்களைக்கட்டி சந்தனபுஷ்பாதிகளால் அலங்கரித்து ப்ராண ப்ரதிஷ்டை செய்து தூபதீப நைவேத்தியாதி ஷோடசோபசாரங்களால் லக்ஷ்மிநாராயணர்களைப்பூஜித்து ஐந்துதரம் பிரதக்ஷண நமஸ்காரங்கள செய்து, இராத்திரி முழுமையும் நித்திரையில்லாமல் ஒரேமனதாய் புராண சிரவணாதிகள்செய்து மறுநாள் உதயத்தில் ஸ்நாநாதி யனுஷ்டானங்கள் முடித்து, புநர்ப்பூஜாதிகள்செய்து சாதுவாயும் குடும்பியாயுமிருக்கும் ப்ராம்ஹணருக்காவது, (புரோஹிதருக்காவது) ப்ரதிமாதானஞ்செய்து, இரண்டு சுமங்கலிகளுக்கும், பதினைந்து ப்ராம்ஹணுளுக்கும், தாம்பூல வஸ்திர தக்ஷிணைகளால் திருப்திசெய்து, தம்பதி பூஜைகளும் நடத்தி, பந்துமித்ரர்களுடன் ஷட்ரஸோபேதமான போஜனம் செய்வித்து, தாம்பூலம் கொடுத்து இவ்விதமாக சக்திக்குத் தக்கபடி விரதபூர்த்தி செய்யவேண்டியது. விரதோத்தியாபனை செய்யாதவர்கள் புழுவாய் பிறப்பார்கள்.. ஆகையால் இந்த விரதம் செய்கிறவர்கள் எல்லோருக்கும் தங்கள்தங்கள் கோரிக்கைகள் பூர்த்தியாய் முடியும். இந்த விரதம் திருப்தியோடு செய்கிறவர்கள் இம்மையில் ஸகல சௌக்கியங்களுமனுபவித்து, மறுமையில் ஸ்வர்க்காதி போகங்களடைவார்களென்று ஸ்ரீமஹாலக்ஷ்மியால் அந்த இல்ல நாராயணியென்னும் பெண்ணுக்கு உபதேசிக்கப்

பட்டது. இவ்விரதத்தை யார் செய்தாலும் உலகத்தில் லக்ஷ்மிகடாக்ஷமுண்டாகி, சௌபாக்கியம் அடைந்து நெடு நாள் வாழ்ந்து பிறகு சத்கதி அடைவார்களென்று, ஸ்ரீமந் நாராயணனாலும் சொல்லப்பட்டது. இல்ல நாராயணி என்கிற பெண் இவ்விரத, உத்யாபனையும் க்ரமப்படி செய்து பிறகு நற்கதி அடைந்தாள். ஆகையால்ப்ருந்தா வனத்தில் ஸத்தியபாமையுடன் இருந்த சமயத்தில் நாரதரால் சொல்லப்பட்ட இம்மதனத்வாதசி விரதம் யார் செய்தாலும், அக்கதையை பக்தியோடு படித்தாலும், கேட்டாலும், ஸகல பாபங்களினின்று விடுபட்டு மேலான வைகுண்டபதவி அடைவார் என்பது திண்ணமென ஸ்ரீமந் நாராயணராகிய க்ருஷ்ணமூர்த்தியால் சொல்லப்பட்டிருக் கிறது. மேலும் ப்பவிஷ்யோத்தர புராணத்திலும், இவ் விரதத்தைப்பற்றி விசேஷப் பலனுண்டென்று சொல்லி யிருக்கிறது. அப்புராணத்திலும் இதுவிஷயம் படித்துத் தெரிந்துக்கொள்ளலாம் மிகப் புண்ய சரித்திரம்.

மத்தன த்வாதசி விரத கதை

முற்றிற்று.



ஸ்ரீரஸ்து

# ஸ்ரீக்ருஷ்ண ஜன்மாஷ்டமீ விரதம்.

ஸு. அத்யஸ்தித்வா நிராஹாரோ, ஸ்வோப்பூதே பரமேஸ்வர, ப்போஜ்யாமி தேவகீபுத்ர, பூஜாம்க்ருத்வா வித்தானதঃ. நியமமந்த்ரம் ஸு. துளஸீதளஸம்யுக்தம், யஸ்தோயம், சிரஸாவஹேத் ஸஸ்நாத ஸ்ஸர்வதீர்த்தேஷூ, ஸர்வயக்ஞப்பலம்லப்பேத். ஸு. வஸந்தியானிதீர்த்தானி, புண்யானிப்புவனத்ரயே, தேப்யஸ்தீர்த்தஸஹஸ்ரேப்யঃ பாவநேப்பியோ நமோநமঃ. கலசோதக ஸ்தாபன மந்த்ரம். ஸு. பிபந்தம் பரம்த்யாயேத் ஸ்ப்ருசந்தம் பாணிநாபரம், விலோக்யமானம், ப்ரேமார்த்ர, முக்கம் மாதுர் முஹுர்முஹுঃ. பிறகு, சங்கல்பம் செய்கிறது. ஏவங்குண, விசேஷண விசிஷ்டாயாம், சுப்பதித்தௌ, அஸ்மாகம் ஸஹகுடும்பாநாம், க்ஷேமஸ்தைர்ய, விஜய ஆயுராரோக்ய, ஐஸ்வர்யாப்பிவ்ருத்யர்த்தம், ஸகலமனோரத்தாவாப்த்யர்த்தம், ஸமஸ்தஜன்மார்ஜித பாபநிவ்ருத்யர்த்தம், புத்ரபௌத்ராப்பிவ்ருத்யர்த்தம், த்தர்மார்த்த காமமோக்ஷசதுர்வித்தப்பலபுருஷார்த்த ஸித்யர்த்தம், ஸ்ரீகோபிதேவிதேவகீ வஸுதேவஸமேத ஸ்ரீக்ருஷ்ண மூர்த்திஸ்ய, ஸ்ரீக்ருஷ்ணப்ரீத்யர்த்தம், க்ருஷ்ணஜன்மாஷ்டமீ வ்ரதபுண்யகாலே, ஸ்ரீகோபாலக்ருஷ்ணபூஜாங்கரிஷ்யே. (நமঃ) ததங்க,கலசபூஜா, சங்க்க பூஜா, பீட்டார்ச்சனம், க்ருத்வா, அத்த ஸுவர்நேந, ரஜதேந, தாம்பிரேண, ம்ருண்மயேநவா,ஸ்ரீகோபாலக்ருஷ்ணப்ரதிமாம்க்ருத்வா,பூஜாம்கரிஷ்யே. (நமঃ) பொன், வெள்ளி, செம்பு, அல்லதுமண்ணிறு

வது, கோபாலர்களையும், ஸ்ரீக்ருஷ்ணனையும், பிரதிமாரூபமாய் செய்துவைத்து பூஜிக்கவும். மூலமந்த்ரேணவா, விஷ்ணு ஸூக்தேனவா, ஸர்வம் ப்ரதிவாக்யேந பூஜயேத் தீமான். அத்த த்யான ஸ்லோகம. ஸ்ரீக்ருஷ்ண கோபீஜன முக்ய விஷ்ணோ, ப்ரம்ஹாண்ட குஹிம்பரவாஸுதேவ, கோபஸ்த்ரீ ஸஹஸ்ர ஷோடச வல்லப்பாக்ய, கோவிந்த பீதாம்பரசங்க்ச சக்ரின். ஏவம்த்யாத்வா ஹரிம்ஸம்யக், ஸ்ரீகிருஷ்ணம் விஸ்பரூபிணம், இஷ்டகாம்யார்தத சித்யர்த்தம், பூஜாம் குர்யாத் யத்தாவித்தி. ஆவாஹயாமி தேவேச ஸித்தகந்த்தர்வஸேவித யத்ரஹஸ்யமிதம் புண்யம், ஸர்வபாப ஹரோஹரி:. தேவகீவஸுதேவ ஸமேத ஸ்ரீகோபாலக்ருஷ்ண ப்ரீத்யர்த்தம் ஸபரிவாரேண, ஆவாஹனம் ஸமர்ப்பயாமி. தேவதேவ ஜகன்னாத்த ப்ரணத: க்லேசநாசன, ரத்னஸிம்ஹாஸனம் திவ்யம் க்ருஹாண மத்துஸூதன. ஸ்ரீதேவ....நம: ரத்நசிம்ஹாஸநம் ஸ....மி. வாஞ்ச்சிதம் குருமேதேவ துஷ்க்ருதஞ்ச விநாசய, பாத்யம் க்ருஹாண பபகவன், மாத்ரு துத்ஸங்கஸம்ஸ்தித. ஸ்ரீதேவகீ........நம: பாத்யம் ஸ... மி. குருஷ்வமே தயாநேவ, ஸம்ஸாரார்திப்பயாபஹ, தத்திக்ஷீரஜலோபேதம், க்ருஹாணார்க்யம் நமோஸ்துதே, ஸ்ரீதேவகி....நம: அர்க்யம் ஸ....மி. ஸ்ரீவத்ஸ்தாங்க ஜகத்ரூப ஸ்ரீத்தர ஸ்ரீநிகேதந உபேந்திரதேவகீபுத்ர, க்ருஹாணாசமநீயகம். தேவகீ.... நம: ஆசமநீயம் ஸ....மி. கோபவேஷ நமஸ்துப்யம், தத்திக்ஷீர ஸமன்விதம், மத்துபர்க்கம் க்ருஹாணேதம், மயாதத்தம்ஹ்ருஷீகேசவ. தேவகீ....வஸ....நம: மத்துபர்க்கம் ஸ....யாமி. சர்வாய ஸ்வர்கபதயே, கோவிந்தாய மஹாத்மனே, ஸ்நாநம் பஞ்சாம்ருதம், தேவ, க்ருஹாணஸூர ஸத்தம, தேவகீ....வஸு....நம: பஞ்சாம்ருத ஸ்நாநம்

ஸ....மி. நாரிகேளோதகம் கங்கா, யமுனாதிஸமுத்பவம், சுத்தோதகக்ருஹாணேச ஸ்நாநம் குருயத்தாவித்தி. தேவகீ....நமஃ ஸ்நாநம் ஸ....மி. ஆசம்யதாம் ஜகன்னாத்த ஸம்ஸாரார்நவ தாரக, கோவிந்த பரமானந்த விஸ்வரூப நமோஸ்துதே தேவகீ....ஸமேத....நமஃ ஆசமநீயம் ஸ....மி. பீதாம்பராணி ஸர்வேச, நாநாவஸ்த்ரோப சோப்பித த்தாரயேத் விஸ்வரூபாத்மன், ஸ்ரீகிருஷ்ணஜகதாம்பதே. தேவகீவஸு....கோபால....ஸ்வா....நமஃ பீதாம்பரத் தாரணம் ஸ....மி. ப்ரம்ஹஸூத்ரம் சோபவீதம் த்ரயீநாத்த த்சராத்தர, கோவிந்த பரமாநந்த, வாஸுதேவாயதேநமஃ தேவகி....வஸு....ஸமே....நமஃ எக்ஞோபவீதம் ஸ....மி கேயூரவலயம்சைவ, க்ரைவேயம். குண்டலத்வயம், அங்குளீயகரத்னானி, ப்பூஷணாநிது க்ருஹ்யதாம். தேவகி வஸுதே....ஸ....நமஃ ஸர்வாப்பரணானி ஸ....மி. சந்தநா கருகஸ்தூரி, க்கனஸாரஸமன்விதம், கந்தம் க்ருஹாண கோபால, நாநாகந்தாம்ஸ்சத்தாரய. தேவகி....கோபா.... நமஃ கந்தம் ஸ....மி. கோவிந்த பரமானந்த ஹரித்ராஸஹிதாக்ஷதான், விஸ்வேஸ்வர விசாலாக்ஷ, க்ருஹாண பரமேஸ்வர. தேவகி....ஸமேத....கோபா....நமஃ ஹரித்ராக்ஷதான் ஸ....மி. சாமந்திகா வகுள சம்பக பாடலாப்ஜ, புன்னாக ஜாஜி கரவீரரஸாலபுஷ்பைஃ பில்வப்ரவாள, துளஸீதளமல்லிகானி, த்வாம் பூஜயாமி, ஜகதீஸ்வர வாஸுதேவ. கோபலகிருஷ்ணாப்யான்னமஃ பரிமள பத்ரபுஷ்பாணி பூஜயாமி. ஸ்ரீ க்ருஷ்ணம் பலப்பத்ரஞ்ச, வஸுதேவஞ்ச தேவகீம் ரோஹிணீஞ்ச ஸுபத்ராஞ்ச, யசோதாநந்தமேவச தூர்க்காம் சைவ முனீம்ஸ்சைவ பூஜயேத்கோபவர்த்தனம். ப்ரம்ஹாதீன் பூஜயேத். அஷ்டதிக்பாலகான் பூஜயேத். கஸ்யபாதிஸப்த இருஷீன் பூஜயேத்.

## அத்தாங்க பூஜா.

| | |
|---|---|
| த்ரிவிக்ரமாய நமஃ. | பாதௌ பூஜயாமி. |
| கங்காப்ரப்பவாய | குல்ப்பௌ பூ—மி |
| விஷ்வக்ஸேநாய | ஜங்க்கே பூ—மி |
| ஜநார்த்தனாய | ஜானுநீ பூ—மி |
| நீலாம்பராய | ஊரு பூ—மி |
| கருடவாஹனாய | கட்டிம் பூ—மி |
| லோகப்ரப்பவாய | குஹ்யம் பூ—மி |
| பத்மநாப்பாய | நாப்பிம் பூ—மி |
| தாமோதராய | உதரம் பூ—மி |
| கௌஸ்துப்பத்தாரிணே | ஹ்ருதயம் பூ—மி |
| வனமாலிநே | ஸ்தநௌ பூ—மி |
| கம்புக்ரீவாய | கண்ட்டம் பூ—மி |
| திவ்யாயுத்தாய | ஸந்த்தௌ பூ—மி |
| சார்ங்பாணயே | பாஹூன் பூ—மி |
| சக்ரத்தராய | ஹஸ்தௌ பூ—மி |
| சந்த்ரமுக்காய | முக்கம் பூ—மி |
| தேவகர்ப்பாய | ஓஷ்டம் பூ—மி |
| உபேந்த்ராய. | க்கராணம் பூ—மி |
| புண்டரீகாக்ஷாய | நேத்ரே பூ—மி |
| விஷ்டரஸ்ரவஸே | கர்ணௌ பூ—மி |
| மாத்தவாய | லலாடம் பூ—மி |
| ஸர்வாத்மனே | சிரஃ பூ—மி |
| தேவகீஸூனவே நமஃ | ஸர்வாண்யங்கானி பூ—மி. |

அனந்த விரதத்திலுள்ள 108-நாம க்ருஷ்ணாஷ்டோத்திரத்தைப் பார்த்து பூஜை செய்துக்கொள்க.

## தூபதீப நைவேத்யங்கள்.



ச. தசாங்கம் குக்குலம் த்தூபம், கோக்ருதேந ஸமன்விதம், த்தூபம் க்ருஹாணதேவேச, ஸர்வலோக நமஸ்க்ருத. தேவகீ வஸுதேவ ஸமேத ஸ்ரீ கோபால க்ருஷ்ணாய நமஃ த்தூபமாக்ராபயாமி. த்ரிலோகேச மஹாதேவ ஸர்வக்ஞானப்ரதாயக, தீபம் தாஸ்யாமி தேவேச, ரக்ஷமாம் ப்பக்தவத்ஸல. தேவகீ வஸு....கோபால....நமஃ தீபம் தர்சயாமி. ஸர்வ ப்பக்ஷ்யைஸ்ச ப்போஜ்யைஸ்ச, ரஸைஷ்ஷட்ப்பிஸ் ஸமன்விதம் நைவேத்தியந்து மயாநீதம் க்ருஹாண புருஷோத்தம. ஸ்ரீ கோபால கிருஷ்ணாய நமஃ ப்பக்ஷியப்போஜ்யாதீன் நிவேதயாமி. ஸுத்தாரஸம் ஸுவிபுலம் மயாநீதந்து மாத்தவ, கிருஹாண கலசாநீதம், யத்தேஷ்டமு பப்புஜ்யதாம். ஸ்ரீ கோபால ....நமஃ பூர்வாபோசனம் ஸ....மி. பாநீயம் பாவனம் ஸ்ரேஷ்டம், யேலகாதி ஸுவாஸிதம் கர்ப்பூரவாஸிதம் தோயம ப்ரீத்யர்த்தம் மத்துஸூதன. மத்தியே மத்தியே பாநீயம் ஸ....மி. உத்தராபோசனம் க்ராஹ்யம் ஹஸ்த ப்ரக்ஷாளனம் குரு. அனந்தரம் பாதப்ரக்ஷாளனம் குர்யாத். ஸ்வாமிக்கு அம்சையானபிறகு கைகால்களை சுத்தி செய்து வைக்கிறது. பிறகு ச. பூகீப்பலைஸகர்ப்பூரைர் நாகவல்லீ தளைர்யுதம், லவங்கேலா சூர்னயுக்தம், தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம். ஸ்ரீ தேவகீ வஸுதேவ ஸமேத கோபாலாய நமஃ தாம்பூலம் ஸ....மி. ஸ்வர்ணபுஷ்ப மிதம்தேவ, க்ருஹாண புருஷோத்தம, கோடி ஸூர்ய ப்ரதீகாசம், ஸ்வர்ணபுஷ்பம் மனோஹரம். கோபாலக்ருஷ்ண ஸ்வாமினே நமஃ ஸ்வர்னபுஷ்பம் ஸ....மி. கர்ப்பூரவர்தி ஸம்யுக்தம் தீபமாலாமனோஹரம், நீராஜனம்

க்ருஹாணேச, தேவக்கியாநந்தவாத்தன. தேவகீ வஸுதேவ ஸமேத ஸ்ரீ கோபால கிருஷ்ணாய நம:, கர்ப்பூரநீராஜனம் ஸ....மி. ஸ்ரீக்ருஷ்ண ஸர்வலோகேச, நாநாபுஷ்பைஃ ஸுராஜிதைஃ புஷ்பாஞ்ஜலிம் ப்ரதாஸ்யாமி, க்ருஹாணேச மயார்பிதம் ஸ்ரீ கோபாலாய நமஃ புஷ்பாஞ்ஜலிம் ஸ....மி. சு. தேவ தேவஜகன்னாத்த, வாஞ்சிதார்த்த ப்பலப்ரத, ப்ரதக்ஷிணம் கரோமித்வாம், ஸம்ஸாரார்னவதாரக. ஸ்ரீ கோபாலாயநம: ப்ரதக்ஷிணம் ஸ....மி. சு. கிருஷ்ணாய வாஸுதேவாய, தேவகீ நநதனாயச, நந்த கோப குமாரர்ய கோவிந்தாய நமோநமஃ. ஸ்ரீகோபால கிருஷ்ணாயநமஃ ஸாஷ்டாங்க நமஸ்காரான் ஸ....மி. சு. அபராத்த ஸஹஸ்ராணி, க்ரியந்தேஹர்நிசம்மயா, தாஸோஹமிதிமாம் மத்வாக்ஷமஸ்வ புருஷோத்தம என்று ப்பகவானை ப்ரார்த்தனை செய்கிறது. ததோகந்தாக்ஷதைஃ புஷ்பைஃ பூஜயேச் சந்தரமண்டலம். சந்தரமண்டலத்தை பூஜைசெய்து பிறகு, அர்க்கியம் விடவேண்டியது. அர்க்கியத்துக்கு வேண்டிய புஷ்பம், அக்ஷதை, பழம் வைத்துக்கொண்டு அற்கியம் விடவேண்டியது.

## அர்க்ய ஸ்லோகங்கள்.

சு. ஜ்யோதிஷ்மதே நமஸ்துப்யம், நமஸ்தே ஜ்யோதிஷாம்பதே நமஸ்தே ரோஹிணீகாந்த ஸுத்தாகர நமோஸ்துதே. மேற்சொன்ன ஸ்லோகம் சந்தர ப்ரார்த்தனை செய்கிற மந்த்ரம் (1) சு ஜாதஃ கம்ஸவத்தார்த்தாய, ப்பூபாரோத்தாரணாயச, தானவானாம் விநாசாய, வஸுதேவ குலோத்ப்பவ. ஸ்ரீ கோபாலகிருஷ்ணாய நமஃ ப்ரத்தமார்க்கியம் ஸமர்ப்பயாமி. (2) சு. பாண்டவாநாம் ஹிதார்த்தாய, த்தர்மஸம்ஸ்தாபனாயச, கௌரவாணாம் விநாசாய வஸுதேவ குலோத்ப்பவ ஸ்ரீகோபால

கிருஷ்ணாய நமஃ த்விதீயார்க்கியம் ஸ....மி. (3) சு. ஸ்ராவண்யாம் க்ருஷ்ணபக்ஷத்து அஷ்டமீரோஹிணீயுதா, தஸ்யாம் சந்த்ரோதயே, ராத்ரௌ பாலகிருஷ்ண ஸமுத்பவஃ ஸ்ரீ கோபாலக்ருஷ்ணாயநமஃ திருதீயார்க்யம்ஸமர்ப்பயாமி. (4) சு. சந்த்ரார்க்கியம். சு க்ஷீரோதார்ணவஸம்பூத அத்திரிநேத்ர ஸமுத்பவ, கிருஹாணார்க்கியம் மயாதத்தம், ரோஹிண்யாஸஹிதஸ் சசின், ஸ்ரீகோபால க்ருஷ்ணாய நமஃ சந்த்ரார்க்கியம் ஸமர்....மி. சு. யஸ்யஸ்ம்ருத்யாச நமோக்த்யா. இந்த ஸ்லோகம் கடைசியில்சொல்லி அக்ஷதையும், ஒரு திருத்தொளா துளசீதளம் (அல்லது) புஷ்பம்சேர்த்து ஜலத்தோடு பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டியது. பூஜை முடிந்தது.

## விரதப்பல ஸ்லோகங்கள்.

சு. நமஃ பரமகல்யாணநமஸ்தே விஸ்வமங்கள வாஸு தேவாய சாந்தாய, யதுநாம்பதயே நமஃ. நாரதௌவாச. சு. ஜயந்தியாஸ்சைவ மஹாத்மியம, ஸ்ரீ க்ருஷ்ணஸ்ய மஹாத்மநஃ, யத்ருத்வாஹம் கமிஷ்யாமி, தத்விஷ்ணோஃ பரமம்பதம்|| பிதாமஹௌவாச|| ஸ்ருணுவத்ஸப்ரவக்ஷ்யாமி, ஜயந்த்யாஸ்ச ப்ரப்பாவகம் ஜயம்புண்யஞ்ச லப்பதே சீக்ரம் பாபஸ்யநாசனம். ஸ்மரணாத் கீர்த்தனாத்பாபம், ஸப்த ஜன்மார்ஜிதம் முனே, ஜயந்திஹ்ரதே ஸர்வம் கிம்புநஸ் சோபவாஸிநாம், க்ருஷ்ணஜன்மாஷ்டமீலோகே பவித்ரா பாபநாசனீ க்ரதுநாஞச ப்பலம்தேஷாம் தீர்த்தாயுத ப்பலம் ப்பவேத்.

ப்பல ஸ்லோகங்கள் முற்றிற்று.

---

# கதை ஆரம்பம்.

ஸ்ரீ முனிஸ்ரேஷ்டராகிய நாரதர் உலக நன்மைக்காக சத்தியலோகம் சென்று, அவ்விடத்தில் வெண்தாமரையில் பிறந்து பத்மாஸனத்தின்மீது எழுந்தருளியிருந்த பிரம்ஹ தேவரைநோக்கி, "ஹே பிதா" ஸ்ரீ க்ருஷ்ணாஷ்டமீ விரத மகத்துவத்தைபற்றி யான் கேழ்க்க விரும்புகின்றேன். ஆகையால், தாங்கள் தயவுகூர்ந்து எனக்குச் சொல்ல வேண்டுமென்று நாரதர் கேட்டார். அதற்கு பிரம்ஹ தேவர், "ஓ என் குழந்தையாகிய நாரதா சொல்லுகிறேன் கேள். அவ்விரதம் கலியுகத்தில் ஜனங்களுக்கு நேரும்படியான எல்லா பாவங்களையும் பஸ்மமாக்கும்படியானதும், ஜயத்தையும், நன்மைகளையும் கொடுக்கும்படியானது. அதாவது ஜயந்தி என்று நினைத்தவளவில், ஏழு ஜன்மங்களில் தான்செய்த கொடிய பாபக்ருத்யங்கள் நாசமடையும் போது, ஜயந்தி தினத்தில் உபவாஸம் செய்தவர்களின் மஹா பாபங்களை போக்குமென்பதில் ஐயமுண்டா. இந்த க்ருஷ்ணஜன்மாஷ்டமி, மஹா பாவங்களைப் போக்குவது மன்றி, அஸ்வமேதமும், தீர்த்த ஸ்நாநங்களும்செய்த ப்பல னுமாம். ஜயந்திதினத்தில் உபவாஸமிருந்தால் ஆயிரம் காராம்பசு, ரத்னகோடிகள் ஆயிரம் கணக்காகவும், அஸ்வ கஜதானங்களுடைய புண்ணியப்பலனும், அளவற்ற ஆபரணாதிகள் குருக்ஷேத்ரத்தில் தானம் கொடுத்தப் பலனும், கோடி கன்னிகாதானப் பலனும், அடைவார்கள். குருவைக் குறித்தாவது, தன் எஜமானனைக் குறித்தாவது, பிராம்ஹணனின் பொருட்டும், தான் செய்த தேஹத்தியாகப் பலனும், ஆபத்திலிருக்கிறவர்களுடைய கஷ்டங்களை

விமோசனம் செய்த புண்ணியமும், தீர்த்தயாத்ராப் பல னும் அடைவார்கள். சத்தியவான்களுக்கு கிடைக்கும் புண்ணியமும், பௌர்ணமாவாஸ்யாதி ஸங்கிராந்திகளில் பிதுர்தேவதைகளை உத்தேசித்து செய்த, தீர்த்த ஸ்நாநப் பலன்களும், தற்பணாதிகள்செய்த புண்ணியமும், அநேக துவாதசி பாரணாதிகளால் தங்களுக்குகிடைக்கும் நன்மை யும், ஜயந்திதினம் ராத்திரி ஜாகரணம்செய்த புண்ணிய மும், அம்பரீஷர், காதி, சிசுபாலாதி, இராஜ சிரேஷ்டர்க ளால் தேவதேவரான தேவகீபுத்திரனை திருப்திப்படுத்த கிருஷ்ணாஷ்டமியில்செய்த விரத விசேஷங்களாலும், இப் பூமியில் தங்களுக்குக்கிடைத்த இராஜ்ஜிய லாபமடைந்தப் பலன் அநுபவித்துக்கொண்டிருந்து, முடிவில் ப்பகவானு டைய கிருபையினால் வைகுண்டபதவி யடைவார்கள். மேலும் வால்மீகி, வாலக்கில்யாள், வசிஷ்டர், கௌதமர், ஜாமதக்னி முதலிய மஹரிஷிகள் இவ்விரதமனுஷ்டித்து செய்தார்கள். ஆவணிமாத கிருஷ்ணபக்ஷ அஷ்டமிதிதி யில் ரோகணி நக்ஷத்திரத்தில் இவ்விரதானுஷ்டானம் செய் தால் சதுர்ப்புஜரான சக்கிரபாணியினுடைய பாதஸேவை யால் அளவற்ற பாவங்களினின்று விலக்கி நற்கதியடை யச் செய்வர். இவ்விரதம் எல்லா கோரிக்கைகளையும் கொடுக்கக்கூடியதாகையால் முகுந்தன்முன் பக்தியோடு மூன்றேமுக்கால் நாழிகையாவது பூஜித்து ப்பஜனம் செய் வார்களேயாகில், அவர்களுடைய பாவங்களெல்லாம் வில கும். இதுவுமன்றி க்ருஷ்ணாஷ்டமி தினத்தில், சாப்பிடுகிற வர்கள் மூவுலகிலும் பாபங்களையே அநுபவிக்கிறவர்களா வதுமன்றி, சூத்திரான்னம், ப்ரேதான்ன ப்போஜனங் களால் அடையும் பாவத்திற் காளாவார்கள். இவ்விரதம் அனுஸரித்து செய்யாத மனிதன், கோஹத்தியை, பிரம்ஹ ஹத்தியை, ஸ்திரீஹத்தியை, கள்குடித்தல், மூர்க்கர்கள்,

பரான்னஸக்தர்கள் அடையும் பாபங்களுக்கு ஆளாவார்கள். எவ்வளவும் ஸுக்கம் அடையார்கள். ஓ நாரதா! க்ருஷ்ணஜயந்தி தினத்தில், ஸ்ரீக்ருஷ்ணனை யார் பூஜைசெய்கிறார்களோ, அவர்கள் தேவகிபுத்திரராய் அவதரித்த புருஷோத்தமனுடன் கூடிசந்தோஷமாய் ப்ரஸன்னமுகமாய் வாழ்வார்கள். ஆகையால், இவ்விரததினத்தில் தேவகீஸகிதமாக, ஸ்ரீக்ருஷ்ணனை ஆராதிப்பவர்கள், சுகமாய்விஷ்ணு பாதத்தைசேர்வார்கள். ஸ்ரீலக்ஷ்மீகடாக்ஷமும் பூர்த்தியாய் உண்டாகும். வாஸுதேவ ஸ்மரணையால், ராஜீக தைவிகமான ஸாவபயங்களும், சூரியனைக்கண்ட பனியைப்போல் நீங்கும். உலகத்தில் பசு தனதானிய ஸம்பத்துகளுடன் குடும்ப வ்ருத்தியாய் வாழ்ந்து கடைசியில் மோக்ஷ ஸாம்ராஜ்ய மடைவார்கள். ரோகத்தினலும், துக்கத்தினலும் உண்டாகும் பயங்களெல்லாம் பஸ்மமாகும். கலஹங்களும், உபத்திரவங்களும் கினவிலும் உண்டாகாது. மேலும் இன்னெருவிசேஷமுண்டு: இந்த ஸ்ரீஜயந்திவிரதம், ரோஹிணீநக்ஷத்திரம்கூடிய புதன்கிழமையில்வரும் ஸமயத்தில் விரதம்செய்கிறவர்களுக்கு, குலவிருத்தியும் எவ்வித ஜெயமும் உண்டாகும். ஓ! முனிஸ்ரேஷ்டரே பலமுறை ஏன் சொல்லவேண்டும், இவ்விரதத்தில் தாய்தந்தைகள், குரு முதலானவர்களை பூஜித்தப் பலனுண்டாகும் என்று சொல்ல, நாரதர் இன்புற்று மறுபடியும் பிரம்ஹதேவரைப் பார்த்துப் பிரார்த்தித்து ஜெயந்தீவிரதம், எவ்விதமான விதிவிதாயகத்துடன் அனுஸரித்து செய்யலாமோ அதை எனக்கு உபதேசிக்க வேண்டுமென்று கேழ்க்க, நாரதரை நோக்கி பிரம்ஹதேவர் சொல்லுகிறார். பூர்வத்தில் ஹரிச்சந்திரன், ஸனத்குமாரரை பிரார்த்திக்க, அவரும் இவ்விரதத்தையே உபதேசித்தார். எந்த விரதமாகிலும் ஊக்கத்துடன் கிரமமாய் செய்தால், பலன் உண்டாகும். விதிப்

படி செய்யாத விரதங்களால் க்ஷேமமுண்டாகாது. ஆகை யால், பக்தியோடு, இந்த விரததினத்தில், மத்தியான்ஹ வேளையில், பட்டிணி அல்லது உபவாஸமிருந்து, புத்ர மித்ர களத்திராதிகளுடைய க்ஷேமத்தை உத்தேசித்து, எள்ளு, நெல்லிப்பருப்பு இவைகளை அரைத்து தலையில் தேய்த்துக்கொண்டு ஸ்நாநம் செய்து, துளசீதளத்தை கலந்த சுத்தஜலத்தில், மத்தியான காலத்தில் அனுஷ்டானாதிகள் முடித்துக்கொண்டு, நிம்மதியான மனதுடன் பரிசுத்தமாய் யிருந்துகொண்டு வீட்டின் மத்தியிலாவது, விஷ்ணு ஆலயத்திலாவது, கோமயத்தினால் ஸ்தலத்தை சுத்தமாய் மெழுகி, கோல அலங்காரஞ்செய்து அவ்விடத்தில் ஒரு தலைவாழை யிலையைப்போட்டு அதின்மீது பச்சரிசியைக்கொட்டி, ஒரு புதிதான கும்பம்வைத்து அதை சந்தனாக்ஷதபுஷ்பாதிகளால் அலங்கரித்து, வஸ்திரம் சுத்தி அந்த கலசத்தின்மேல், திரவியலோப மில்லாமல், சக்திக்குத்தக்கபடி, பொன்னால்செய்த பாலக்ருஷ்ண பிம்பத்தை வைத்து, கிரமமாய் பூஜைசெய்யவேண்டியது. இவ்விதமாகவே, ஸ்ரார்த்த, தான, ஹோம, தீர்த்தயாத்திரைகளிலும், எல்லா விரதங்களிலும், குறைவின்றி ஏராளமாய் சக்திக்குத் தக்கபடி செய்யவேண்டும். அப்படி குரு ஆக்ஞைதவறி தங்களிஷ்டப்படி செய்கிறவர்கள் நரகத்திற் காளாவார்கள். ஆகையால் எந்த விரதமானாலும், நியமத்துடன் கிரமமாய்செய்யவேண்டும். இன்னும், தேவகீகர்ப்பததிலிருந்து அவதரித்த ஜகத்பிதாவாகிய ஜநார்த்தனன் ஜென்மித்த ஸமயத்தில் ஜாதகர்மாதிகள்நடத்தி, சக்திக்குத் தக்கபடி பக்தியுடன், கோ, ப்பூ; தான்னிய, ப்பல, வஸ்திர தானங்கள் செய்யவும் "சுலோகம்" அதிதே தேவமாதஸ், துவம், ஸர்வபாபப்ரணாசிநி, அதஸ்த்வாம் பூஜயிஷ்யாமி, ப்பீதோஹம் ப்பவஸாகராத், பூஜிதாஸி யத்தாதேவைஃ

பிரஸன்னுத்வம் வராநநே, பூஜிதாசயதாப்பக்தியா பிரஸா, தம் குருஸௌவ்வரதே என்கிற இந்த புராண சுலோகங்களால் தேவகீப்ரார்த்தனையும் செய்யவும். சு. அவதாரஸஹஸ்ராணி, கரோதிப்பகவான் ஹரிஃ, தேஷாம்சைவது மாஹாத்மியம், கஸ்சித்ஜ்ஜானுதிவைப்புவி, தேவப்ரம்ஹாதயோயேப்பி, ஸ்வரூபம்நவிது ஸ்தவ அதஸ்த்வாம் பூஜயிஷ்யாமி,மாதுருத்ஸங்கஸம்ஸ்திதம், வாஞ்ச்சிதம் குருமே தத்ர, துஷ்க்ருதம் சைவநாசய, க்ருபாம்குருஷ்வமேதேவ ஸம்ஸாரார்திப்பயாபஹா, என்கிற இந்த ஸ்லோகங்களால் ஸ்ரீக்ருஷ்ணப்ரார்த்தனைசெய்து அர்த்த இராத்திரியில் பன்னிரண்டுமணிக்கு, ஆவாஹனுதிஷோடசோபசாரபூஜைகள் செய்து, சந்திரோதய ஸமயத்தில் வெளியே புறப்பட்டு, அவ்விடத்தில் பழங்கள் புஷ்பங்கள் சந்தனுதிகளால், அலங்கரிக்கப்பட்ட பூமியின்மீது, சங்கத்தினுல் தீர்த்தம் எடுத்துக்கொண்டு, சந்திரனை உத்தேசித்து அர்க்கியம் விடவேண்டியது. சு. க்ஷீரோதார்நவஸம்ப்பூத ஹ்யத்திநேத்ரஸமுத்ப்பவ, க்ருஹாணுர்க்கியம் மயாதத்தம், ரோஹிண்யா ஸஹிதஸ்சஸின். ஜ்யோத்ஸ்நாபதே நமஸ்துப்பியம், நமஸ்தே ஜ்யோதிஷாம்பதே, நமஸ்தே ரோஹிணீகாந்த ஸுத்தாகரநமோஸ்துதே. பிறகு இளநீர்ஜலமெடுத்து சங்கத்தில் விட்டுக்கொண்டு கீழே வரும் சுலோகத்தால், ஸ்ரீக்ருஷ்ணப்பிரீதியாக அர்க்கியம் விடவேண்டியது. சு. ஜாதஃ கம்ஸவத்தார்த்தாய ப்பூப்பாரோத்தாரணயச, பாண்டவானும் ஹிதார்த்தாய தர்மஸம்ஸ்தாபநாயச, கௌரவாணும் விநாசாய, வஸுதேவகுலோத்ப்பவ. தேவகீகர்ப்பஸம்ப்பூத, ப்பக்தாநாமப்பயப்ரத,க்ருஹாணுர்க்கியம்மயாதத்தம், பிரஸீதபுருஷோத்தம க்ருஷ்ணுர்க்கியம் விடவேண்டியது. அந்த இராமுழுதும், ப்பகவத் கதைகளால் ஜாகரணம்செய்து, தூபதீபநைவேத்

தியதாம்பூலங்கள்கொடுத்து, கர்ப்பூர தீபாராதனைசெய்து, சங்கீதவாத்தியம், நிருத்தியம் இவைகளால் பகவானை ஆராதனைசெய்தால், பூர்வஜென்மாந்திரத்தில் செய்த தங்கள் துரிதம் பாவும், தீயிலகப்பட்ட தூரும்பைப்போல் பஸ்மமாகும். இதுவும்தவிர, மறுநாள் அதிகாலையில் ஸ்நாநாதி, சந்தியா அனுஷ்டானங்களை ஒரே நிலையான மனதுடன் தீர்த்துக்கொண்டு, ஷட்ரஸோபேதமான சித்ரான்னங்களுடன் அன்னப்பிரதானம் செய்து, ஆபால விருத்த பரியந்தம் பந்துமித்ராதிகளுக்கு போஜனங்களால் திருப்திப்படுத்தி, பிறகு தான் போஜனம் செய்யவேண்டியது. இவ்விதமாய் செய்பவர்களுக்கு அஸாத்தியமான விஷயம் ஒன்றும் கிடையாது. மேலும் இவ்விரதம் செய்யும் ஸ்திரீகளுக்கு, தௌர்ப்யாக்கியம், வைதவ்வியம் முதலிய பலவித துன்பங்கள் வராமல் நீங்குவதுமன்றி, இருபத்தெட்டுக்கோடி ஏகாதசி உபவாஸம் செய்த புண்ணியபலன்களுண்டாகும். ஆகையால், இந்த விரதம் விதிப்படி கல்பத்தில் சொன்னபிரகாரம் செய்கிறவர்களின் மகிமையால், வீணை, வேணு, ம்ருதங்க, வாத்ய விசேஷங்களால் கூடிய தேவவிமானங்களிலேறி, கருடவாஹனத்தீசனை ஸ்ரீமஹாவிஷ்ணுவின் திருவடிகளைச்சேருவார்கள். ஆகையால் ஸூர்யனைக்கண்ட இருட்டு விலகுவதுபோலும், வருணப்பகவானால் பஞ்சம் நீங்குவதுபோலும், கசடற்ற கல்வியினால் மதிவிளங்குவதுபோலும், ஆதவனைக் கண்ட பனிபறந்தோடுவதுபோலும் இந்த க்ருஷ்ணஜயந்தீ விரதமானது, பாபமென்கிற கூட்டத்தை விலகிபோகச் செய்யும். க்ருஷ்ண ஜன்மாஷ்டமீ விரதம் செய்யாதவன், பஞ்சமாபாபங்களுக்காளாவான் க்ரஹண புண்ணியகாலத்தில், கோதான, கஜதானம் முதலிய தானங்கள் செய்தபோதிலும், இவ்விரதம்செய்யாவிடில் பிரயோஜனம் கிடை

யாது. ஆகையால், ஓநாரதரே! நீர் இவ்விரதம்,அனுசரித்து செய்யுமென்று சத்தியமாய்ச் சொல்லுகிறேன். முன்னே ஹரிச்சந்திரன் செய்து, அநேக சித்திகளடைந்தார். கங்கா நதிகள்கூட இந்த விரதத்திற்கு ஸமானமாகாது. இவ்விரதம்,த்தர்ம, அர்த்த, காம, மோக்ஷங்கள் முதலியன கொடுக்கத்தக்கது. இந்த விரதகதை எழுதி யார் வீட்டில் பூஜை செய்யப்படுகிறதோ அவர்கள் நாராயணன் சன்னிதியை அடைவார்கள். இந்த விரததினத்தில் ப்பகவானை ஆராதிப்பார்களேயாகில் அவ்விடத்தில், ஸர்வதேவஸமேதராய், ஸர்வேஸ்வரன் ப்ரஸன்னமாவார். சக்திக்குத் தக்கபடி இவ்விரதம் செய்பவர்கள், ஸகல மாணபாபங்களினின்றும் விலக்கப்படுவார்கள். அன்றியும் வேதாத்யான ப்பலங்களை அடைந்து மிக பரிசுத்தமாய் புருஷோத்தமன் பாதாரவிந்தங்களில் சேருவார்கள். இவ்விரதம் செய்வதால், ஆயிரகோதானப்பலனும், அநேகமான சுவர்னதானப்பலனும் அடைவார்கள். இவ்வண்ணம் இவ்விரதம்செய்து, வஸ்திராலங்கார பூஷண தாம்பூலாதிகளால், பிரதிமாதனம் செய்யவேண்டியது. இப்படி தான்செய்தால், இவ்வுலகில் புத்திரமித்திராதி ஸகலஸௌக்கியங்களையும் அனுபவித்து, முடிவில் ஸ்ரீமதனந்தன் பாதாரவிந்த சமீபத்தில் சேருவார்கள் என்றுசொன்ன பிரம்ஹதேவன் வார்த்தைகளைக் கேட்டு நாரதர் மிக ஆனந்தத்தோடு சந்தோஷபரவசமடைந்தார்.

இதி ஸ்ரீப்ரம்ஹாண்டபுராணே ப்ரம்ஹ நாரதஸம்வாதே, ஸ்ரீக்ருஷ்ணஜயந்தீவ்ரத கதாவித்தானம் ஸம்பூர்னம்.

ஸர்வம் ஸ்ரீக்ருஷ்ணார்ப்பணமஸ்து.

# கிருஷ்ணஜயந்தி தினமகிமை.

ஸ்ரீ க்ருஷ்ணஜயந்தி விரதத்தை அநுஷ்டித்து செய்ய வேண்டியது ஆவணிமாஸம் க்ருஷ்ணபக்ஷ அஷ்டமிதிதி ரோகிணி நக்ஷத்திரம் கூடியதினத்தில் நடத்துவது முக்கியம். அந்த க்ருஷ்ணாவதாரமென்பது: இருபத்தெட்டாவது சதுர்யுகத்திலுள்ள துவாபர யுகத்தில், பரமாத்மாவாகிய ஸ்ரீ மஹாவிஷ்ணுவே வடமதுராநகரத்தில் தேவகீ தேவிக்கி புத்திரனாக அவதாரம்செய்தார். இதை "கோகுலாஷ்டமி" என்றும் ஆவணிமாத க்ருஷ்ணபக்ஷ அஷ்டமிக்கே பெயர் வழங்குகிறதுண்டு ஸ்ரீ க்ருஷ்ணாவதார தினத்தில் ப்பகவானை பூஜித்தபேர்களுக்கு தெரிந்து தெரியாமல் செய்த பாவங்கள் விலகிப்போம். இவ்விரதம் அநுஷ்டித்தால் த்தர்ம, அர்த, காம மோக்ஷமென்னும் நான்குவித புருஷார்த்தங்கள் கைகூடி வரும். அநேக காராம்பசுக்கள் தானம் செய்தப்பலன் இக்கிருஷ்ணஜயந்தி விரதத்தினால் உண்டாகும். எவர்கள் இவ்விரதத்தை பக்தியோடு செய்கிறார்களோ அவர்களுக்கு லக்ஷ்மீகடாக்ஷத்தை இடைவிடாமல் வெகுகாலம் அநுபவிப்பார்கள். ஆகையால் ப்ரம்ஹ-க்ஷத்திரிய - வைஸ்ய - சூத்திராதிகள் எல்லோரும் அநுஷ்டித்துசெய்தால் நன்மையுண்டு. சிவ, விஷ்ணுபக்தர்களும், பாசுபதமதத்திலேயே இருப்பவர்களும், ஸ்திரீகளும், அவசியம் அநுஷ்டித்து செய்யவேண்டும். அனேக தேசங்களை ஆளும்படியானவர்களும், இந்தவிரதம் அநுஷ்டித்து செய்யலாமென்று பார்வதிக்கு பரமேஸ்வரன் உபதேசித்தார். ஸ்ரீ க்ருஷ்ணப்பகவானுடைய க்ருபைக்கு ப்பாத்திரர்களாகும் பொருட்டு அநேக இராஜாக்களும், ஞானிகளும், முனிவர்களும், ப்ராம்ஹணர்களும், இந்த விரதத்தை அநுஷ்டித்து மிகமேன்மைகளையும், இஷ்டாலாபங்களையும் அடைந்தார்கள்.

## ஸ்ரீ க்ருஷ்ணவதார காரணம்.

ப்பகவான் ஸ்ரீமன் நாராயணமூர்த்தியே, தேவர்களின் வேண்டுகோளால் பூமியில் த்தர்மத்தை நிலைநிறுத்தவும், அன்பர்களுக்கு கருணை செய்யவும், துஷ்டர்களை ஸம்ஹரித்து சிஷ்டர்களை பரிபாலனம் செய்யவும், பூமிப்பாரத்தைக் குறைத்து லோகங்களை ரக்ஷிக்கவும், ஸ்ரீ க்ருஷ்ணனாக அவதரித்தார். ஏகரூபியான ஈஸ்வரனே தன் சக்தியை மூன்றுவிதமாகச் செய்து, சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரங்கள் நடத்தும்படியான த்ரிமூர்த்யாத்மகமான மூன்று ரூபங்களை எடுத்து ஜீவாத்மாக்களை சிருஷ்டிக்கவும், ரக்ஷிக்கவும், ஸம்ஹரிக்கவும், ப்ரம்ஹா, விஷ்ணு, மஹேஸ்வரர்களாக அவதரித்தார். பரமாத்மா இவ்விதமாய் ப்ராணிகளை ஆட்டிவைக்கிறார் என்கிற அனுமான ப்ரமாணத்தை உலகத்தாருக்கு ப்ரத்தியக்ஷமாய் அறிவிக்கும்படி ஸ்ரீக்ருஷ்ணவதாரம் எடுத்தார். சக்திக்குத்தக்க பக்தி என்பதை தெரிவிக்க, பூர்ண பக்திமான்கள் மோக்ஷத்தையும், குறைந்தபக்திமான்கள் தாழ்ந்த பதவியையும், ப்பகவான் கிருபையினால் அடைகிறார்கள். இவைகளை உலகத்தார் அறிய வேண்டி இந்த கலிகாவதாரம் எடுத்துக்காட்டினார். அந்தச் சமயம் தேவர்களையும, பூமியில் அவதரிக்கும்படி கட்டளையிட்டு, தானும் பூமியில் வாசம்செய்ய நினைத்தார்.

## ஸ்ரீ க்ருஷ்ணன் பெருமை.

இவரே முற்காலத்தில் அசுரர்களைக் கொன்றார். இவரே தேவாதி தேவராயிருந்தார். ப்ராணிகளை யுண்டாக்கி, அவர்களுக்கு மங்களம் கொடுப்பதிவரே. உலகத்தை காப்பதுமிவரே. தர்மம் குறைந்தபோது தானே தர்மத்திலிருந்து மேலும் கீழுமான உலகங்களைக் காப்பாற்றி, கார்யகாரணமான நித்திய ஆத்மாக்களையும் காப்

யாற்றுகிறார். ப்பூத, ப்பவிஷ்யத் வர்த்தமானங்களையும் அறிந்தவர் இவரே. யாகங்களில் அஸ்த்ர சஸ்த்ர மந்திரங்களைச்சொல்லி துதிப்பதும் இவரையேதான். சதுர்வேதத்திலும், இரதந்தராதி ஸாமவேதங்களிலும் இவரையே துதிக்கின்றனர் இவர்தான் ப்ரளயகாலத்தில் ப்ரம்ஹ குகை என்னும் மூலப்ரக்ருதியில் ப்ரவேசித்தார். பூமியின் ஸ்ருஷ்டியும் கடலினின்று பூமியை உத்தரித்த ஆதிமூலமிவரே. இவராலேயே ப்பூமியை மூன்றடியாய் அளந்து ஜெயிக்கப்பட்டது. காண்டவவனத்தை எரித்தவரிவரே. அர்ஜுனனுக்கு வெண்குதிரை தந்தவரிவரே. இவரையே லோகாராட்டிய ரென்றும், அந்தர்யாமி எனவும் உபனிஷத்தில் (வாஸுதேவ ஸ்வாமி) என்கிற வாஸுதேவரென்றும் ஜீவாத்மாக்களுக்கு அதிஷ்டான தேவதையாயிருப்பதால் ஸங்கர்ஷணரென்றும "த்யும் நம" என்னும் தனம் போன்ற சுகத்தை தருவதால் ப்ரத்யும்னரென்றும, தடையை நீக்கி ப்ரவர்த்தியை உண்டாக்குவதால், நான்காவதான அனிருத்தரென்றும் சொல்லப்படுகின்றார். இவருக்கு மேல் ஒன்றுமில்லை. இவருக்கே இந்தியாவில் பல இடங்களில் ஸ்தலங்களிருந்தாலும், சென்னையில் சமுத்திரககரையில் திருவல்லிக்கேணியில் ஏற்பட்டிருக்கும், ஸ்ரீபார்த்தஸாரதிகோயில் விசேஷமா யிருக்கிறது. ஆகையால் ஸ்ரீ க்ருஷ்ணப்பகவானைக் குறித்து சொல்லவேண்டியது அளவற்ற விஷயங்களுண்டு. ஆதிஸேஷனுக்கே இவரைப்பற்றி சொல்லமுடியாதென்பார்கள். உலகத்தில் பரிசுத்தமான சூரியன் சந்திரன் முதலிய சுடர்களும், பூவுலகங்களும் அவற்றின் அதிபதிகளும், மூவரும் த்ரேதாக்னிகளும், (ப்ராண, அபான, வ்யான, உதான, ஸமானாதி) ஐந்து ஆகுதிகளும் எல்லாமிவரே.

ஸர்வம ஸ்ரீக்ருஷ்ணார்பணமஸ்து.

ஸ்ரீஸாம்பசிவாய நம:

ஸ்ரீரஸ்து

# கேதாரேஸ்வர விரதகல்பம்.



ஏவங்குண விசேஷண விசிஸ்டாயாம் அஸ்யாம் சுப்ப திதௌ (பெண்கள் மமபர்தாஸஹ என்றும், புருஷாள அஸ்மாகம் ஸஹகுடும்பாநாம் என்றும் சொல்லவேண்டியது.) மமக்ஷேமஸ்தைர்ய விஜய ஆயுராரோக்ய ஐஸ்வர்யாப்பி விருத்யர்த்தம் த்தாமார்த்த காமமோக்ஷ சதுர்வித்த ப்பலபுருஷார்த்த ஸித்தயர்ததம ஸத்ஸந்தான ஸகல சௌப்பாக்ய சுப்பப்பலாவாப்த்யர்த்தம இஷ்டகாமயார்த்த ஸித்யர்த்தம் வருஷே வருஷே ப்ரயுக்த ஸ்ரீகேதாரேஸ்வர தேவதாமுத்திஸ்ய கேதாரே ஸ்வரதேவதா ப்ரீத்யர்த்தம் கல்போக்தப்ரகாரேண யாவச்சக்தி த்யாநாவாஹநாதி ஷோடசோபசார பூஜாஞ்சகரிஷ்யே (நம:) ததங்கத்வேக கலசபூஜாஞ்சகரிஷ்யே (நம:) ததாதௌ கணபதிபூஜாங்கரிஷ்யே (நம:) (கலசபூஜையும் கணபதிபூஜையும் செய்து பிரகு கேதாரேஸ்வரபூஜை ஆரம்பிக்கவேண்டியது. கலசம் அலங்கரித்து வைத்து கலசத்துக்கு பக்கத்தில் அமிக்குழவிக்கும் மஞ்சள் குங்குவம் சந்தனம் அக்ஷதையுடன் அலங்கரித்து பிரகுப்ராணப்ரதிஷ்டையும் லகுபூஜையும் நடத்தினவுடனே தூபதீபமும் ஒருபழத்தை நிவேதனமும்செய்து கற்பூர தீபாராதனை செய்து அதன்பிறகு கேதாரேஸ்வரபூஜை ஆரம்பிக்கவேண்டியது. ப்ராணப்ரதிஷ்டை விநாயக விரதத்திலேயே எழுதியபடி மந்திரங்கள் சொல்லி சுவாமியின் பேர்மாத்திரம் மாற்றிசொல்லி பூஜைக்கி ஆரம்பம் செய்யவேண்டியது.) த்யானஸ்லோகம். சூலம் டமரு

கம்சைவ ததானம்ஹஸ்தயுக்மகே கேதாரதேவமீசானம் த்யாயே த்திரிபுரக்காதினம். கேதாரேஸ்வரஸ்வாமிநே நமஃ த்யாயாமி. "சு" கைலாஸசிக்கரே ரம்யே பார்வத்யாஸஹி தப்ரப்போ ஆகச்சதேவதேவேச மத்ப்பக்த்யாம் சந்தர சேக்கர. கேதாரேஸ்வ ரஸ்வாமிநேநமஃ ஆவாஹயாமி, 'சு' ஸூரராஸுரசிரோரத்ந ப்ரதீபிதபதாம்புஜ கேதாரதேவமத் தத்த ஆஸனம்ப்ரதிக்ருஹ்யதாம் கேதாரேஸ்வர ஸ்....நமஃ ஆஸனம் ஸ....மி. "சு" கங்காத்தர நமஸ்தேஸ்து த்ரிலோ சன வ்ருஷத்தவஜ மௌக்திகாஸன ஸம்ஸ்தாப்ய கேதா ராய நமோநமஃ கேதா....ஸ்வாமியே நமஃ பாதயோஃ பாத் யம் ஸ....மி. "சு" அர்க்யம் க்ருஹாணப்பகவன் ப்பக்த்யா தத்தம் மஹேஸ்வர, பரயச்சமே மனஸ்துஷ்டிம் ப்பக்தா நாமிஷ்டதாயக. கேதா....நமஃ அர்க்யம் ஸ....மி "சு" முநிப் பிர்நாரதப்ரக்யே நித்யமாக்யாத வைப்பவம், கேதாரதேவப் பகவன் க்ருஹாணசமநம்ப்ர்ப்போ. கேதா....நமஃ ஆசம நீயம் ஸ....மி. கேதாரதேவப்பகவன் ஸர்வலோகேஸ்வர ப்ரப்போ, மத்துபர்க்கம் ப்ரதாஸ்யாமி க்ருஹாணத்வம் சுப் பேனவை கேதா....ஸ...நமஃ மத்துபர்கம் ஸ....மி. "சு" ஸ்நாநம் பஞ்சாம்ருதம்தேவ சீதசுத்தோகைரபி, க்ரு ஹாண கௌரீரமண த்வத்ப்பக்தேன மயார்பிதம். கேதா ஸ்வா....நமஃ பஞ்சாம்ருதஸ்நாநமம் ஸ....மி. நதீஜலஸமா யுக்தம் மயாதத்தமனுத்தமம், ஸ்நாநம்ஸ்வீகுருதேவேச ஸதாசிவ நமோஸ்துதே. கே....ஸ....நமஃ சுத்தோதகஸ்நா நம் ஸ....மி. "சு" வஸ்த்ரயுக்மம் ஸதாசுப்பரம் மனோஹர மிதம் சுப்பம் ததாமிதேவதேவேச ப்பக்த்யேதம் ப்ரதிக்ரு ஹ்யதாம். கேதா....ஸ....நமஃ, வஸ்த்ரயுக்மம் ஸ....மி. "சு' ஸ்வர்ண எக்ஞோபவீதஞ்ச காஞ்சனம்சோத்தரீயகம். ருத் ராக்ஷமாலயாயுக்தம் ததாமிஸ்வீகருப்ரப்போ. கேதா....

ஸ....நமஃ எக்ஞோபவீதம் ஸ....மி. "சு" ஸமஸ்த கந்தத்ரவ்யாணும் தேவத்வமவிஜன்மப்பூஃ, ப்பக்த்யாஸமர்ப்பிதம் ப்ரீத்யா மயாகந்த்தாதிக்ருஹ்யதாம். கேதா....நமஃ ஸ்ரீகந்தான் ஸ....மி. "சு" அக்ஷதோ விதவப்பாவேந ப்பக்தாநாம் அக்ஷதம் பதம், ததாவிநாத்த மத்தத்தைஃ அக்ஷதைஃ ப்ரியதாப்பவான். கேதா....நமஃ அக்ஷதான் ஸ....மி. "சு" கல்பவ்ருக்ஷ ப்ரஸூனைஸ்தவம் பூர்வைரப்பயர்சித ஸ்ஸூநைஃ குங்குமைஃ பார்த்திவைரேப்பி ரிதாநீமர்ச்தாம்மயா. கேதா....ஸ....நமஃ புஷ்பாணி பூஜயாமி. ததஃ இந்திராதி அஷ்டதிக்பாலபூஜாம் குர்யாத். இந்த்ராயநமஃ அக்னயே நமஃ எமாய நமஃ நிருருதயே நமஃ வருணாயநமஃ வாயவேநமஃ குபேராயநமஃ ஈகாநாயநமஃ சிவஸ்யதக்ஷிணப்பாகே ப்ரம்ஹணேநமஃ, உத்தரப்பாகே விஷ்ணவேநமஃ, மத்யே கேதாரேஸ்வராய நமஃ.

## அத்தாங்க பூஜா.

| | |
|---|---|
| மஹேஸ்வராய நமஃ | பாதௌ பூஜயாமி. |
| ஈஸ்வராய | ஜங்கே பூ—மி |
| காமரூபாய | ஜாநுநீ பூ—மி |
| ஊராய | ஊரூ பூ—மி |
| த்ரிபுராந்தகாய | குஹ்யம் பூ—மி |
| ப்பவாய | கடிம் பூ—மி |
| கங்காத்தராய | நாப்பிம் பூ—மி |
| மஹாதேவாய | உதரம் பூ—மி |
| பசுபதயே | ஹ்ருதயம் பூ—மி |
| பிநாகிநே | ஹஸ்தான் பூ—மி |
| சிவாய | ப்புஜௌ பூ—மி |
| சிதிகண்ட்டாய | கண்ட்டம பூ—மி |
| விரூபாக்ஷாய | முக்கம் பூ—மி |

த்ரிணேத்ராய நேத்ராணி பூ—மி
ருத்ராய லலாடம் பூ—மி
சர்வாய சிர: பூ—மி
சந்த்ரமௌளயே மௌளிம் பூ—மி
பசுபதயே ஸர்வாண்யங்காணி பூ—மி.

சிவாஷ்டோத்ர சதநாமபூஜை செய்யவேண்டியது.

---

ஒவ்வொரு நாமத்திற்கும் முதலில் (ஓம்) எனவும் கடைசியில் (நம:) சேர்த்துக்கொண்டு பூஜை செய்யவேண்டியது.

ஓம் சிவாய நம:
மஹேஸ்வராய
சம்ப்பவே
பிநாகிநே
சசிசேக்கராய
வாமதேவாய
விரூபாக்ஷாய
கபர்திநே
நீலலோஹிதாய
சங்கராய (10)
சூலபாணயே
க்கட்வாங்கிநே
விஷ்ணுவல்லப்பாய
சிபிவிஷ்டாய
அம்பிகாநாத்தாய
ஸ்ரீ கண்ட்டாய
ப்பக்தவத்ஸலாய
ப்பவாய
சர்வாய
த்ரிலோகேசாய (20)
சிதிகண்ட்டாய
சிவாப்ரியாய
உக்ராய
கபர்திநே
காமாரயே
அந்த்தகாஸுரஸூதநாய
கங்காத்தராய
லலாடாக்ஷாய
காலகாலாய
க்ருபாநித்தயே (30)
ப்பீமாய
பரசுஹஸ்தாய
ம்ருகபாணயே
ஜட்டாத்தராய
கைலாஸவாஸிநே
கவசிநே
காடோராய
த்ரிபுராந்தகாய
வ்ருஷாங்காய
வ்ருஷபாரூட்டாய (40)
ப்பஸ்மோத்தூளித விக்ரஹாய
ஸாமப்ரியாய
ஸ்வரமயாய
த்ரயீமூர்த்தயே
அநீஸ்வராய
ஸர்வக்ஞாய

பரமாத்மநே
ஸோமஸூர்யாக்னிலோச
னாய) ஹவிஷே
எக்ஞமயாய (50)
சோமாய
பஞ்சவக்த்ராய
ஸதாசிவாய
விஸ்வேஸ்வராய
வீரப்பத்ராய
கணநாத்தாய
ப்ரஜாபதயே
ஹிரண்யரேதஸே
துர்த்தர்ஷாய
கிரீசாய (60)
கிரிசாய
அநக்காய
ப்புஜங்கப்பூஷணாய
ப்பர்காய
கிரித்தன்விநே
கிரிப்ரியாய
க்ருத்திவாஸஸே
புராராதயே
ப்பகவதே
ப்ரமத்தாத்திபாய (70)
ம்ருத்யுஞ்ஜயாய
ஸூக்ஷ்மதநவே
ஜகத்வ்யாபிநே
ஜகத்குரவே
வ்யோமகேசாய
மஹாஸேநஜனகாய
சாருவிக்ரமாய

ருத்ராய
ப்பூதபதயே
ஸ்தாணவே (80)
அஹிர்புத்நியாய
திகம்பராய
அஷ்டமூர்த்தயே
அநேகாத்மநே
ஸாத்விகாய
சுத்தவிக்ரஹாய
சாஸ்வதாய
க்கண்டபரசவே
அஜாய
பாசவிமோசகாய (90)
ம்ருடாய
பசுபதயே
தேவாய
மஹாதேவாய
அவ்யயாய
ஹரயே
ப்பகநேத்ரப்பிதே
அவ்யக்தாய
தக்ஷாத்வரஹராய
ஹராய (100)
பூஷதந்தப்பிதே
அவ்யக்ராய
ஸஹஸ்ராக்ஷாய
ஸஹஸ்ரபதே
அபவர்கப்ரதாய
அனந்தாய
தாரகாய
பரமேஸ்வராய (108)

ஸ்ரீ கேதாரேஸ்வர ஸ்வாமிநே நமஃ
சிவாஷ்டோத்தர சதநாமபூஜாம் ஸமர்ப்பயாமி.

## நோன்புக்கயற்களை வைத்து ஸூத்ரக்ரந்தி பூஜை செய்கிறது.

| | | | |
|---|---|---|---|
| சிவாய நமஃ | ப்ரத்தமக்ரந்திம் | | பூஜயாமி. |
| சாந்தாய | த்விதீய | ,, | பூ—மி |
| மஹாதேவாய | த்ருதீய | ,, | பூ—மி |
| வ்ருஷப்பத்வஜாய | சதுர்த்த | ,, | பூ—மி |
| கௌரீசாய | பஞ்சம | ,, | பூ—மி |
| ருத்தராய | ஷஷ்ட | ,, | பூ—மி |
| பசுபதயே | சப்தம | ,, | பூ—மி |
| பமீமாய | அஷ்டம | ,, | பூ—மி |
| த்ரியம்பகாய | நவம | ,, | பூ—மி |
| நீலலோஹிதாய | தசம | ,, | பூ—மி |
| ஹராய | ஏகாதச | ,, | பூ—மி |
| ஸ்மரஹராய | த்வாதச | ,, | பூ—மி |
| ப்ரர்காய | த்ரயோதச | ,, | பூ—மி |
| சம்ப்பவே | சதுர்தச | ,, | பூ—மி |
| சர்வாய | பஞ்சத | ,, | பூ—மி |
| ஸதாசிவாய | ஷோடச | ,, | பூ—மி |
| ஈஸ்வராய | சப்ததச | ,, | பூ—மி |
| உக்ராய | அஷ்டாதச | ,, | பூ—மி |
| ஸ்ரீகண்டாய | ஏகோநவிம்சதி | | பூ—மி |
| நீலகண்ட்டாய | விம்சதி | ,, | பூ—மி |
| ம்ருத்யுஞ்ஜயாய | ஏகவிம்சதி | ,, | பூ—மி |

## த்தூபதீபநைவேத்திங்கள் செய்கிறது.

ரு. தசாங்கம் த்தூபமுக்யஞ்ச ஹ்யங்கார விநிவேசிதம், த்தூபம் ஸுகந்தை ருத்பன்னம் த்வம்ப்ரீணயதுசங்கர|| கேதாரேஸ்வர ஸ்வாமிநே நமஃ த்தூப மாக்கராபயாமி.

சு. யோகிநாம் ஹ்ருதயேனைவ ஞானதீபாங் குரோத்விஷே, பாஹ்யதீபோ மயாதத்தோ க்ருஹ்யதாம் ப்பக்த கௌரவாத் || கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: தீபம் தர்சயாமி.

சு. த்ரைலோக்யமபி நைவேத்யம் ததேத்ருப்தி ஸதா பஹி: நைவேத்யம் ப்பக்தவாத்ஸல்யாத் க்ருஹ்யதாம் த்ரியம்பகத்வயா || கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: நாநாவித்த ப்பலானி பக்ஷயப்போஜ்ய நிவேதனம் நிவேதயாமி.

சு. நித்யாநந்த ஸ்வரூபஸ்தவம் யோகிஹ்ருத் கமலேஸ்திதம், க்ருஹாண ப்பக்த்யா மத்தத்தம் தாம்பூலம் ப்ரதிக்ருஹ்யதாம் கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: தாம்பூலம் ஸமர்ப்பயாமி

சு. அர்க்யம் க்ருஹாண ப்பகவன் ப்பக்த்யாதத்தம் மஹேஸ்வர, ப்ரயச்சமே மனஸ்துஷ்டிம் ப்பக்தாநாமிஷ்டதாயக. கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: புநரர்க்யம் ஸமர்ப்பயாமி.

சு. கர்ப்பூர சந்தரஸம்காசம் ஜ்யோதி ஸ்ஸூர்ய மிவோதிதம், ப்பக்த்யா தாஸ்யாமி கர்ப்பூரம் நீராஜந மிதம்சிவ. கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: கர்ப்பூரநீராஜனம் தர்சயாமி.

சு. ப்பூதேச பபுவநாதீச ஸர்வதேவாதி பூஜித, ப்ரதக்ஷிணம் கரோமித்வாம் வ்ரதம்மே ஸப்பலம்குரு கேதாரேஸ்வர ஸ்வாமிநே நம: ப்ரதக்ஷிணம் ஸமர்ப்பயாமி.

சு. ஹரசம்ப்போ மஹாதேவ விஸ்வேசாமர வல்லப சிவசங்கர ஸர்வாத்மன் நீலகண்ட்ட நமோஸ்துதே.

சு. சாந்தம் பத்மாஸநஸ்தம் செசித்தரமகுடம் பஞ்சவக்த்ரம் த்ரிணேத்ரம், சூலம்வஜ்ரஞ்ச க்கட்கம் பரசுமப்பயதம், தக்ஷப்பாகே வஹந்தம் நாகம்பாசஞ்ச க்கண்

டாம் ப்ரளய ஹூதவஹம் பார்வதீசம்நமாமி. கேதாரேஸ்வர ஸ்வாமிநே நமஃ நமஸ்காரான் ஸமர்ப்பயாமி.

ஃ. அப்பீஷ்டஸித்திம் குருமே, சிவாவ்யய மஹேஸ்வர ப்பக்தாநாம் இஷ்டதாநார்த்தம், மூர்த்திக்ருதகளேபரம் இதிப்ரார்த்தன. கேதார தேவதேவேச ப்பகவன் அம்பிகாபதே, ஏகவிம்சத் திநேதஸ்மின் ஸூத்ரம் க்ருண்ஹாம்யஹம்ப்ரப்போ || ஸூத்ரக்ரஹணம் || நோன்பு தோரம் எடுத்துக்கொள்ளுகிறது.

அடியில்வருகிற மந்த்ர ஸ்லோகத்தால் நோன்புக்கயர் கட்டிக்கொள்ளுகிறது. அந்த தோரம் கட்டிக்கொள்பவர் புரோஹிதரிடங் கொடுத்து அக்ஷதையோடு ஆசீர்வாதம் பெற்றுக்கொண்டு அல்லது பெரியோர்களின் ஆசீர்வதத்துடன் வாங்கிக்கொண்டு பழமாவது தேங்காய்முடியாவது கையில் வைத்துக்கொண்டு கட்டிக்கொள்ள வேண்டியது. ஒவ்வொரு நோன்பிலும் இப்படி செய்வது நலம்.

ஃ. ஆயுஸ்ச வித்யாஞ்ச தத்தா ஸூக்கஞ்ச ஸௌப்பாக்யவ்ருத்திம் குருதேவதேவ, ஸம்ஸார க்கோராம்புநித்தௌ நிமக்னம் மாம்ரக்ஷ கேதார நமோநமஸ்தே. தோரபந்த்தனம்.

ஃ. கேதார ப்ரதிக்ருண்ஹாது கேதாரோவை ததாதிச கேதாரஸ்தாரகோ பாப்யாம் கேதாராய நமோநமஃ உபாயநதானம்

ஃ. கேதரப்ரதிமா யஸ்மாத், ராஜ்ய ஸௌப்பாக்ய வர்த்தநீ, தஸ்மாதஸ்ய ப்ரதாநேந மமாஸதுஸ்ரீ ரசஞ்சலா. இது ப்ரதிமைதானம் கொடுக்கிர மந்த்ரம்.

பூஜாவித்தி பூர்த்தியாயிற்று.

கதையைக் கேழ்க்கிறவர்கள் கையில் அக்ஷதையுடன் கேட்டு கடைசியில் அந்த அக்ஷதயை ஸ்வாமிமேல்போட்டு சேவிக்கவேண்டியது.

# கேதாரவிரத கதை.

ஸ்ரீஸூதபுராணிகர் நைமிசாரண்ய வாஸிகளாகிய, சௌநகாதி மஹாரிஷிகளைநோக்கி, அடியிற்கண்ட விதம் சொல்லத்தொடங்கினார். ஓ இருஷிசிரேஷ்டர்களே உங்களுக்கு அனேகபுரா ணேதிஹாஸகதைகள் சொன்னேன். இன்னமொரு கதை சொல்லுகிரேன் கேளுங்கள். இந்த சராசராத்மகமான ப்ரபஞ்ச கர்த்தாவாகிய, அந்த உமா மஹேஸ்வரரைக்குறித்து நமஸ்கரித்து ஸகல கல்யாண குணங்களுக்கும் காரணப்பூதமாகிய கேதாரவ்ரதமஹாத்துவத்தை எடுத்துச்சொல்லுகிறேன் கேளுங்கள்.

உலகத்தில் மனுஷ்ய கோடிகளுக்கு சகலமான ஐஸ்வர்யத்தை கொடுக்கக்கூடியதும் அதன் மூலமாய் இஹபர ஸுகங்களை அடையக்கூடியதுமான லோகமாதாவாகிய உமயபார்வதியால் அனுஷ்டித்துச்செய்து சங்கரதேஹார்த்தமெனும் பரமசிவானுக்ரஹத்தால், அர்த்தநாரீஸ்வரி என்று பேர்பெற்றதான கேதாரீஸ்வர விரதமென ஒன்றுண்டு. அவ்விரதமாசரிக்கும் விதியை விவரித்துரைக்கும்படியாய் கேட்டுக்கொண்டபடியால் உங்களுக்கு விவரித்து சொல்லுகிறேன் கேளுங்கள்.

இந்த விரதத்தை (21) இருபத்தோருதடவை செய்யும் புண்ணியவான்களுக்கு இம்மையில் ஐஸ்வர்ய சுகமடைந்து மருமையில் சிவஸாயுஜ்யம் அடைவார்கள் என்பது திண்ணம். ஆகையால் இதை ப்ராம்ஹணாதி நாலுவர்னஸ்தர்களும் செய்யலாம்.

"ஓ முனிவர்களே" ப்பூலோகத்தில், ஈசான்யப்பாகத்தில் மின்னர்கொடிக் கூட்டங்களால் நிரைந்ததும் சரத்

காலமேகங்களுக் கொப்பாகியதும் அனேக நவரத்னமணி மயமான கோபுரசிக்கரங்களாலும் பல்வித உத்யான வனங்களாலும், அதில் புஷ்பப்பலாதி விசேஷங்களாலும் பசுபக்ஷி ம்ருகாதிகளாலும மலையருவிகளாலும் சூழப்பட்டும் தேவதா வ்ருக்ஷங்களாலும் ப்பலவ்ருக்ஷங்களாலும் மணமுள்ள புஷ்பச்செடிகளாலும கூடிப்ரகாசிக்கினற உத்யானவனங்களின் மத்தியில், விளங்கானின்றும், ஸர்வப்ராணிகளாலும் சேவித்து புகழ்ந்து பேசும்படியான மிகமங்களப்ரதமான கைலை என்று விளங்கும் ஒருபர்வத ஸ்ரேஷ்ட மொன்றுண்டு. அதில் மஹான்களும், யோகிகளும், சித்தாள், கின்னராள், கிம்புருஷாள், தேவ, கந்தர்வர்களால், ஸேவிக்கும்படியான, இப்பர்வசிகரத்தில், ஷட்குணைஸ்வர்யஸபன்னரான ஜகத்கர்த்தாவாகிய பரமேஸ்வரர் உமாஸமேதராய் ப்ரமத்த கணங்களாலும் இன்னும் இந்திராதி தேவர்களாலும் இருஷி முனிக்கூட்டங்களாலும் சூழப்பட்டு விளங்கும்படியான காலத்தில் பஞ்சப்பூதங்களாலும் சூர்யாதி நவக்ரஹங்களாலும் நக்ஷத்ரராசிகளாலும் வசிஷ்டாதி மஹர்ஷிகளாலும் ப்ராம்ஹி முதலியஸப்தமாத்ருகளாலும் கணபதியும், தேவஸேனாபதியும், அரம்பைமுதலிய தேவஸ்திரீகளும், சிவஸாயுஜ்யமடைந்திருக்கும் அனேக தேவருஷி கூட்டங்களாளும் சேவித்து பணிவிடைச் செய்கிரவர்களின் மத்தியில் ப்பவானீஸமேதராய் எழுந்தருளி இருக்கும்படியான பரமசிவன், தன்ப்பக்தகோடிகள் ஸுலபமாய் தங்களை தரிசிக்கும்பொருட்டு, ஒருதேவசபை ஏர்படுத்தி சிவபெருமான் உத்திரவின்படி நாரதாதி தேவகாயகர்களால் மனோக்யமாய் தேவவாத்திய விசேஷங்களால் கானம் நடத்தும்போது, க்ருதாசி மேனகை முதலியோர்கள் வீணாதி தாளவிசேஷங்களுடன் நான்குவித வாத்தியங்களோடும் நாட்டியம் செய்தார்கள். அப்போது நடந ஸ்திரீகளில்

மிகசௌந்தர்ய முள்ளவாளாகிய, எல்லாருடைய மனதைக் கவரக்கூடிய ரம்பையானவள், அநேகமான நாட்டிய விசேஷங்களை நடித்துக்காட்டினாள் உடனே பரமசிவ அந்தரங்கப்பக்தராகிய ப்ருங்கிமஹர்ஷியாகிய சிவயோகி சிவஸன்னிதானத்தில் தத்பரதி நித்தியாக, ப்பக்தியோடு விசித்ரமான விகடநாட்டியம செய்தார். அபபோது பரமசிவனுடைய இடது பார்சத்தில், பார்வதியும எழுந்தருளியிருந்தாள். எல்லாதேவர்களும் அந்தப்ருங்கியால் செய்யப்பட்ட நாட்யங்களுக்கு மிகசந்தோஷித்து நகைத்து மிக ஆச்சரியமடைந்தார்கள். அந்த ஆனந்தமயமான சிரிப்பினால் பர்வத குகைகள் நிரைந்து விஷேமான கலகலத்வனி யுண்டாச்சுது அப்போது பரமசிவத்திற்குஉண்டான மனக்களிப்பால்,அச்சிவப்பக்தனாகிய ப்ருங்கியைப்பார்த்து, உன்னால் நடத்திய நாட்டியவிசேஷத்தால் எனக்கு மிகசந்தோஷமுண்டாச்சுதென்று பரமசிவன்சொல்லி, அந்தப்பக்தரிடம் மிகக்ருபை உண்டாகி அனுக்கரஹம்செய்தார். அப்போது சபையிலுள்ள கவிவிபுத்தாள் முதலியவர்கள் அவரைமிக கௌரவப்படுத்தினார்கள். அம்மகரிஷி மிகப்பக்தியோடு அதிவணக்கதுடன் சந்தோஷமாய் பார்வதியைநீக்கி பரமசிவத்திற்கு மாத்திரம் வலம்சுத்திவந்து நமஸ்காரம்செய்தார். உடனே மிகபூஜ்ஜையான பார்வதீதேவி புன்சிரிப்போடு தன்பர்த்தாவாகிய பரமசிவத்தை கண்ணோக்கி பார்த்து, "ஓ ஸ்வாமீ" இந்தப்பக்தன் என்னைவிட்டு, தங்களுக்குமட்டும் நமஸ்கரித்தானே அதற்கு என்னகாரணமோ அந்த ஆச்சரியமான விஷயத்தை எனக்கு விவரித்துச்சொல்ல வேண்டுமென்று கேழ்க்க செந்தரசூடர் "ஒப்ரியே" சொல்லுகிறேன் கேள். சிவயோகிகளாகிய பரமார்த்தாபேக்ஷயை கோரினவர்கள் உன்னால் எவ்விதமான ப்ரயோஜனம கிடையாதென்கிற நிச்சய மனதுடன் என்னைமாத்திரம நமஸ்கரித்தாரென்று

பரமசிவன்சொல்ல உடனே பரமேஸ்வரி மிகவருத்தப் பட்டு தன்பர்தாவிடத்தில் கோபங்கொண்டு, அந்தபக்த ரிடத்திலுள்ள சக்தியை ஆகர்ஷணம் செய்துக்கொண்ட உடனே அப்பக்தன் சக்தியற்றவனாய் நின்றார். உடனே பரமேஸ்வரி தன்சக்தியால் ஆகர்ஷணம் செய்துக்கொண்டு ஓ இருஷியே என்கூறாகிய ரக்தமாம்ஸாதிகளை நீர்வைத் திருக்கலாகாது என்றாள். அதைக்கேட்ட பிருங்கிமாரிஷி தன் உடலிலிருந்த ரக்தமாம்ஸத்தை உதரிவிட்ட உடனே அசக்தராய் நிற்கமுடியாமல் தவிக்கையில் பரமசிவன் தன் ப்பக்தனுடைய துயரத்தையாற்ற ஓர் ஊன்றுகோலை அவர் கையில் தந்தார். உடனே பிருங்கிமாமுனிவர், பரமாநந்தத் தோடு அத்தண்டத்தை வூன்றிக்கொண்டு ஆனந்த பரவசத் தால் நர்த்தனம் செய்து தனதாஸ்ரமத்தை சேர்ந்தார். இதனால், பார்வதியானவள் மிககோபத்தினால் மனக்லேசத் துடன் வெட்கித்து கைலாயத்தை விட்டு பூலோகத்தை யடைந்து, மிக பயங்கரமான காட்டில் தவம்செய்ய புரப் பட்டு வருங்காலத்தில் கொடிய மிருகங்களாலும் ஸர்ப விசேஷங்களாலும், செடி கொடிகளாலும் நிறைந்திருக்கும் வனம் ப்ரவேசித்தாள். இவ்வித கடினமான வழியைக் கடந்துவரும் சமயத்தில் ஒரு முனிவரது ஆஸ்ரமத்திலுள்ள பூங்காவனத்தில் ப்ரவேசித்தாள். அந்த ஆஸ்ரமமானது கௌதமாஸ்ரமமென்று தெரிந்தது. அதையே சில க்ரந்தங் களில் (வால்மீகாஸ்ரமமென்றும் சொல்லியிருக்கிறது) அத் தேவியானவள் ஒருவ்ருக்ஷத்தடியில் எழுந்தருளியிருந்தாள். அந்த தேவியின் வருகையால் அப்பூங்காவனம் சிலவருட காலமாய் மழையில்லாமையால் அவ்விடத்திலுள்ளவ்ருக்ஷங் கள் செடிகள் கொடிகள் வாடியிருந்தது. அவையெல்லாம் துளிர்த்து, தழைத்து, பூத்துக்காய்த்து, பழுக்க ஆரம்பித் தது. மல்லிகை முல்லை, கொங்கு, இருவாட்சி, மந்தாரை,

பாரிஜாதம், சண்பகம், சிருமல்லிகை, புன்னை, பாதிரி, வில்வபத்திரி, துளசி முதலிய எல்லாஜாதி புஷ்பச்செடிகளும் தழைத்து விசேஷமாய் பூத்து, சுற்றிலும் ஒரு யோஜனைத்தூரம் வரையில் வாஸனை வீசிக்கொண்டிருந்தது. அச்சமயத்தில் கௌதம மஹரிஷி தன் ஆஸ்ரமத்தருகிலுள்ள கெங்காநதிக்குச்சென்று காலையில் ஸ்நாநாதி நித்யகருத்யங்களை முடித்துக்கொண்டு, அவ்வனத்திலுள்ள தற்பை, சமித்து, பத்ர, புஷ்பப்பலாதிகளை சேகரித்துக்கொண்டு கையில் தீர்த்தபாத்திரத்தோடு தன் ஆஸ்ரமத்தை நோக்கி சமீபத்தில் வருங்காலத்தில் செழித்து தழித்து, மிகப்ரகாசமாய் விளங்காநின்ற அந்த ஒளியைக்கண்டு இப்பூங்காவனத்தில் யாதோ ஒரு புதுமை உண்டாயிருக்கவேண்டுமென ஆலோசித்துக்கொண்டே ஸமீபத்தில் வருங்காலத்தில் இவ்விடத்தில் கைலாஸபதியோ, அல்லது திருமாலோ, பிரம்மனோ, பார்வதியோ, லக்ஷ்மியோ, தேவேந்திராதிகளோ இங்கு வந்திருக்க வேண்டும், இல்லாவிடில் இவ்வதிசயம் இங்கு நிகழ்வானேன் என்று வனமெல்லாம் சுற்றிப்பார்க்கையில் பார்வதீ தேவியார் ஒரு வில்வ விருக்ஷத்தடியில் எழுந்தருளி யிருந்ததைக் கண்டார். உடனே கௌதம ரிஷியானவர் உமாதேவியை ஸாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து, தாயே முப்பத்துமுக்கோடி தேவர்களுக்கும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளுக்கும் கைலையில் சேவைஸாதித்துக்கொண்டு உலகமாதாவா யிருக்கின்ற நீர் இப்பூங்காவனத்திற்கே எழுந்தருளியதால் நான் முன் என்னதவஞ்செய்தேனோ, ஹே பரமேஸ்வரியே! நீர் கைலாஸத்தைவிட்டு இவ்வனத்திற்கு வந்தகாரணத்தை அடியேனுக்கு திருவாய் மலர்ந்தருள வேண்டுமென்று கௌதம மஹர்ஷி விண்ணப்பம் செய்தார், மேலும் தாங்கள் பரமசிவனின்றி தனியாக வந்தகாரணமும் அறிவிக்கவேண்டுமென்று கேழ்க்க,

அந்த தேவியானவள் தன்னை வணங்கிக்கேட்ட அம்முனிவரைப்பார்த்து ஹே! முனிபுங்கவா! கைலாயத்தில் ஸாக்ஷாத் பரமேஸ்வரரும் நானும் நவரத்ன சிம்ஹாஸனத்தில் வீற்றிருக்கையில் ப்ரம்ஹ, விஷ்ணு, தேவேந்திராதிகளும் மற்றுமுள்ள தேவரும் இரிஷிகளும்வந்து எங்களிருவரையும் ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்துப்போக, இப்ருங்கிமஹரிஷி மாத்திரம், என்னை புரம்பாகநீக்கி, பரமேஸ்வரரைமாத்திரம் நமஸ்கரித்தார். அதினால் நான் கோபமடைந்து அந்த பிருங்கியின் சரீரத்திலுள்ள எனது கூராகிய ரக்தமாம்ஸாதிகளையும் என்னுடைய சக்தியால் வாங்கிக்கொண்டேன். உடனே மிக அசக்தராகிய அம்மாமுனிவருக்கு ஓர் தண்டத்தை அளித்து அவரை ரக்ஷித்தார். பரமேஸ்வரரும் இவ்விஷயத்தில் என்னை உபேக்ஷை செய்தபடியால் வியாகூலத்துடன் கைலையைவிட்டு காட்டில் தவசு புரிந்தாவது, அல்லது வ்ரதவிசேஷங்களாலாவது அர்த்தநாரீஸ்வரி என்கிறபேர் அடையாமல் கைலைக்கி போவதில்லையென்று சபதம் செய்துக்கொண்டு வந்து இப்பூங்காவனமடைந்தேன். என்று நடந்த வரலாறைசொல்லி அம்முனிவரை நமஸ்கரித்து "ஓ முனிவர்யா! யோகி சம்மதமான எந்த விரதத்தால் என் மனோபீஷ்டம் பலிசகுமோ அதை என் கையில் நடத்திவைக்க கோருகின்றேனென்றுசொன்ன பரமேஸ்வரியை கௌதமமுனிவர் பார்த்து மஹா சந்தோஷத்தை அடைந்து ஆனந்தவாரித் தன் கண்களினின்றும் பெருக, தான் பரமேஸ்வரியை ப்ரதக்ஷிண நமஷ்காரஞ் செய்து, தாயே! உமது பாததூளிக்குச் சமானமாகிய அடியேனுடைய ஆஸ்ரமத்திற்கு எழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பம் செய்துக்கொண்டார். அப்போது பார்வதீ தேவியும், அம்முனியின் வேண்டுகோளுக்கிசைந்து அந்த ரிஷ்யாஸ்ரமத்துக்கு செல்ல, அவர் அந்த அம்மாளை தர்ப்

யாஸன்த்தி லிருக்கச்செய்து தாயே! அபிராமி, த்ரிபுரசுந் தரி, சிவகாமி சௌந்தரி, கைலாஸவாஸினி, விப்பூதிருத்திராக்ஷ மாலிகாப்பரணி, க்ருபாஸமுத்ரி, க்ருபையானந்தி, வேதஸ்வரூபி, வேதாந்தநாயகி என்று ஸ்தோத்திரம் செய்து நான் சொல்வதை அங்கீகரித்து திருவருள் சாதித்தருள வேண்டுமென பாமேஸ்வரியும் அதற்கு சம்மதிக்க கௌதமர் சொன்னதாவது, தாயே இப்பூலோகத்தில் மிகவும் முக்கியமான வ்ரதமொன்றுண்டு அந்த வ்ரதத்திற்கு கேதாரீஸ்வரர் நோன்பென்று பெயர், இப்புண்ய வ்ரதத்தால் சங்கரசரீரார்த்தம அடையும்படியானதென்று சொல்ல, உமாதேவி இவ்விரதம் எப்பொழுது செய்கிறது. எந்த தேவதையை பூஜை செய்யவேண்டியதோ அவையலாம் எனக்குபதேசபூர்வமாய் அறிவிக்கவேண்டுமென்று கேழ்க்க, உடனே மஹரிஷியானவர் தான் அநேக புராணேதிஹாஸம் ஆராய்ச்சியுள்ளவராகையால் இவ்விரதத்தில் பரமேஸ்வரரைக் குறித்து பூஜைசெய்தால் அப்போதே அவர்களுக்கு ரிஷப்பவாஹனரூடராய் காட்சிதந்து தங்களால் விரும்பப்பட்ட வரங்களைத் தருவார். இந்நோன்பு புரட்டாசி மாதம் சுக்லபக்ஷம் தசமிதிதி முதல் அற்பிசி மாதம் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசி அல்லது அமாவாஸ்யை வரைக்கும் இருபத்தோருநாள் நடத்தவேண்டும். இவ்ரதத்தை பக்தியோடு அநுஷ்டித்து செய்கிறவர்களுக்கு பரமேஸ்வரர் வ்ருஷபவாஹனரூடராய் காட்சிதந்து கோரிய வரங்களை யளிப்பாராதலால் நீரும் அவ்விரதத்தை அநுஷ்டித்து அவர் ப்ரஸன்னமானவுடனே அவரது இடதுபாகத்தில் பிரியா விடையாக இருக்கவேண்டுமென்று கேட்பீராகில் உம்மை அர்த்தநாரியாக ஏற்படுத்திக்கொண்டு போவாரெனவே பார்வதி இந்நோன்பு எவ்விதமாய் நடத்த

வேண்டுமென்று கேழ்க்க, கௌதம மஹார்ஷியானவர் சொல்லத்தொடங்கினுர்.

"ஹே பார்வதி" கேதாரீஸ்வர ஸ்வாமியை ஒரு கல சத்தின்மீது ஆவாஹணம் செய்து ஒரு மண்டபம் ஏற் படுத்தி (21) இழை (21) முடியுமுள்ள நோன்புக்கயர் அல்லது (தோரம்) ஏற்படுத்திவைத்து ஷோடசோபசார பூஜைகள் 21-நாள் செய்துவர வேண்டியது என்று சொன் ஞர். பிறகு தன்வீட்டில் சுத்தமான ஓரிடத்தில் மெழுகிக் கோலங்களிட்டு தலைவாழை யிலையின்மீதுத்தான்யராசிக் கொட்டி அதின்மீது பூர்ணகும்பம்வைத்து கலசம் அலங்க ரித்து ப்ராணப்ரதிஷ்டாதிகள் நடத்தி சக்திக்குத்தக்கபடி கந்தபுஷ்பாக்ஷதைகளால் இருபத்தோரு ப்ராம்ஹணுளைத் தருவித்து அவர்களுக்கு அர்க்கியபாத்யாதிகள் கொடுத்து உசிதாஸனக்களில் வீற்றிருக்கசெய்து அவாளைக்கொண்டு அந்த கேதாரேஸ்வரரை ப்ரதிஷ்டை செய்து பூஜைக்கு வேண்டிய 21-தினுசு பத்ரபுஷ்பாதிகளாலும் பூஜித்து இரு பத்தோரு அதிரஸங்களையும், ஷட்ரஸோபேதமான அன் னத்துடன் அநேகவிதப் பலங்களுடனும் தூபதீபாதி நை வேத்தியம்செய்து தாம்பூலாதி உபசாரங்கள்செய்து, ஸ்வா மியை நன்ருக ஸ்தோத்திரம்செய்து பூஜை பூர்த்தியான வுடனே அந்த ப்ராம்ஹணுளையும் சந்தனபுஷ்ப தாம்பூல தக்ஷிணைகளால் த்ருப்தியாய் பூஜித்து ப்பகவானுக்கு களிப் புண்டாகச்செய்தால் பரமசிவன் சந்தோஷமடைந்து, தன் சரீரார்த்தத்தை கொடுப்பார் என்று கௌதமர் பார்வதிக் கிச் சொன்ஞர். அப்போது பார்வதியும் அவர் சொன்ன விதமே அவ்விரதம்செய்ய அதினுல் பரமசிவன் மிகப்ரீதி யோடு ஸ்வசரீரத்தில் பாதிதேகம் தந்து இடது பக்கத்தில் அர்த்தநாரியாக வகித்தார். பிறகு பார்வதியானவள் மிக

சந்தோஷத்தோடு உலகத்தாருக்கு இவ்ரத மகிமையால் நன்மையுண்டாக்ககருதி, பரமேஸ்வரனைப் பார்த்து இவ் விரதம் யான் அனுஷ்டித்தபடி உலகத்தாரும் தங்களை பூஜிக்கும் விஷயத்தில் அவர்களுக்கும் சத்கதி அடையும்படி அனுக்கிரஹம் செய்யவேண்டுமென்று கோரிய பரமேஸ் வரிக்கி அப்படியே ஆகட்டுமென்று வரமளித்து பார்வதீ ஸமேதராய் தேவகணங்களுடன் அம்மஹாருஷியிடம்விடை பெற்று வ்ருஷப்பவாஹநாரூடராய் கைலேக்கிச் சென்றார். இப்படி இருக்கும் காலத்தில் இவ்விரதத்தின் மேன்மை யைக்கண்ட தேவர்கள், ரிஷிகள், அப்ஸரஸ்திரீகள் முதலிய வாகள் இந்தவ்ரதம்அனுஷ்டித்துசெய்ய தலைப்பட்டார்கள. கநதர்வலோகத்தில் சித்ராங்கதனென்னும் கந்தர்வராஜன், நந்திகேஸ்வரரால்இந்த வ்ரதோபதேசமடைந்து,பூலோகத் தில உஜ்ஜயநீ பட்டணத்து மஹாராஜனுக்கும் இவ்விரதம் உபதேசிக்க,அவரால் இன்னுேன்மை கல்போக்த விதிப்படி செய்து இவ்விரதமகிமையால் ஸார்வப்பௌமரானார். தேவ கன்னியர்களும் பிரதிதினமும் பூலோகத்திற்கு வந்து, கங் கைக்கரையில் ஆலவிருக்ஷத்தின்கீழ் (21) நாள் நோன்பு. நோற்பது பிரயாசையென்றெண்ணி ஒரே தினமாகிய அற் பிசிமாதம் க்ருஷ்ணபக்ஷ சதுர்த்தசியில் அல்லது அமா வாசையில் அக்கன்னியர்கள் கங்கைக்கரையில் மணலினால் லிங்கப்பிரதிஷ்டைசெய்து, 21-முறை பூஜித்து, 21-பழம் 21-அதிரஸம், 21-வெல்லவுருண்டை. அப்படியே சந்தன வுருண்டை, மஞ்ஜளுருண்டை, 21-வெற்றிலை, 21-பாக்கு, 21-இழையுள்ள நூலில் 21-முடி போட்டுவைத்து ஸுகந்த புட்பங்களால் அர்ச்சித்து, தூபதீப நைவேத்தியஞ்செய்து, அவ்விரதத்தை பிரதி வருடமும் நடத்திவந்தார்கள். இப் படியிருக்க அந்த உஜ்ஜயநீ பட்டணத்தில் குடியிருந்து மிக யேழைக் குடித்தனம் செய்துவந்த ஓர் க்ஷத்திரிய குலஸ்த

ராகிய ஒருவருக்கு இரண்டு குமாரத்திகளுண்டு. அவர்க
களில் ஒருத்திபெயர் புண்யவதியென்றும், மற்றொருத்திப்
பாக்யவதி என்பாாகள். இவர்களுடைய தகப்பனார் ராஜ்ய
ஹீனனான ஒரு பேழை க்ஷத்திரியன். அவர் தன் நாடுநக
ரங்களை இழந்தவராய் மிக வருமையால் கஷ்டப்படுகிறபடி
யால் தன் குமாரத்திக ளிரண்டுபேருக்கும் விவாகம்செய்ய
வில்லை. அக்கன்யாபெண்களிருவரும் ஒருநாள் கங்கை
கரையில் வருகையில், ஆலமரததின்கீழ் தேவகன்னிகை
கள் நோன்பு செய்வதைக்கண்டு, நீங்கள் செய்யும் நோன்பு
யாது என்று கேட்டார்கள். அப்போது தேவகன்னியர்
கள் அவ்விருபெண்களையும் பார்த்து, "அம்மா!" முன்னே
ஒரு காலத்தில் ஸ்ரீ பார்வதியம்மன் பரமேஸ்வரரைக்
குறித்து நோன்புநோற்றாள். பிறகு அவள் கோரியபடி
பரமசிவனுடைய சரீரத்தில் பேர்பாதி பாகமடைந்தனள்,
இதை கேதாரி வ்ரதமெனப்படும். இம்மஹாவிரதத்தை
நாங்கள் நூற்கிறோமென்று சொன்னார்கள். இதைக்கேட்ட
அப்பெண்களிருவரும் இன்னோன்பினால் என்ன விசே
ஷமோ, அதின் ப்பலனும், எந்தகாலத்தில் எந்த தேவ
தையைப் பூஜை செய்யவேண்டுமோ, அதையும் சொல்ல
வேண்டுமென்று கேட்டார்கள். அதற்கந்த கன்னியர்கள்,
அவர்களை நோக்கி, இன்னோன்பை புரட்டாசி மாதம் சுக்ல
பக்ஷ தசமியில் துடங்கி அற்பசிமாதம் அமரபக்ஷ சதுர்த்
தசி அல்லது அமாவாஸ்யைவரையில் இருபத்தோருநாள்
தினம் காலையில் ஸ்நாநம் செய்து, மடிவஸ்திரங்களை உடுத்
திக்கொண்டு, பூஜாவஸ்துகள் சேகரித்துக்கொண்டு பரம
சிவனை ஆலவிருக்ஷத்தின்கீழ்மணலினால் ஆவாஹணம்செய்து
இருபத்தோருநாள் பூஜிக்கவேண்டும். இல்லாவிடில் கடைசீ
தினமாகிய சதுர்தசி அல்லது அமாவாஸ்யையிலாவது
ஸ்நாநாதி நித்தியக்ருத்தியங்கள் முடித்துக்கொண்டு பூஜா

வஸ்துக்கள் சேகரித்து சக்திக்கி தக்கபடி மேற்சொல்லிய விதமாய் பரமேஸ்வரரை ஆவாஹனதி ஷோடசோபசார பூஜைகள் செய்து மேற்சொன்னபடி பண்டுப்பலாதிகளால் நைவேத்தியாதி தீபாராதனைகள் முடித்துவந்தால் அவர்களுக்கு பரமேஸ்வரர் வேண்டிய வரங்களையும், ப்பாக்கியத்தையும் அளிப்பாரென்று சொன்னார்கள். அப்போது அவ்விராஜ குமாரத்திகளிருவரும் அத்தேவகன்னியர்களை நோக்கி, அம்மா! எங்கள் தாய்தந்தையர்கள் மிக ஏழைகளாகையால் எங்களுக் கிதுவரையில் விவாஹம் செய்து முடிக்கவில்லை, ஆதலால் நாங்கள் நல்கூர்ந்தோராகையால் செல்வ முடையவர்களான இராஜ குமாரர்கள் எங்களை மணம் புரியும்படி அனுக்கிரஹிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். அப்போது தேவ கன்னியர்சள் அவர்களிடத்தில் மனமிரங்கினவராய் ஆலம்விழுதைப் பிடுங்கி இழை எடுத்து நோன்புக்கயராக்கி இருபத்தோர் முடி முடிந்து, தங்கள் பூஜையாவையும் முடித்து பிறகு அத்தோரங்களை அவர்கள் கையிற் கொடுத்து ஆசீர்வாதம் செய்து இம்மாதிரியாகவே வருஷப்ரதி வருஷமும், இந்நோன்பை அனுஷ்டித்துவந்தால் அவர்களுக்கு சகல சம்பத்தும் கைகூடி வருமென்று வாழ்த்தி விடையளித்தார்கள். அப்போது இராஜபுத்திரிகளிருவரும் தேவகன்னியரிடம் உத்திரவுபெற்றுக்கொண்டு தங்கள் நாடடைந்து வீட்டிற்குப்போக வீடு அடையாளம் தெரியாமல் முன் குடிசைவீடா யிருந்தது மாறி, மாட மாளிகைகளுடன் ஸகலமான அஷ்டைஸ்வர்யத்துடன் பெருகியிருக்கக் கண்டார்கள்.

அப்போது இவ்வதிசயத்தைக்கண்டு வெகு ஆச்சரியத்துடன் இப்பெண்களிருவரும் தாமிருந்த வீட்டைக்

காணுமல் இவ்விடத்தில் புதுமையாய் மெத்தைமேடைகள் காணப்படுகிறதே, இது என்ன ஆசசரியம், நமது தாய் தந்தையரும் காணேமே, எங்கே சென்றூர்களோவென்று விசனப்பட்டு பேசிக்கொண்டு இங்கு மங்கும் திரிந்துக் கொண்டிருக்கையில் அவாளுடைய தகதை அவ்வீட்டின் வெளியேவந்துஅங்கு தவித்துக்கொண்டிருக்கும் தன் திரு குமாரத்திகளையும்கண்டு வீட்டிற்குள் அழைத்துக்கொண்டு போய் அவர்களுக்கு விலையுயர்ந்த சேலைகளையும்,பொன்னரி மாலையும், விலைபெற்ற ஆபரணுதிகளைத் தந்து தரித்துக் கொள்ளச்செய்து, திவ்யான்ன புசிப்புடன் சந்தோஷமாக சகலஸம்பத்துகளையும் அனுபவித்து வந்தாாகள்.

அப்போது உஜ்ஜயந் பட்டணத்தின் இளவரசன் இவர்களிருக்கும் இடத்திற்குவந்து புண்ணியவதியென்னும் பெண் தனக்கிசைந்தவளென்று எண்ணி அவளைக் கலியாணம் செய்துக்கொண்டு தன் பட்டணத்திற்கு அழைத்துக் கொண்டுபோய் சுகமனுபவித்துககொண்டே வாழ்ந்து வந்தார். சிலகாலததின்பிறகு சோழதேசத்தரசன் ப்பாக்கியவதியை மணம்புரிந்தார். அவரும் சர்வ வைபவத்தோடு மனைவியுடன் தன் நாட்டைச்சேர்ந்து அதிமகிழ்ச்சியோடு தன் மனைவியுடன் வாழ்ந்துவந்தார். இவ்வண்ணமாகவே இவ்விரண்டு இராஜகுமாரத்திகளும் தங்கள் தங்கள் ப்பர்த்தாக்களுடன்கூடி சகல சம்பத்துகளையும் அனுப்பவித்துக் கொண்டு புத்திரப்பாக்கியத்தோடு ஸுகமாய் வாழ்ந்துக் கொண்டிருந்தார்கள்.

சிலகாலம் சேன்றபிறகு, பாக்கியவதி, தன் செல்வச் செருக்கிஞல் நோன்புகயற்றை அவிழ்த்து, அவரைப் பந்தவின்மேல்வைத்து திரும்பியுமதைஎடுத்துக் கையில் கட்டிக்கொள்ள மறந்துபோய் நோன்பையும் விட்டுவிட்டாள்.

இவ்விதம் நடந்த சிலகாலத்திற்குபிறகு வேறொரு அன்னியதேசத்தரசன் சோழநாட்டின்மீது படைஎடுத்துவந்து அப்பட்டணத்தையும், அதிலுள்ள அஷ்டைஸ்வர்யமும் தானே கைப்பற்றி கொண்டார. அப்போது பாக்கியவதியும், அவள் புருஷனும் தங்கள் புத்திரர்களோடு கூடினவராய் நாட்டைவிட்டு காட்டிற்குச்சென்று, அன்னவஸ்திரங்களுக்கு மிககஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்கள் நோன்புக்கயற் அவரைபந்தலில் விருந்ததால் அதில் அவரைக்காய் மிருதியாய் காய்க்க ஆரம்பித்தது. அப்போது பாக்கியவதி அவரைக் காய்களை பரித்து, சமயல்செய்து தானும் தன் நாயகனும் குழந்தைகளுடன் புசித்து ஜீவித்துவந்தனர்கள். இவ்விதமாய் மிககஷ்டஜீவனம செய்துக்கொண்டிருந்த காலத்தில் ஒருநாள் பாக்கியவதி, தன் பெரியகுமாரனை அழைத்து அபபா! ஈமோ நாடு, நகரமிழந்து, அன்னவஸ்திரத்திற்கே மிககஷ்டப்படுகிரேமாகையால் நீ உஜ்ஜயநீ பட்டணம்சென்று உன் பெரியதாயாராகிய புண்யவதியைக்கண்டு, அவளிடத்தில் நம்முடைய தற்காலநிலைமையைதெரிவித்து கொஞ்சம் திரவியசகாயம்கேட்டு வாங்கிக்கொண்டு வாவென்றுசொல்லி கட்டமுதுகட்டிக்கொடுத்து வழி அனுப்பினாள். உடனே பாக்கியவதியின் குமாரன் தன்பெரிய தாயாராகிய புண்ணயவதியிருக்கும் பட்டணம் சென்று அந்தம்மாளைக்கண்டு அவள் பாதத்தில் விழுந்தான் அப்போது அவள் அவனைக்கண்டு திடுக்கிட்டு நீயாறென்று கேட்க, அம்மா நான் உன்சகோதரியின்குமாரன் என்றான். அவள் இவ்வார்த்தையைக்கேட்ட உடனே மிகதிகைத்து மகனே! நீ இவ்வித கஷ்டத்துடன் பாதசாரியாய், தனியாய் வந்தகாரணம் யாதெ என்று கேட்க அம்மா! வேற்ற அரசன், எங்களுடைய நாடுநகரம் யாவையும் தான் கைப்பற்றிக்கொண்டு, எங்களை பரதேசியாக்கினான். அதுமுதல்

நாங்கள் ஜீவனுதாரமின்றி மிககஷ்டப்படுகிறோம் என்று சொன்ன அப்பிள்ளையை ஆதரித்து சில ஆடையாபரணமும் கொடுத்து பொருளுதவிசெய்து அனுப்பினுள். அவன் அவைகளை எடுத்துக்கொண்டு தன்பட்டணத்தை நோக்கி செல்லும்போது நடுவழியில் ஓர் கங்கைக்கரையில் அப்பணமூட்டையை கீழேவைத்து கட்டமுதை சாப்பிடுகையில் ஈஸ்வரமாய்கையால் ஒருகருடன் அம்மூட்டையை அடித்துக் கொண்டு போய்விட்டது. அவன் உடனே ஆகாயத்தை நோக்கி. ஓ! ஓ! காரியமெப்படி நேர்ந்தது; கைக்கெட்டினது வாய்க்கெட்டவில்லையே என்று மிகவருத்தப்பட்டு, திரும்பிப்போய் தன் பெரியதாயாரிடம் வழியில் நடந்த சங்கதியை தெரிவித்தான். இச்சேதியைக்கேட்டு அந்தம்மாள் மிகதுயரத்துடன் இன்னுங் கொஞ்சம் திரவியம் கொடுத்து அப்பிள்ளையை வழி அனுப்பினுள். அவன் அம்மூட்டையை எடுத்துக்கொண்டு மருபடியும் தன் பட்டணம் நோக்கிச்சென்ருன் அதாவது கொஞ்சதூரம் சென்றபிறகு முன் சாப்பிட்ட கங்கைகரைக்கே வந்து த்ரவியமூட்டை அருகில் வைத்துக் கொண்டு புசிக்கும் தருணத்தில், ஒரு கண்டைமீன் தண்ணீர்க்கரையிலிருந்த த்ரவ்ய மூட்டையை எடுத்து முழிங்கிவிட்டது இதைக்கண்ட அவ்விராஜகுமாரன் திடுக்கிட்டு, அதிதுயரத்துடன் திரும்பிபெரியதாயரிடம் வரும்போது அசரீரியாக சொன்ன ஒருவார்த்தை மாத்திரம்கேட்டது. அதாவது வ்ரதப்ரஷ்டாளுக்கு இப்பொருள் எப்படிவாய்க்கும் என்று சொன்னதைக்கேட்ட அச்சிருவன் மிக விசாரத்துடன் பெரியதாயாரிடம்தனக்கு வழியில் நடந்தவரலாரை எடுத்துரைத்து தாயே! இவ்விதமாய் சம்பவித்தகாரணம் எனக்கு தெரியவில்லை. நான்தரித்திரனுகையால் கைக்கெட்டினது வாய்கெட்டாமல் போயிற்றென்றுசொல்லி வருத்தப்பட்டான்.

அதாவது குமாரன் சொன்னமொழியைக்கேட்ட புண்யவதி, அவனைத்தேற்றி அப்பா! உன்தாயார், பாக்கியவதி கேதாரீஸ்வர விரதத்தை க்ரமமாய் அனுஷ்டித்து வருகிறாளா வென்றுகேட்டாள். அப்போது அச்சிருவன் பெரிய தாயாரைநோக்கி, அம்மா! முன்னொருகால் என்தாயும் நீருமாக கேதாரிவிரதத்தை அனுஷ்டித்து அதினால் உங்களிருவருக்கும், திரண்ட சம்பத்துண்டானதாக என்தாயார் சொல்லக்கேட்டிருக்கிறேனே யன்றி, இப்போது அவ்விரதத்தை செய்கிரதாய் காணைப்படவில்லை என்றான். அப்போது அவன் சொன்னதைக்கேட்ட அப்புண்யவதி மிக மனவருத்தப்பட்டுஉடனே அக்குமாரனை அன்னோன்புநாள் வருகிறவரையில் தன்னிடத்திலேயே வைத்துக்கொண்டு அவ்விரததினத்தில் தன்தங்கையாகிய பாக்யவதிகென்று இருபத்தொரு இழையுள்ள நோன்புதோரத்தையும் கல்பத்தில் சொன்னபடி மஞ்சள் முதலியன தினுசுக்கு (21)-எண்ணுள்ள பூஜாத்திரவியங்களையும் சேர்த்து கலசத்திற்கு பூஜைசெய்து தூபதீப நைவேத்தியங்களையும் நடத்தி பாக்கியவதிக்கும் ஸகல சம்பத்தும் உண்டாகும்படி பிரார்த்தித்துக்கொண்டாள். உடனே புண்ணியவதி இவ்விதம் நோன்பு செய்துமுடித்து அன்னோன்பு கயற்றையும் பிரஸாதத்தையும் குமாரன்கையிற்தந்து இதை அவன் தாயாரிடம்கொடுக்கசொல்லி வருஷா வருஷம் தவராமல் விரதம் செய்யும்படி தன்தங்கைக்கு சொல்லும்படி கட்டளையிட்டு, கட்டமுதும் சில திரவியமும் கொடுத்தனுப்பினாள். அவன் முன்போல் கட்டமுதுசாப்பிட கங்கைக்கரைசென்று புசிக்கும் சமயத்தில் முன் கருடனால் எடுத்துப்போன திரவியமூட்டையை இவனெதிரில் போட்டது.

பிறகு அச்சிருவன் அம்மூட்டையை பத்திரப்படுத்திக்கொண்டு சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது முன்மீன் விழுங்கின அத்திரவியமூட்டையும் அம்மச்சம் கொண்டு வந்து கக்கிற்று, இதைக்கண்ட சிருவன் அகமகிழ்ந்து இதுவும் பரமேஸ்வரகடாக்ஷமென்று எண்ணி அத்திரவிய மூட்டைகளைக் கைக்கொண்டு தன்தேசமாகிய சோழதேசம் சென்று தன்தாயாரைக்கண்டு நடந்த வர்த்தமானம் அனைத்தும் தெரிவித்து தன் பெரியதாயார்தந்த நோன்பு கயற்றையும் ப்ரசாதத்தையும் கொடுத்து தன்தாய்க்கு நமஸ்கரித்தான்

பாக்யவதி அந்தோரத்தைவாங்கி தன்கையிற் உடனே தரித்துக்கொண்டனள். இப்படி இருக்க முன் தங்கள் நகர நாடு சம்பத்தை அபகரித்த அரசன்வந்து இப்பாக்கியவதியின் பர்தாவாகிய அரசனைநோக்கி அவர் நாடுநகரங்களையும் ஸகல ஸம்பத்தையும் அவருக்கே தந்து முன்போல் அரசு புரிந்து சுகமாய் புத்ரபௌத்ராதி அஷ்ட ஐஸ்வரியங்களுடன் வாழக்கடவீரென்று ஆசிர்வதித்து தன்தேசம் திரும்பி போய்விட்டான்.

பிறகு முன்போலவே பாக்கியவதிக்கு சகல ஸம்பத்துண்டாகவே தான் முன்நோன்பு குறையாய் நோற்றபடியினால் கேதாரீஸ்வரர் வருமையைத் தந்தாரென்ரறிந்து அதுமுதல் அவள் அன்னோன்பை அனுஷ்டித்து செய்தபடியால் சர்வைஸ்வர்யமும் குறைவரப்பெருகி ஸுகமாக வாழ்ந்து வந்தனள்.

ஆதலால் இப்பூலோகத்தில் கேதாரி விரதத்தை மனப்பூர்வமாக ஆஸ்ரயித்து செய்பவர்களுக்கு பரமசிவன் ஸகல ஸம்பத்துகளையும் அனுக்கிரகம்செய்து குரைவர நடத்துவார் என்று நாரதமுனிவரும் சொல்லியருளினார் அப்

போது தர்மபுத்திரர் இன்னோன்பைசெய்து துரியோதனாதிகளை ஜெயித்து தங்கள் ராஜ்ஜிய ஸம்பத்துடன் சுகமடைந்தார்கள்.

ஆதலால் இன்னோன்பை அனுசரித்து செய்கிறவர்களுக்கு சகல ஐஸ்வர்யமும் மென்மேலும் பெருகி, ஸர்வ கஷ்டங்களினின்று விடுபட்டு சுகஜீவியாய் வாழ்ந்திருப்பார்கள். ஆகையால் இவ்விரத சரித்திரத்தை யாராகிலும் கேட்டாலும், படித்தாலும், எழுதினாலும் அவர்கள் மஹாதேவானுக்ரஹத்தால் ஆயுராரோக்கிய ஐஸ்வர்ய மடைந்து, பிறகு சிவஸாயுஜ்யத்தை அடைவார்களென்று கௌதம மஹார்ஷியால் சொல்லப்பட்டதென்று ஸூதமாமுனிவர் சௌனகாதி மஹா முனிவர்களுக்கு உபதேசித்தாரென்று ஸ்ரீ வ்யாஸமகாமுனிவர் ஸ்காந்த புராணத்தில் வர்ணித்து சொல்லி யிருக்கிறார்.

கேதாரவிரதகதை முற்றிற்று.

சுப்பம்ப்பவது.



ஸ்ரீ ர ஸ் து.

# ரதசப்தமி விரதம்.

அத்த மாக்க சுக்ல ஸபதம்யாம், ரத்தஸப்தமீ வ்ரத கல்ப ப்ராரம்பப꞉. அஸ்யாம் ஸ்நாநவித்திருக்தா. தச்ச, அருணோதய வ்யாபின்யாம் ஸ்நாநம் கார்யம். ததுக்தம் மதனரத்னே ஸ்ம்ருதி ஸங்க்ரஹே. சு. ஸூர்யக்ரஹண துல்யாஸா சுக்லா மாத்துஸ்ய ஸப்தமீ, அருணோதயவேளா யாம் ஸ்நாநம் தத்தர மஹாப்பலம். சு. மாக்கே மாஸி ஸிதேபக்ஷே ஸப்தமீ கோடிபுண்யதா, குர்யாத் ஸ்நா நார்க்கிய தாநாப்பகி சாயுராரோக்கிய ஸம்பத꞉. தினத் வயே, அருணோதய வ்யாபித்வே, பூர்வைவ, ஸௌவர்ணே ராஜதே தாம்ரே, ப்பக்த்யா லோஹமயேதத்தா, தைலேன வர்திர்தாதவ்யா, மஹா பாத்ரேது ரஞ்ஜிதா ஸமாஹித மநாப்பூத்வா, தீபம் சிரஸிதாரயேத், பாஸகரம் ஹ்ருதயே த்பாத்வாசே, இதம மந்த்ரமூதீரயேத் நமஸ்தே ருத்ரரூ பாய ரஸாநாம் பதயே நம꞉. அருணார்க நமஸ்தேஸ்து ஹரிதஸ்வ நமோஸ்துதே. ஜலேப்ரதீபான் ஸம்ஸ்தாப்ய, ஸந்தர்ப்ய பித்ரு தேவதா꞉. லோலார்க ரத்த ஸப்தம்யாம் ஸ்நாத்வா கங்காதிஸங்கமே, ஸப்தஜன்மக்ருதை꞉ பாபை꞉ முக்திர்ப்பவதி தக்ஷணாத். இதிகர்கஹ꞉. ஷஷ்டீ ஸப்தமி போகேவா, ரதாரூட்டாம்சு மாலிந꞉, யோகோயம் பத்ம கோநாம ஸஹஸ்ரார்க க்ரஹைஸ்ஸம꞉. எந்ததினத்தில் அருணோதய காலத்தில் சபதமி இருக்கிறதோ அந்த நாளிலே யே ரதசப்தமீ விரதம் கிறஹித்து ஸ்நாநமும் விரதமும் செய்யவேண்டும் ஒருக்கால் இரண்டுநாளிலும் அருணோதய காலத்தில் சப்தமி இருந்தால முதல்நாளிலேயே ரத்த

சப்தமீ வ்ரதம செய்யவேண்டும். அந்த ஷஷ்டிதிதிநாளில் ஏகபுக்தமும், சப்தமியில் உதயத்திலேயே ஸ்நாநம்செய்து ஸ்வர்ண ரஜத தாம்ப்ர லோஹ பாத்திரங்களில், இதுகளி லேதாவது ஒரு பாத்திரத்தில் எண்ணை வார்த்து தீப மேற்றி, ஸூர்யப்ரதிமை எழுதி ஷோடசோபசாரங்களு டன் பூஜித்து, அந்த புண்யகாலம் ஸங்க்ருந்திக்கொப்பான புண்யகால மாகையால் கங்கை முதலிய மஹா நதிகளில் தீபங்களைவிட்டபிறகு, பிதுர்தர்பணாதிகள் ஆசரித்து செய் கிறவர்களுடைய சப்த ஜன்மபாபங்கள் விலகிப்போம். ஷஷ்டீஸப்தமி, இவை இரண்டும் கூடினால் அதை பத்மக யோகமென்பர். இப்படிக்கொத்த யோகம் ஆயிரம் சூரிய க்ரஹணங்களுக்கு ஸமமென்று கர்க்க மாமுனியால் சொல் லப்பட்டது.

ஏதச்ச ஸ்நாநாதி ஸ்மரணாநந்தரம், சிஷ்டாசாராத். ஏழு எருக்கன் இலைகளும், ஏழு எலந்தன் இலைகளையும் ஒன்றுசேர்த்து மஞ்சள் அக்ஷதையுடன் ஸ்திரீகளும், தாய் தந்தையருள்ளவர்களும் அந்த இலைகளை சிரசின்மீது வைத் துக்கொண்டு ஸ்நாநம் செய்யவேண்டியது. தாய்தந்தை யர்களில்லாதவர்கள் வெண்மையான பச்சரிசியும் எள்ளும் சேர்த்து, மேற்சொல்லிய அந்த இலைகளை தன் சிரசின்மீது வைத்துக்கொண்டு சங்கல்ப பூர்வமாக ஸ்நாதம் செய்ய வேண்டும். (இதற்கு மந்திரம்.) யத்யத்கர்ம க்ருதம்பாபம், மயாஸப்தஸு ஜன்மஸு, தன்மேரோகஞ்ச, சோகஞ்ச மாகரீஹந்து ஸப்தமீ. ஸ்நாநாநந்தர மர்க்யஞ்ச தாதவ்யம் மந்த்ரபூர்வகம். அர்க்கியம் விடவேண்டியது. சு. ஸப்த ஸப்தி வஹப்ரீத; ஸப்தலோக ப்ரதீபன, ஸப்தம்யா ஸஹிதோதேவ க்ருஹாணார்க்யம் திவாகர சு. ஸப்தமீ மஹாஸப்தஸப்தத்வீபாவஸுந்த்தரா ஸப்தார்கபர்ணமா

காய ஸப்தமீ ஸ்நாந மாசரேத் ,,. ஏதத்ஜென்மக்ருதம் பாபம் யெச்சஜென்மாந்த ரார்ஜிதம், மனோவாக்காயஜம் யசச, ஞாதாஞாதேசயேபுந: இதிஸப்தவித்தம்பாபநம், ஸ்நான்மே ஸப்தஸப்திகே, ஸப்த வ்யாத்திஸமாயுக்தம் ஹரமாகரி சபதமி. ஸ்நாநம் செய்தபிறகு அர்க்கியம் விடவேண்டியது. அாக்கிய மந்த்ரம். ஜனனீத்வம்ஹிப் பூதானும், ஸப்தமீஸபத ஸப்திகே, ஸப்தவயாஹ்ருதி கேதேவிநமஸ்தே ஸூர்யமாத்ருகே, இதி அற்ச்யாநவித்தி. அனேனைவது மந்த்ரேண பூஜயேச்ச திவாகரம். க்ருத்வா ஷோடசததா ராஜன் ஸப்தாஸவ ரத்தமண்டலே. ஸ்நாநம் முடித்து தேசகாலகீர்த்தனுந்தே, மமஸ்ரீஸூரிய நாராயண ப்ரீதித்வாரா இஹஜன்மனி ஜன்மாந்தரேச அக்கண்ட ஸௌபாக்ய, புத்ர பௌத்ர த்தனத்தான்யாதி மனஷீப்ஸித காமநா ஸித்தயே, ஸ்ரீ ஸூர்ய நாராயண பூஜாங் கரிஷ்யே(நம:). இவ்விதமாய் ஸங்கல்பம்செய்துக்கொண்டு பிறகு கணபதி பூஜையும் கலசபூஜையும்செய்து கலதீர்த்தம் தன்மேலும, பூஜாத்திரவியங்களின் மேலும், ப்ரோக்ஷித்துக்கொண்டு பிறகு, (செகப்பு) ரக்த செந்தனத்தினும், ரதாரூடரான சூரியனை எழுதி ஸூரியயந்திரத்தின் மீது மந்தரபூர்வமாக ஆவாஹணம் செய்யவேண்டியது. (வேதமநதிரம்) த்யேயஸ்ஸதாஸவி த்ருமண்டல மத்திய வர்தநீநாராயண: ஸரஸிஜாஸன ஸன்னி விஷ்ட:, கேயூர வான் மகர குண்டலவான் கிரீடஹாரி, ஹிரண்மய: வபுர்த் ருத சங்க்கசக்ரஹ. (இப்படி சூரியனை த்யானஞ் செய்து, பத்மாஸன: பத்மகரஹ, பத்மகர்ப்ப ஸமத்யுதிஹி, ஸப்தாஸ்வரத்தஸம்ஸ்தஸ்ச, த்விப்புஜ ஸ்யாத் ஸதாரவி:. இவ்விதமாய் ஆவாஹனதி ஷோடசோபசார பூஜைகள் செய்யவேண்டியது. த்தூபதீப பாயஸ நைவேத்தியாதி கர்பூர தீபாராதனைகள்செய்து மந்திர புஷ்பாதிகள் இட

வேண்டியது. நமஃஸ்ஸவித்ரே ஜமதேகசக்ஷுஷே ஜகத் ப்ரஸூதிஸ்திதிநாச ஹேதவேத்ரயீமயாயீத்ரி குணாத்மத தாரிணே விரிஞ்சி நாராயண சங்கராத்மனே. இப்படி சொல்லி நமஸ்கரித்து, புஷ்ப குங்குமாக்ஷதையால் ஜலத் தோடு அர்க்கியம் விடவேண்டியது. சு. ஸப்தஸப்தி....திவா கர. மேற்சொன்ன மந்திரத்தாலாவது அல்லது மித்திராய நமஃ இதமர்க்கியம் ஸமர்ப்பயாமி. ரவயே நம ஃ இதம.... ஸ....மி. சூரியாயநமஃ இத....ஸ....மி. பபானவே நமஃ இத ....ஸ....மி. க்ககாய நமஃ இத....ஸ....மி. பூஷ்ணே நமஃ இத ....ஸ....மி. ஹிரண்ய கர்ப்பாய நமஃ இதம....ஸ....மி. மரீச் யாதித்யஸவித்ரு அர்க்கபாஸ்சரேப்பியோநமஃ இதமர்க்.... ஸ....மி. சு. ஏக சக்ரோரத்தோயஸ்ய திவ்யஃ கனகப்பூஷி தஹ ஸமேப்பவது ஸூப்பிரீதஃ பத்மஹஸ்தோ திவா கரஹ. யஸ்யஸ்மிருத்தியாச இத்தியாதிநா பூஜாம் ஸமாச ரேத். இதி ரத்தஸப்தமீ பூஜாவித்தானம் ஸமாப்தஃ அனயாபூஜயாச நைவேத்யேனச ப்பகவான் ஸர்வாத்மகஃ ஸ்ரீ சூரியநாராயண ஸூப்ரீதஸூப்பரஸன்னோ வரதோப்பவது

ரதசப்தமி விரதம்

முற்றிற்று

---

ரத்தஸப்தமீ தினத்தில்

# ஸூர்யனை உபாசிப்பதின்ப்பலன்



தைமாஸம் சுக்லபக்ஷ ஸப்தமிக்கு "ரத்த ஸப்தமி" என்று பெயர். அந்ததினம் ஸூர்யனுக்கு விசேஷகாந்தி உண்டானது. ஆகையால் எல்லோரும் அன்றையதினம் விடியற்காலத்தில் ஸ்நாநாதிகள் கல்பதில் சொன்னபடி முடித்துக்கொண்டு பிறகு ஸூர்யனைப் பக்தியோடு பூஜை செய்து, விரதமனுஷ்டிக்கவேண்டும். இப்படி செய்வதினால் தேஹசௌக்கியம், ரோகமில்லாமை, செல்வம், புத்திர விருத்தி, நீண்டகால ஆயுள், புண்யம், சத்துருக்களை ஜெயிக்கும் வல்லமை, வெற்றி, விசேஷப்பூமி, த்தான்யம் முதலிய செல்வம், மங்களம், பாப விமோசனம் இவைகளுண்டு. மேலும் மனக்கவலை வியாதி இவைகள் ஒழியும். ஒருவனுக்கு ஆபத்துவந்தபோதும், கஷ்டப்படும்போதும், கஷ்டமான வழியில் அகப்பட்டு போகமுடியால் தவிக்கும் போதும், மனவ்யாகூல முண்டானபோதும், ஸூர்ய ப்ரார்த்தனைசெய்தால் அவனுடைய வருத்தம் நீங்கி சுகப் படுவான். ஆகையால் ஸ்ரீமத்ராமாயணத்தில் யுத்த காண்டத்தில் ப்பகவான் ஸ்ரீராமனே இராம ராவணனுக்கு மும்மர யுத்தஸமயத்தில், ஆதித்யஹ்ருதயம் பாராயணம் செய்ததினாலேயே ப்பகவான் ஸ்ரீராமர்,இராவணனைஜெயித் தார். ஆகையால் நாம் பாராயணம் செய்தால் மிகப் பலன் தரும் இது திண்ணம்.

## ஸூர்ய உற்பத்தி காரணர்.

ஒரு காலத்தில், ஈஸ்வரனுக்கு தான் ஒருவன் மட்டும் உலகங்களுக்கு பெரிய சுடராய் பிரகாசிப்பது போதா

தென்று தோணினவராய் மற்றொரு சுடல் ஏற்படுத்த ஸங்கல்பித்தார். அப்படியே மற்றொரு சுடலையும் உண்டாக்கினர். இதற்குதான் ஸூர்யன், ஆதித்தியன், ப்பாஸ்கரன் என்று பல பேர்கள் உண்டாயின. அப்போது சூர்ய மண்டலம் மிக பெரிதாய் உலகத்திற்கு சௌக்கியமும், ஒளியும், உண்டுபண்ணக் கூடியதாய் விளங்கிற்று. அதில் அனேக ரிஷிகள், தேவர்கள் நிலைபெற்று வாஸம் செய்து மத்தியிலுள்ள சூர்யனை துதித்துவருகிறாகள். இப்படியிருக்க, அநேக யுகங்களுக்கு பிறகு திடீரென்று சூர்ய காந்தி குறைந்தது. அபபோது ஸூர்யகாந்தி மழுங்கிப் போனதைக் கண்டு வருத்தப்பட்டு, தேவர்கள் பிரம்ஹதேவனை ப்ரார்த்தித்தாகள். உடனே ப்ரம்ஹா, இந்திரன் இவர்கள் ஆலோசித்து செய்ததாவது. விஸ்வகர்மாவின் சாணைப்பிடிக்கும் எந்திரத்தில், இந்த சூர்யனைக் கடைந்தால் முன்போல் காந்தியுண்டாகுமென்று நிச்சயித்து கடையவே, உடனே சூர்யனுக்கு முன்போல்காந்தியுண்டாயிற்று. இப்படி சூர்யனைக் கடைந்ததினமாகையால் இதற்கே ரத்தஸப்தமிதிதி என்று பேருண்டாச்சுது. அதே தினத்தில் ஒரு சக்கரமும் ஏழு குதிரைகள்பூட்டிய ஒரு ரதமும், மஹா விஷ்ணு சூரியனுக்கு கொடுத்தார். பிறகு கஸ்யபப்ரஜாபதிக்கும், அவர் பத்தினியாகிய விநதையினிடம் உண்டான கால்களில்லாத அருணனெனும் ஒரு பிள்ளையைப்பெற, அந்த அருணனை சூர்யனுக்கு ரத ஸாரதியாக ஏர்ப்படுத்தப்பட்டான்.



ஸ்ரீமஹா கௌர்யை நமஃ

# ஸாவித்ரீ கௌரீ வ்ரத கல்பம்.



முதலில் மூன்றுதடவை ஆசமநீயம்செய்து, சங்கல்பம் செய்துக்கொள்ளவேண்டும். சுப்பேசோப்பனே முஹூர்தே, ஆத்யபிரம்ஹணஃ த்விதீயபரார்த்தே, ஶ்வேதவராஹ கல்பே, வைவஸ்வத மன்வந்தரே,கலியுகே,ப்ரத்தமபாதே, ஜம்பூத்வீபே ப்பாரதவர்ஷேப்பரதக்கண்டே, அஸ்மின் வர்த்தமானவ்யவஹாரிக, சாந்திர சௌரமானேன ப்ரப்ப வாதி ஷஷ்டி ஸம்வத்ஸராணாம மத்யே, அஸ்ய ஸம்வத்ஸரே அயநே-ருதௌ-மாஸே-பக்ஷே-சுப்பதித்தௌவாஸர யுக்தாயாம்,மமப்பர்தாஸஹ, க்ஷேமஸ்தைர்ய விஜய ஆயுராரோக்கிய ஐஸ்வர்யாப்பி வ்ருத்யர்த்தம் தர்மார்த்த காம மோக்ஷ சதுர்வித ப்பல புருஷார்த்த ஸித்யர்த்தம் மனோவாஞ்ச்சாப்பல ஸித்பர்த்தம், ஸகல மங்களாவாப்த்யர்த்தம் அப்யுதயார்த்தஞ்ச ஆயுஷ்யாப்பி வ்ருத்யர்த்தம் வந்க்யா * சதுஷ்டயதோஷ நிவ்ருத்யர்த்தம் சகலப்பலாவாப்த்யர்த்தம், ஸ்ரீ பார்வதீ பரமேஸ்வரப் ப்ரீத்யர்த்தம் கல்போக்தப் ப்ரகாரேண யாவச்சக்தி த்யாண வாஹனாதி ஷோடசோபசார பூஜாம் கரிஷ்யே (நமஃ) ததங்கத்வேந கலசபூஜாம் கரிஷ்யே (நமஃ) (மேற்சொன்னபடி சங்கல்பம் செய்து கலச, கணபதிபூஜைகள் செய்துக்கொண்டு பிறகு, சாவித்ரீ கௌரிக்கி ப்ராணப்ரதிஷ்டை செய்து பூஜைக்கி ஆரம்பம்செய்யவேண்டியது.

---

* வந்த்யா-மலடித்தனம் என்று அருத்தம்.

## பிறகு த்யான சுலோகம்.

சு. வந்த்யதோஷஹரே கௌரீ, கரிஷ்யே தவபூஜனம், நிர்விக்னம குருமேதேவி ஸர்வாபீஷ்ட ப்பலப்ரதே. சு. சரதிந்து விகாஸ மந்தஹாஸாம், ஸ்புரதிந்தீவரலோசனாப்பிராமாம, அரவிந்த ஸமான சுந்தராஸ்யா, மரவிந்தாஸன சுந்தரீமுபாஸே. சு. வந்தேஹம்குந்தஸந்நாப்பா, மிந்தீவரதளேக்ஷணம், வந்தாருஜன மந்தாராம், வல்லீம், வாகத்திதேவதாம். ஸாவித்ரீ கௌர்யை நமஃ த்யானம ஸமர்பயாமி. சு. நாநாரத்ந ப்ரப்பாதீப்தே ஸர்வாப்பரணபூஷிதே, மஹாலக்ஷ்மீ, மஹாதேவீ, த்வமாகச்சஸ்திராப்பவ சு. சங்க்கசக்ர கதாஹஸ்தே, ஸர்வரூப்பே, சுப்பாவஹே, மமதேவீ வரமதேஹி, ஸர்வ சித்திபரதாயினி. சு. ஆவாஹயாமி ரூபபகே, சுபபேஸர்வவரப்ரதே. பீதாம்பரத்தரே தேவி, ஸர்வலக்ஷண ஸம்யுதே. ஸாவித்ரீ கௌ... நமஃ ஆவாஹனம் ஸ....மி. சு. தப்தகாஞ்சனஸங்காசேமஹாலக்ஷ்மீவரப்ரதே, ரதநசிம்ஹாஸனம் சாரு, க்ருஹ்யதாம், சங்கரப்ரியே. ஸாவித்ரீ கௌ....நமஃ ரத்னஸிம்ஹாஸனம் ஸ....மி. சு. பத்மாஸனே பத்மகரே, ஸர்வ லோகைகபூஜிதே, நாராயணப்ரியேதேவி, பாத்யம் ஸங்க்ருஹயதாமுமே. ஸாவித்ரீ கௌ....நமஃ பாதயோஃ பாத்யம் ஸ....மி. சு. ஜகத்வந்த்யே மஹாதேவி, ஸாவலோகைகபூஜிதே, அர்க்கியம் தாஸ்யாமி வரதே, க்ருஹாண பரமேஸ்வரி. ஸாவித்திரீ கௌ....நமஃ அர்க்யம் ஸ....மி. சு. ஸேவேகாருண்யநிலயே, ப்பக்தத்ராணைகதத்பரே, ஆசம்யதாம், மஹேஸ்ராணி, ஸர்வாவிதபயஃ கணேஃ. ஸாவித்திரீ....கௌ....நமஃ ஆசமநீயம் ஸ....மி. சு. ப்ராம்ஹீச வைஷ்ணவீ ரௌத்ரீ, கௌமாரீ ஸாம்ப்பவீஸிவா, ஸித்திதா புத்திதா சாந்தா, மத்துபர்கம் க்ருஹாணப்போ. ஸாவித்ரீ கௌ....நமஃ மத்துபர்க்கம்

ஸ....மி. சு. கோக்ஷீரைர் நாரிகேளைஸ்சக்ருதேன மத்துநா சிவே, பஞ்சாம்ருத ஸ்நாநமிதம் சர்கராகாங்கவாரிபி:. ஸாவித்திரீ கௌ....நம: பஞ்சாம்ருத ஸ்நாநம் ஸ....மி. சு. ஜயத்வம் தேவிசாமுண்டே, ஜயக்கஸ்டாகபாலினி; ஜய ஸர்வகதேதேவி சாம்பகஸநாந மாசர. ஸாவித்திரி கௌ....நம: சம்பகதைலாப்யஞ்ஜனஸ்நாநம் ஸ....மி. சு. கலாத்மிகே, கலாதீதே, காருண்ய ஹ்ருதயேசிவே, கல்யாணீ ஜகதீநித்யம் கஸ்தூர்யுத்வர்த்தனம் குரு. ஸாவித்திரீ கௌ....நம: கஸ்தூர்யுத்வர்த்தந ஸ்நாநம் ஸ....மி. ரோசனு கருகர்பூர, குங்குமாலோடிதம்புந:, கஸ்தூர்யாதி ஸுகந்தத்ம்ச, ஸர்வாங்கேஷு விலேபயேத். ஸாவித்திரீ கௌ....நம: ஹரித்ராசூர்ண ஸ்நாநம் ஸ....மி. சுத்தோதகஸ்நாநமிதம் ஸ்வீகுருஷ்வ ஸுரோத்தமே, ஸர்வதீர்த்தமயம்தேவி, நித்யபாவனி பாவநம். ஸாவித்திரீ கௌ.... நம: சுத்தோதக ஸ்நாநம் ஸ....மி. ஸர்வதேஹ ஸுரக்ஷார்த்தம் பிரம்ஹணு நிர்மிதம்புரா, வஸ்த்ரம் தாஸ்யாமி தேவேசி, க்ருஹாண ஸுரவந்திதே. ஸாவித்திரீ கௌ.... நம: வஸ்தரயுக்மம் ஸ....மி. சு. அணிமாதிகுணுத்தார,மகாராத்யக்ஷராத்மகம், உபவீதம் ப்ரதாஸ்யாமி, க்ருஹாண பரமேஸ்வரி, ஸாவித்திரீ கௌ....நம: உபவீதம் ஸ....மி. சு. ஸ்ரீகந்தஸம்மிஸ்ரிதகந்தஸாரம், கர்பூரஸம்யுக்தமதீவ ஹ்ருத்யம், ஸுராஸுராநம்ர கிரீடசோப்பிநீம், பாதத்வயேதே ப்ரததாமிகௌரீ. ஸாவித்ரீ கௌ....நம: ஸ்ரீகந்தம் ஸ....மி. சு. ஹாரித்ரஞ்ச மஹாதேவி ஸர்வ கல்யாண தாயினி, சௌப்பாக்யவர்த்தனம் திவ்யம், க்ருஹாண பரமேஸ்வரி. ஸாவித்திரீ கௌ....நம: ஹரித்திராசூர்ணம் ஸ....மி. சு. குங்குமம் சோப்பனம் திவ்யம், கர்பூரேணஸு ஸம்யுதம், விலேபனம் ஸுரஸ்ரேஷ்டே, பிரீத்யர்த்தம்

ப்ரதி க்ருஹ்யதாம். ஸாவித்திரீ கௌ....நம: குங்கும பரிமளம் ஸ....மி. சு. அக்ஷதான், விமலான், சுப்ரான், சாலீயான், ஸுமநோஹரான், க்ருஹாமணேமான்ம ஹேசானி, கமலாபதி பூஜிதே. ஸாவிததிரீ கௌ....நம: அக்ஷதான் ஸ....மி.சு. மாணிக்யமுக்தாப்பல,வித்ருமைஸ்ச,கோமேத்த வைடூர்ய க்ருதானியானி, அங்குள்யதாடங்க ஸுகண்ட்ட மாலா, காஞ்சீகதா தீனி க்ருஹாணதேவி. ஸாவித்ரீ கௌ....நம: ஆப்ரணானி ஸ....மி. சு ஜாஜீசெம்பகபுன்னாக கேதகீபாடலான்விதை:, பாரிஜாதாதி குஸுமை: பூஜயாமி, சிவப்ரியே. ஸாவித்ரீ கௌ....நம: புஷ்பாணி பூஜயாமி. சு. லக்ஷ்மீகரகரோத் ப்பூதபில்வ ம்ருத்யுஞ்ஜயப்ரிய, தேஹி புத்ரான் பசுத்தனான் ஆரோக்கிய மசலாம்ஸ்ரீயம். பில்வ பத்ரார்சிதே தேவி, துர்கேத்வாம் சரணம கதா, பில்வ பத்ர ப்ரதானேன, ஈப்ஸிதம்ஸப்பலம் குரு. சாவித்ரீ கௌர்யை நம: பில்வபத்ரம் ஸ....மி.

---

## அத்தாங்க பூஜா.

| | |
|---|---|
| ஸாவித்ரியை நம: | பாதௌ பூஜயாமி. |
| கௌர்யை | ஜானுநீ பூ—மி |
| சிவாயை | ஊரூ பூ—மி |
| ப்பவான்யை | கடிம் பூ—மி |
| ருத்ராண்யை | மத்யம் பூ—மி |
| சர்வாண்யை | பார்ஸ்வௌ பூ—மி |
| ஸர்வமங்களாயை | பாஹுன் பூ—மி |
| அபர்ணாயை | கண்ட்டாம் பூ—மி |
| பார்வத்யை | நேத்ரே பூ—மி |
| துர்காயை | லலாடம் பூ—மி |
| ஹைமவத்யை | கர்ணே பூ—மி |

கர்ணிகாயை — ஶிரஃ பூ—மி
அம்பிகாயை — ஸர்வாண்யங்கானி பூ—மி.

---

## கௌரீ அஷ்டோத்ர சதநாமாவளி,

நாமாவளி ஆரம்பத்தில் ஓம் என்றும், கடைசியில் நமஃ என்றும் சேர்த்துச் சொல்லவும்

ஓம் கௌர்யை நமஃ
கணேசஜனன்யை
கிரிராஜதநூப்பவாயை
குஹாம்பிகாயை
ஜகன்மாத்ரே
கங்காத்தரகுடும்பின்யை
வீரப்பத்ரப்ரஸுவே
விஸ்வவ்யாபின்யை
அஷ்டமூர்த்யாத்மிகாயை
கஷ்டதாரித்ரியசமன்யை ()
சிவாயை
சாம்ப்பவ்யை
சங்கர்யை
பாலாயை
ப்பவான்யை
ப்பத்ரதாயின்யை
மாங்கல்யதாயின்யை
ஸர்வமங்களாயை
மஞ்ஜுப்பாஷிண்யை
மாஹேஸ்வர்யை (20)
மஹிமாயை
மந்த்ராராத்யாயை
மஹாபலாயை
ஹேமாத்ரிஜாயை
ஹைமவத்யை
பார்வத்யை
ஓம் பாபநாசின்யை நமஃ
நாராயணாம்சஜாயை
நித்யாயை
நிரீசாயை (30)
நிர்மலாயை
அம்பிகாயை
ம்ருடான்யை
முனிஸம்ஸேவ்யாயை
மானின்யை
மேனகாத்மஜாயை
குமார்யை
கன்யகாயை
துர்காயை
கலிதோஷநிஷூதின்யை ()
காத்யாயன்யை
க்ருபாபூர்ணாயை
கல்யாண்யை
கமலார்ச்சிதாயை
ஸத்யை
ஸத்வமையை
ஸத்யாயை
ஸௌப்பாக்யதாயை
ஸரஸ்வத்யை
அமலாயை (50)
அமரஸம்ஸேவ்யாயை
அன்னபூர்ணாயை

ஓம் அம்ருதேஸ்வர்யைநமஃ
அக்கிலாகமஸம்ஸ்துதாயை
ஸௌக்கஸச்சித்ஸௌத்தாராயை
பால்யாராத்திதப்பூததாயை
ப்பானுகோடிஸமத்யுதயே
ஹிரண்மையை
பராயை
ஸூக்ஷ்மாயை (60)
ஸீதாம்சுக்ருதசேக்கராயை
ஹரித்ராகுங்குமாராதயா
யை
ஸர்வகாலஸௌமங்கல்யை
ஸர்வப்போகப்ரதாயை
ஸாமசிக்காயை
வேதாந்தலக்ஷணாயை
கர்மப்ரம்ஹமய்யை
காமகலநாயை
காக்ஷிதார்த்தப்ரதாயை
சந்த்ரார்காயிததாடங்கா
யை (70)
சிதம்பரசரீரிண்யை
ஸ்ரீ சக்ரவாஸின்ஸ்ய
தேவ்யை
காமேஸ்வரஸத்யை
கலாயை
மாராராதிப்ரியார்த்தாங்க்
யை
மார்க்கண்டேயவரப்ரதா
யை
புத்ரபௌத்ரவரப்ரதாயை
புண்யாயை
ஓம் புருஷார்த்தப்ரதாயின்
யை நமஃ (80)
ஸத்யத்தர்மரதாயை
ஸர்வஸாக்ஷிண்யை
ஸஶாந்தரூபிண்யை
ஸ்யாமலாயை
பகளாயை
சண்டியை
மாத்ருகாயை
ப்பகமாலின்யை
விரஜாயை
ஸ்வத்தாயை (90)
பிரத்யங்காராம்பிகாயை
ஆர்யாயை
தாக்ஷாயண்யை
தீக்ஷாயை
ஸர்வவஸ்துத்தமோத்தமா
யை
சிவாப்பித்தாயை
ஸ்ரீவித்யாயை
ப்ரணவார்த்தஸ்வரூபிண்யை
ஹ்ரீங்கார்யை
நாதரூபாயை (100)
த்ரிபுராயை
த்ரிபுராம்பிகாயை
திரிகுணாம்பிகாயை
ஸௌந்தர்யை
த்ரிபுரஸௌந்தர்யை
மஹாகௌர்யை
ஷோடசாக்ஷரதேவதாயை
ஸாவித்ரீகௌர்யை (108)
அஷ்டோத்தரசதநாம
பூஜாம் ஸமர்ப்பயாமி, }

## பிறகு த்தூபதீப நைவேத்தியங்கள்.

வனஸ்பத்துயுத் ப்பவைர் திவ்வியைர் நாநாகந்தைஸ் ஸுஸம்யுதம், ஆக்கிரேயஃ ஸ்ஸர்வதேவானும், தூபோயம் ப்ரதிக்ருஹ்யதாம். ஸாவித்திரீ கௌர்யை நமஃ த்தூபமாக்ருபயாமி. ஸாஜ்ஜியமேகார்த்திஸம்யுக்தம், வன்ஹிநாயோஜிதம் ப்ரியே, கிருஹாணமங்களம் தீபம், த்ரைலோக்கிய திமிராபஹம். ஸாவித்திரீ கௌ....நமஃ தீபம் தர்சயாமி தூபதீபாநந்தரம் ஆசமநீயம் ஸ....மி. பிறகு நைவேத்யம். ப்ராணாய நமஃ, அபானாய நமஃ, வ்யானாய நமஃ, உதானாய நமஃ, ஸமானாய நமஃ. ஸாவித்திரீ கௌரீ தேவதாய நமஃ நாநாவித ப்பக்ஷ்ய போஜ்ஜியப்பலான் நிவேதயாமி. பிறகு, கர்ப்பூர தீபாராதனைசெய்யவும். சு. கன்யாப்பிஃ கமநீயகாந்திப்பிரலம், ஸ்வஸ்ரீப்பிராரார்திகாம், பாத்ரைர் மௌக்திக சித்திரபங்திவிலஸத், கர்ப்பூரதீபாவளீஃ தத்தத்தாள ம்ருதங்க கீதஸஹிதம், ந்ருத்யத்ப்பவாம் போருஹம், மந்த்ராராத்தன பூர்வகம், ஸுவிஹிதம், நீராஜனம் கிருஹ்யதாம். ஸாவித்திரீ சௌ....நமஃ கர்ப்பூர நிராஜனம் ஸ—மி, சு. ப்ரதக்ஷிணஸ்லோகம் யானிகாநிசபாபானி ஜன்மாந்தர க்ருதானிச, தானிதானி விநஸ்யந்தி ப்ரதக்ஷிண பதேபதே. ஆத்மப்ரதக்ஷிணம் ஸ....மி. நமஸ்காரம் செய்கிற ஸ்லோகம். நமஃ சிவாயை ருத்ராயை ஸகுண்யை, ஸ்வரூபிணே தேவாயைதனயம் தேவி, மஹாலக்ஷ்மீ நமோஸ்துதே. ஸாவித்திரீ கௌ....நமஃ நமஸ்காரான் ஸ...மி. எஸ்யஸ்ம்ருத்தியாச நமோக்த்யாதபஃ பூஜாகிரியாதிஷு, ந்யூனம் ஸம்பூர்னதாம்யாதி, ஸத்யோவந்தே ஸசங்கரீ, மந்த்ரஹீனம் க்ரியாஹீனம் ப்பக்திஹீனம் மஹேஸ்வரி. ஸாவித்திரீ கௌரீ தேவதா ஸ்ஸுப்ரீதா ஸுப்ரஸன்ன வரதாப்பவது. அர்க்கியம் விடுகிறது. சு. கங்காஜல

ஸமாநீதம், கந்தகர்பூரஸம்யுதம், அர்க்கியம் தாஸ்யாம்ய ஹம் தேவி, காத்யாயனி நமோஸ்துதே. ஸாவித்திரி கௌ ....நமஃ இதமர்க்கியம் ஸ....மி. சு. ஜயதேவி நமஸ்துப்பியம், ஜயசக்திவரப்ரதே, ஜயசங்கரவாமாங்கே, க்ருஹாணார்க் கியம் மயார்பிதம். ஸாவித்திரீ....நமஃ த்விதீயார்க்கியம் ஸ....மி. சு. கங்காஜலஸமாயுக்தம்,ஸுகந்தம்,கந்தஸம்யு தம்; க்ருஹாணார்க்கியம், மயாதத்தம், மங்களம், குருமே சிவே. ஸாவித்திரீ....நமஃ த்ரிதீயார்க்கியம் ஸ....மி. ஸர்வ மங்களமாங்கல்யே,ஸர்வ மங்களதாயினீ,ஸர்வஸம்பத்கரம் சீக்கரம் கிருஹாணார்க்கியம் மயார்பிதம் ஸாவித்திரீ.... நமஃ சதுரர்க்கியம் ஸ....மி. தேஹிகௌரீ ஸதாரோக் யம், புத்திரபௌத்திர பிரவர்த்தனம், அர்க்கியம கிரு ஹாணஹேமே தேவி, மமசௌக்கியவிவ்ருத்தயே. ஸாவித்தி ....நமஃ பஞ்சார்க்கியம் ஸ....மி. அர்க்கியம் கிருஹாணஹே மாதஃ, பக்தாநாமப்பயப்ரதே,ஸௌமங்கல்யம்விவ்ருத்திஞ் சதேஹிமேஹரவல்லபே. ஸாவித்திரீ....நமஃ ஷஷ்டார்க் கியம் ஸ....மி. ஆயுர்தேஹியசோதேஹி, புத்திரபாக்யஞ் சதேஹிமே, கிருஹாணார்க்யம ப்ரதாஸ்யாமி, மாம்ரக்ஷ ஜகதீஸ்வரீ. ஸாவித்திரீ....நமஃ சப்தமார்க்கியம் ஸ....மி. நமஸ்தே வரதேப்பத்ரே, நமஸ்தே ஸுக்கதாயினி, த்ரா ஹிமாம் க்ருபயாதேவி, க்ருஹாணார்க்கியம் நமோஸ்துதே. ஸாவித்திரீ....நமஃ அஷ்டமார்க்கியம் ஸ....மி. நமஸ்தே ஸர்வகல்யாணி, நமஸ்தேப்பாக்கியதாயினி, இதமர்க்கியம் மயாதத்தம், கிருஹாண ஜகதீஸ்வரி. ஸாவித்திரீகௌ....நமஃ நவமார்க்கியம் ஸ....மி. அனேன அர்க்கிய ப்ரதானேன, ஸாவித்ரீ கௌரீ தேவதாஸுப்ரஸன்னா வரதாப்பவது. இப்படிக்கி வ்ரதபூஜை முற்றிற்று.

---

# ஸாவித்திரீகௌரீ விரதகதை.



முன்னொருகாலத்தில், வேதவேதாங்க பாரர்காளான அனேக முனிவர்களால் சூழப்பட்டிருக்கும்போது, தருமநந்தனர், தன்னுடைய ஆஸ்சிரமத்திற்கு வந்ததயாபரராகிய, மார்க்கண்டேய முனீந்திரரைபார்த்து பக்திவணக்கதுடன் சேவித்து அவருக்கு அர்க்கியபாத்யங்கள் கொடுத்து தற்பாஸனத்தில் வீற்றிருக்கச்செய்து கைகூப்பிநின்றுகொண்டு மிக ஆவலுடன் அம்முனிவரின் க்ஷேமங்களைகேட்டார். அப்போது மார்க்கண்டேயர் தன் க்ஷேமசமாசாரம் தெரிவித்து மௌனமாயிருந்தார். உடனே தர்மராஜன் "ஓமுனீந்திரரே!" தங்களுக்கு என்னிடத்தின் கருணையுள்ளவராகில் நான் ஒரு கோறிக்கை கோரியிருக்கிறேன். உலகத்தில் ஸ்திரீகளுக்கு புத்திரபௌத்திரவிருத்தி உண்டாகக்கூடியதும், தன் கணவன் க்ஷேமம் அடையக்கூடியதுமான ஒரு உத்தமமான விரதத்தை எனக்கு தெரிவிக்க வேண்டுமென்று கேழ்க்கவே அம்முனிவர், தருமநந்தரைநோக்கி சொல்லுகிறார். ஓ இராஜனே நல்லகேழ்விக்கேட்டாய்; இது உலகமுழுமையும் மேன்மையும் க்ஷேமமுமுண்டாக்ககூடியது. நீர்கேட்டதில் ஒரு உத்தமமான விரதம் ஒன்றுண்டு. அந்தவிரதத்தை முன் அநேக பதிவ்ரதாஸ்திரீகளால், ஆசரித்து செய்யப்பட்டது. அதற்கு ஸாவித்திரீகௌரீவிரதமென்று பேருண்டு. அந்தவிரதம் ஸ்திரீகளுக்கு, புத்திரபௌத்திரர்களை கொடுக்கத்தக்கது. இதைப்பற்றி ஒரு இதிஹாஸகதை யொன்றுண்டு. முன்னே கிருஷ்ணநதிக்கரையில் மங்களகிரி என்றும் ஒரு பட்டணமுண்டு. அதில்நரசிம்ஹஸ்வாமி கோவிலொன்றுண்டு அப்பட்டணத்

தில் தர்மவர்மன் என்கிற தர்மபரிபாலகனாகிய இராஜன் வசித்துக்கொண்டிருந்தார். அவருக்கு எல்லாசாஸ்திரங்களையும் தெரிந்த புரோகிதர் ஒருவரிருந்தார். அவர் வெகு யாகாதிகள்செய்து பாரியா புத்திராளுடன்கூடி சுகமாய் வாழ்ந்திருந்தார். அந்த சோமயாஜியினுடைய தர்மபத்னியானவள் கௌரீபூஜைசெய்யும் விஷயத்தில் மிகப்ரியமுள்ளவள், ஆகையால், ஸாவித்ரீகௌரீவிரதம் ஆரம்பித்து, ஒன்பதுவருஷம், நோன்புநூற்றுவந்து கடைசியிசி உத்தியாபனம் செய்ய விரும்பினவளாய் வெகு நேமநிஷ்டையாயிருந்தாள். அந்தசமயத்தில் இராஜபத்தினியானவள் அந்த சோமிதேவியினுடைய விரதநியமத்தை பரீக்ஷிக்க விரும்பினவளாய், கோப்ராம்ஹண ஹிம்ஸைசெய்தவர்கள் பாபயோனிகளில் பிறப்பார்களென்று தெரிந்தும், அந்த குரு புத்திராளைக்கொன்று, கௌரீவிரதம் உத்தியாபனம் செய்யும் அந்த சோமிதேவம்மாளிடம், அந்தசிரஸ்சுகளை அனுப்பினாள். கௌரீவிரதம் செய்துக்கொண்டிருந்த அந்தஸ்திரீ தான் பக்தியோடுசெய்துவந்த அந்தவிரத உத்தியாபனம் பூர்த்தியாய்செய்து, கடைசியில் அக்ஷதையும் ஜலமும், அந்தசிரஸ்சுகளின்மேல் தெளிக்கவே அவர்களெல்லோரும் முன்போலவே பிராணனோடு எழுந்து உட்கார்ந்தார்கள். அப்போது இராஜபத்தினி அந்த சங்கதியை கேட்டவளாய் தங்கள் புரோகிதரின் பாரியாளை வரவழைத்து "அம்மா உன்பிள்ளைகளெப்படி பிழைத்தார்கள்? நான் உன் விரத மகிமை அரியும்படி இக்காரியம்செய்து பரீக்ஷித்தேன். பழயபடி உன்புத்திராள் பிழைத்தார்களென்று கேட்டேன். அவர்களை எப்படி பிழைப்புமூட்டினாய் எனக்கு தெரிவிக்கவேண்டுமென்று கேட்டாள். அப்போது அந்த ஸோமயாஜியின்பாரியாள், "ஓ தேவி! ஸாவித்திரீகௌரீ தேவியினுடைய விரதமஹிமையால் என்புத்திராள் பிழைத்

தார்கள். அந்தகௌரீவிரதம் அவ்வளவு மகிமையுள்ள தெனவே, இராஜனுடையபாரியாள் அந்த சோமிதேவம் மாளை கேட்கிறாள் "ஓ தேவீ என்னிடத்தில் தயையுள்ளவளானல், அந்தநோன்பு எப்பொழுது செய்யவேண்டும என? எந்த மாதத்தில் எந்தநாளில் இவ்விரதம் செய்ய வேண்டும்சொல்லுமென்று" கேட்டாள். அந்த ப்ராம்ஹணி ராணிக்கி எல்லாம் அடியிற்கண்ட விதபபடி சொன்னள். "ஓராணி, சூரியன் மகாராசியில் பிரவேசித்த மருநாள் (தைமீ 2௳) விடியற்காலையில், காக்கையின்செத்தம் கேட்பதற்கு முன்னமே நித்திரை எழுந்து, நதிக்கரைக்கு சென்று, அவ்விடத்தில் ஸ்நாநம்செய்து நித்யக்கிருத்தியங்களை முடித்துக்கொண்டு, குயவன் வீட்டுக்குச்சென்று, அவன் ஸாநிகையின் மேலிருந்த மண்ணை எடுத்துவந்து, அந்த மண்ணல் ஸாவித்திரீதேவிப் பிரதிமையைசெய்து அதனிடத்தில் பிராண ப்ரதிஷ்டைசெய்து மௌனவிரதத்தோடு இருந்து, அவ்விரததனை கல்போக்தமாய் செய்து, கதையை சொல்லிகொண்டு, ஒன்பது முடிகள்போட (தோரம்) நோன்புகயற்றை கட்டிக்கொள்ள வேண்டியது. இவ்விதமாய் ஒன்பதுநாள் நோன்பு நூற்றுக் கொண்டு ஒன்பதாவது நாள்மாலையில் உத்தியாபனம் செய்யவேண்டும் இம்மாதிரியாகவே ஒன்பதுவருஷம் நோன்புசெய்து, விரதபூர்த்திசெய்யும் பொருட்டு உத்தியாபனை செய்யவேண்டும. ஒன்பதுஜதை முறங்களை தருவித்து, அதில் ஒவ்வொருஜதையிலும் ஒன்பது வெற்றிலைபாக்கு, மஞ்சள்தோகள் பழம்முதலியன முறததில்வைத்து, சுமங்கலிகளுக்கு மஞ்சள் குங்குமம் சந்தனம் கொடுத்து அந்த மொறஜதை வாயனம் கொடுத்து, அவர்களைவலம்சுத்தி பிரதக்ஷிண நமஸ்காரஞ்செய்து, அவர்களை தங்கள் வீடுகளுக்கு அனுப்பி தான் சாப்பிடவேண்டியது. இப்படி பிடித்த

நோன்பு பூர்த்திசெய்தவர்களுக்கு, புத்திரபௌத்திர ஸம்பத்து உண்டாகுமென்று சொல்லவே, இராஜபத்தினியானவள் அந்த நோன்புசெய்யவேண்டிய காலம் எதிர்பார்த்திருந்து தன்பர்த்தாவின் உத்திரவுபெற்று ஸாவித்திரீவிரதம் செய்து, அந்தவிரத பிரப்பாவத்தால், புத்திரபௌத்திரஸம்பத்துண்டாய், சகலமான எல்லாபோகபாக்கியங்க ளனுபவித்து கௌரீலோகத்தை அடைந்தாள். இவ்விரதம் கேட்டவர்களுக்கும், கேழ்ப்பிக்கிறவர்களுக்கும் சிவஸாயுஜ்ஜியம் உண்டாகும் என்று, மார்க்கண்டேயமுனிவர் சொல்லவே தர்மராஜன்கேட்டு இந்தவிரதம்தங்கள் ஸ்திரீகள் கையிலும் செய்வித்தார். இப்படிக்கி ஸ்காந்த புராணத்தில், கௌரீ கண்டத்தில், மார்க்கண்டேய யுதிஷ்டிரஸம் வாதத்தில் சொன்ன ஸாவித்ரீ கௌரீவிரதகதை, ஸம்பூர்த்தியாயிற்று.

---

உ

ஸ்ரீ ஸாவித்ரீ கௌர்யை நம:

# ஸாவித்ரீ விரததின மஹிமை.

ஆனிமாஸம் சுக்லபக்ஷ பௌர்ணமி அன்றையதினம், இவ்விரத மனுஷ்டிக்கவேண்டும். ப்ரம்ஹ பத்னியாகிய ஸாவித்ரீ தேவியைக்குறித்து செய்யும் விரதம். இநத விரதானுஷ்டானம் செய்யும ஸ்திரீகள் விசேஷ மாங்கல்ய வ்ருத்தியும், புத்ரபௌத்ர ஸம்பத்து முண்டாகி உலகில் நீடூடிகாலம் சுகமாய் வாழ்ந்திருப்பார்கள்.

இதற்கொரு இதிஹாஸ கதையுண்டு.

# அஸ்வபதி அரசன் கதை.

முன்னே. அஸ்வபதி என்னும ஒரு அரசன் இருந்தார் அவர் மிகஸத்ய வந்தர் குணசாலி, ஜிதேந்திரியர் இவர் தர்மமாய் ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டிருந்தார். இவருக்கு புத்திரரில்லை. அப்போது தனது குரு உத்திரவின்படி, அவ்வரசன், தனது பத்நீஸமேதனாய் விரதமனுஷ்டித்து நேமத்துடன் ஹோமம் செய்து வந்தார். அவர்செய்த ஹோமமந்திரம் ப்ரம்ஹபத்னியான ஸாவித்ரீ தேவியை குறித்த தானபடியால், அவள் ஓடிவந்து ஹோம குண்டத்தரிகில் நின்றுசகாண்டு, "ஓ ராஜனே ! நீர் இனி ஹோமம் நிருத்தும், நான், சந்தோஷித்தேன், உமக்கொரு பெண்தான் உண்டாகுமென்று, சொல்லி மறைந்துவிட்டாள். அன்றுமுதல் அவ்வரசன் மனைவி, கர்ப்பவதியாகி, பத்தாவது மாதத்தில் ஓர் அழகியபெண்ணைப் பெற்றாள். அவர்கள் அக்குழந்தைக்கு ஸாவித்ரீ என்றே நாமகரணம் செய்தார்கள். அக்குழந்தை காலக்ரமமாய் வளர்நதுவந்து, யௌவனமடைந்து, மிகபுத்தியும் அழகுடையவளாய், விளங்கினாள். அவள் வயதைக்கண்ட, அவ்வரசன், தன் பெண்ணை கல்யாணம் செய்துக்கொள் என்று உத்திரவளித்தார் அப்போது அந்தபெண் அநேகவரர்களை தானே தேடிப்பார்த்து, முடிவில் ஸ்த்யவான் என்னும், ஒரு இராஜகுமாரனை வரித்து மணம்புரிவதாய் அவருக்கு தெரிவித்துவிட்டு தன்னூர்சேர்ந்து சந்தோஷமடைந்திருந்தாள். இத்தருணத்தில் நாரதமஹர்ஷி அப்பெண்மணியினிடம் வந்து சேர்ந்தார். அவள் ! அவருக்கு தகுந்த உபசரணை செய்தாள். அம்மரியாதைகள் பெற்றுக்கொண்ட நாரதர். "ஓ ஸாவித்ரீயே! நி இப்போது எந்த இராஜகுமாரனை மணந்துகொள்ளவேண்டி பெருமையாய் எண்ணி இருக்கிறாயோ

அவனுக்கு அல்ப ஆயுஸ் என்று ஏற்பட்டிருக்கிறதே, இதற்கு நீ என்னசெய்வாய், அவனை விட்டுவிட்டு மற்றொரு இராஜகுமாரனை வரிப்பாய்'' என்று சொன்னார். நாரதர் இவ்விதம் சொல்வதை அவள் கேட்டு "ஓ மஹரிஷியே ! நான் இவ்விராஜ குமாரனையே மனதில் கணவனாக நிச்சயித்து விட்டேன. ஆகையால்வேறொருவனையும் வரியேன். அவன் எப்படி இருந்தாலும் சரி,'' என்று உறுதி மொழி சொல்லிவிட்டாள். அவள் குறித்ததினமே, ஸுமுஹூர்த்த தினமாகையால் அவ்வரசகுமாரனையே மணம்புரிந்தாள். பிறகு இவர்கள் சிலநாள் வாழ்துவரும் நாளில் அவனுக்கு விதிப்படி வயது குறைந்ததைக்கண்டு, எமதர்மராஜனும் தன்படாளும அவனைக்கொண்டு போக வந்தார்கள். அன்றையதினம் இந்த ஸாவித்ரீ விரத தினமாகையால் அந்த ஸாவித்ரீ என்பவள் அந்த விரதத்தை செய்ய ஆரம்பித்தாள். மிகப்பக்தியோடுமுறைப்படி அவள் விரதம் செய்வதைக்கண்டு எமன்மிகவும் சந்தோஷித்து "ஓ ! ஸாவித்ரியே உன் பாதிவ்ரத்யநியமத்தையும் நீசெய்யும் ஸாவித்ரீ விரதமகிமையையும் நான் கண்டு சந்தோஷப்பட்டேன், உனக்கிப்போது மாங்கல்யஹானியேர்ப்படுவதாயிருந்தாலும் நான் மகிழ்ந்து உன்பர்தாவை விட்டுவிட்டேன். இன்னும் வெகுநாள் நீங்கள் வாழ்ந்திருங்கள்'' என்று ஆசீர்வதித்து தன் உலகமடைந்தான். அதுமுதல் இந்த ஸாவித்ரீ விரதமானது ஸ்திரீகளுக்கு மாங்கல்யத்தை விசேஷமாய் கொடுப்பதென்று ப்ரசித்தியாயிற்று. ஆகையால் எல்லா ஸ்திரீகளும், அனுஷ்டிக்கவேண்டியது மிக முக்கியம் என்று தெரியவருகிறது. அதுமுதல் எல்லா ஸ்திரீகளும் செய்ய ஆரம்பித்தார்கள்.

இப்புண்ய சரித்திரம் முற்றிற்று.

---

PRINTED AT THE SRI BHARATHI PRESS CHOOLAI MADRAS.